# ஞான சிகரம்

## (நம்மாழ்வார்)

ஆசிரியர்:
பி. ஸ்ரீ.








கலைமகள் காரியாலயம்
சென்னை-4

# முன்னுரை

ஸ்ரீ பி. ஸ்ரீ.யின் ஆழ்வார்கள் வரலாற்று வரிசையில், எட்டாவது புத்தகமாக வெளிவருகிறது 'ஞான சிகரம்.' இலக்கியச் சுவையையும் பக்திச்சுவையையும் ஒன்றுகூட்டித் தமிழில் ஆசிரியர் எழுதியுள்ள நூல்கள் பல. இனிமையான நடையால் படிப்பவரை மகிழ்வித்துத் தெவிட்டாமல் விஷயங்களைக் கூற வல்லவர் ஆசிரியர்.

மற்றைய ஆழ்வார்களைப்போல உலக உணர்ச்சி நடையாடாமல் நின்று, இயற்கையிலே ஞான பக்திகளை உடையவராகி, அந்நிலை என்றும் மாருதிருந்ததால் ஆழ்வார்களில் தலைமை பெற்ருர் நம்மாழ்வார் என்பர்,

' தன் சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்'
' நாமுதல் வந்து புகுந்து நல்லின்கவி
தூமுதல் பத்தர்க்குத் தான்தன்னைச் சொன்ன'

என்கிறபடியே எம்பெருமான் தன்னையே தான் பாடிக்கொண்டான் என்பர் ஆழ்வார். திருக்குறுங்குடி நம்பியே நம்மாழ்வாராக அவதாரம் செய்தார் என்ற மரபு உண்டு. எனவே, பகவானுக்காகப் பகவாளுல் பாடப்பெற்ற பகவத் பிரபந்தமான திருவாய்மொழியை ஞானவெள்ளப் பெருக்கு என்று கூறுவதில் தடையில்லை. மிக்க தமிழ் நாலடியால் வேதமொரு நான்கினையும் ஓதி யுரைத்தவர் நம்மாழ்வார்.

நம்மாழ்வாருடைய பிரபந்தங்களைப் படித்து வேதங்களின் பொருளை உணர்ந்துகொண்டதாகக் கூறுகிருர் வேதாந்த தேசிகர். ஸ்ரீ ராமாநுஜருக்கு இவ்வாழ்வார் பாசுரங்கள் வழிகாட்டியதோடு மற்றவர்களையும் திருத்துவதற்கு உபயோகமாக இருந்தன. 'தேவு மற்றறியேன் குருகூர் நம்பி, பாவின் இன்னிசை பாடித் திரிவனே' என்ருர் மதுரகவி யாழ்வார். தெய்வங்களுள் சிறந்த திருமாலுக்குத் தக்க தெய்வக் கவிகுன்

பாவில் சிறந்த திருவாய்மொழிப் பண்டிதனே என்றனர் ஆன்ருேர். வேதங்களில் எளிதில் காண முடியாமல் மறைந்து கிடந்த தத்துவப் பொருள்களை யெல்லாம் தெளிவுபட விளக்கி வேதங்களின் சிறப்பைப் பிரகாசிக்கச் செய்கிறது திருவாய்மொழி என்பது கம்பருள்ளம்.

பிறர் துன்பங்களைத் தம் நெஞ்சிலே அநுபவித்து அவர்களுக்காக மன்ருடும் பண்பு இல்வாழ்வாருக்கு உள்ள தனி உரிமை. இவர் பிரபந்தங்களை ஓதியதன் பயனுகவே ஸ்ரீ ராமாநுஜர் பிறருக்காக மோட்ச ஸாம்ராச்சியத்தையும் துறக்கும் ஆத்ம சக்தியை வளர்த்துக்கொண்டார் எனலாம்.

நம்மாழ்வாருடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்களை அவர் பாடல்களின் மூலம் வெகு அழகாக விளக்கியிருக்கிருர் ஆசிரியர். அவருக்குள்ள தனிச்சிறப்பு இவற்ருல் விளங்கும். ஆராய்ச்சித் திறனுடன் பட்சபாதமின்றி உண்மைகளை ஆசிரியர் ஆங்காங்கே தக்க ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டி யிருக்கிருர். பக்தர்கள், தமிழர்கள் அனைவரும் படித்துப் பயனெய்தும் முறையில் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது நூல்.

'நம்மாழ்வார் தாலாட்டு' என்ற நூலிலிருந்து செய்யுள்களை இடையிடைப் பெய்து ஆழ்வாரின் வரலாற்றைக் கூறிச் செல்லும் முறை போற்றத் தக்கது. பாடல்களுக்குப் பழைய வியாக்கியானங்களைச் சிக்கறுத்துக் கூறுவதில் நூலாசிரியர் ஒப்பற்றவராய் விளங்குகிருர். சமயத்துக்கும் தமிழுக்கும் ஸ்ரீ பி.ஸ்ரீ. ஆற்றும் பணிக்குத் தமிழர் என்றும் கடப்பாடுடையவராவர். இவரைத் தமிழருக்கு அறிவிப்பது கொல்லர் தெருவில் ஊசி விற்ற கதை யாகும்.

சென்னை, **ம. ராதாகிருஷ்ணப் பிள்ளை**
*16-2-59*

# பொருள் அடக்கம்




# ஞான வெள்ளம்

## 1. நம்பிக்கையின் அற்புதம்

கூனன் குருடன் முடவன் ஊமை ஆகிய நால்வரும் சேர்ந்து தலயாத்திரை செய்துகொண் டிருந்தார்கள். வழியில் எத்தனையோ துன்பங்களைப் பகிர்ந்துகொண்டே போய்க் கடைசியில் திருமலையை (திருப்பதியை) அடைந்தார்கள்.

### மாறிப் பிறந்தார்கள்

தென்குமரிக்கு அருகிலுள்ள ஒரு கிராமத்திலிருந்து புறப்பட்டவர்கள் தமிழகத்தின் வட எல்லைக்கு வந்து சேர்ந்து, வசதியில்லாத அந்த நாளில் மலையிலும் ஏறுவதென்றால், அது ஒரு மறு பிறவி எடுப்பதுபோல் இவர்களுக்குத் தோன்றியிருக்கக் கூடுமல்லவா? உண்மையாகவே ஒரு மறு பிறவி கிடைத்துவிட்டதாம், மலை ஏறியதும். ஆம்; இவர்கள் எப்படியோ மாறிப் பிறந்துவிட்டார்கள்!

அப்படி இவர்கள் பெற்றுக்கொண்ட வரப்பிரசாதத்தை இந்தப் பக்தர்கள் மாறிப்பிறந்த அந்த விந்தையை ஒரு கவிராயர் கண்டு காட்டுகிறார் :

கூன்கொண்டு வந்தவன் தான்நிமிர்ந்
தோடக், குருடன்கொம்பில்
தேன்கண்டு காட்ட, முடவன்அத்
தேனை எடுக்க,அயல்
தான்நின்ற ஊமை எனக்கென்று
கேட்கத் தருவன்வரம்
வான்நின்ற சோலை வடமலை
மேல்நின்ற மாயவனே!

என்ன மாயம்? கூனன் நிமிர்ந்தான்; ஓடவும் தொடங்குகிறான். இவ்வளவு குதூகலத்திற்கும் காரணம், தான் கொண்டு

வந்த கூனல் காணமற் போனது மட்டுமன்று; 'அதோ தேன்!' என்று ஒருவன் சுட்டிக்காட்டியதும் வாய் ஊறியதுதான். அப்படிக் காட்டியவன் யார், தெரியுமா? தோழனுன குருடன்தான்.

நிமிர்ந்தோடிய கூனன், குருடன் நின்றுகொண் டிருந்த இடத்திற்குப் போவதற்குள், இவன் சுட்டிக்காட்டிய மரக்கிளையில் தொத்திவிட்டான் வேருெருவன். அவன் யார்?

முடவன்தான், கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டு ஏறித் தேனெடுக்கிருனும். 'இது என்ன!' என்று ஆச்சரியப்படும்போதே, 'தேன் எனக்கும் வேண்டும்' என்று அழுத்தம் திருத்தமாகக் கேட்கிருன், பக்கத்தில் நின்றுகொண் டிருக்கும் ஊமை!

இப்படி யெல்லாம் வரம் தருகிருன், திருப்பதி மலையில் கோயில் கொண்டிருக்கும், 'மாயவன்' என்று அந்த ஆச்சரிய சக்திகளைச் சாதுரியமாகச் சிறப்பிக்கும் ஒரு கற்பனை இது:

## நம்மாழ்வாரும் திருப்பதி மலையும்

இந்தக் கவிஞருக்கு முன்னமே, நம்பிக்கையின் அற்புத சக்தியை நம்மாழ்வாரும் திருவேங்கட மலையைக் குறித்து வெளியிட்டிருக்கிருர்:

குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்,
அன்று ஞாலம் அளந்த பிரான்பரன்
சென்று சேர்திரு வேங்கட மாமலை
ஒன்று மேதொழ, நம்வினை ஓயுமே!

என்ற பாசுரத்திலே, ஆழ்வாருடைய—அபார நம்பிக்கை நிறைந்த—பக்தியுள்ளத்தை ஒருவாறு காணலாம்.

கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்ததும், திசைகளையெல்லாம் அசுர இருள்தீரத் திருவடிகளால் அளந்ததும் இறைவனுடைய பேராற்றலைக் காட்டுவதுபோல், பேரருளையும் புலப்படுத்துகின்றன. 'அந்த இறைவனே கோயில் கொண்டிருக்கிருன் வேங்கட மலையில்' என்று நம்பித்தொழுவது சர்வ சக்தியின் அந்த அருளைப் பெறுவதற்குச் சுலபமான வழியென்கிருர் நம்மாழ்வார்.

திருமலையில் கோயில் கொண்டிருக்கும் பகவான், பாவங்களைப் போக்குவதோடு பிறப்பையும் இறப்பையும் போக்கி இந்தப் பிறவி

யிலே நேரும் பிணிகளையும் கிழத்தனத்தையும்கூடப் போக்கி விடுகிறானும்.

ஓயும் மூப்புப் பிறப்(பு)இறப் புப்பிணி
வீயு மாறுசெய் வான்திரு வேங்கடத்(து)
ஆயன் நாள்மல ராம்அடித் தாமரை
வாயுள் ளும்மனத் துள்ளும்வைப் பார்கட்கே!

என்கிறார் நம்மாழ்வார்.

## நம்பிக்கையும் ஞானபக்தியும்

கடவுளைத் தோத்திரம் செய்வதாலும் தியானம் செய்வதாலும் (வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பதால்) எல்லாவித நன்மைகளையும் அடையலாம் என்பது ஆழ்வார் கருத்து. முக்கியமாக வேண்டியது பக்தி விசுவாசந்தான்–குருட்டு நம்பிக்கை யன்று; உண்மையான பக்தியோடு கூடிய நம்பிக்கை. இத்தகைய நம்பிக்கை, உள்ளத்தில் புதைந்து கிடக்கும் அபார சக்திகளைத் தூண்டி, தீராத நோய்களையும் தீர்த்துவிடும் என்பதைத் தற்கால உளநூலாரும் ஒப்புக்கொள்கிறார்கள்; மேலும் மேலும் ஆராய்ச்சி செய்யவேண்டிய விஷயம் என்கிறார்கள்.

இந்த உண்மையைத் தெய்வ சக்தியுடன் இசைத்து நம்மாழ்வார்,

தொழுமின்; அவனைத் தொழுதால்,
வழிநின்ற வல்வினை மாள்வித்(து)
அழிவின்றி ஆக்கம் தருமே!

என்று, நம்மை நோக்கி உபதேசிக்கிறார்.

பணி,நெஞ்சே! நாளும் பரம பரம்பரனை;
பிணிஒன்றும் சாரா

என்று தமது நெஞ்சை நோக்கியும் உபதேசித்துக்கொள்கிறார்.

ஆனால் தொழுகிற நெஞ்சு, தூய நெஞ்சா யிருக்கவேண்டுமென்று வற்புறுத்துகிறார். அப்போதுதான் நம்பிக்கை உண்மையாகும்; நன்னம்பிக்கை யாகும்.

நன்னெஞ்சே! நம்பெருமான்
நமக்(கு)அருள்தான் செய்வானே!

என்பது இவர் திருவாக்கு.

## அனுபவ ஞானம்

ஆழ்வார், வெறும் 'சாஸ்திரம்' பேசவில்லை; அநுபவத்தை ஒட்டியே இப்படிப் பேசுகிறாராம்.

கண்டேன் கமல
மலர்ப்பாதம் ; காண்டலுமே
விண்டே ஒழிந்த
வினைஆ யினஎல்லாம் !

என்றும், 'பிடித்தேன்; பிறவி கெடுத்தேன்; பிணிசாரேன் !' என்றும் இவர் பேசுவது ஆத்ம சரித்திரம். இறைவனது சந்நிதியிலே பாடி வைத்தது; பிறர் மதிக்க வேண்டுமேயென்று விளம்பரமாகச் சொல்லி வைத்தது அன்று.

இந்தச் சொந்த அநுபவம், 'வினையேன் வினைதீர் மருந்து ஆனாய்' என்று இவர் கடவுளை அழைக்கும்போதும் வெளிப்படுகிறது. இதே மருந்தை இவரைப்போல் வேறு சிலரும் உபயோகித்துப் பார்த்தார்களாம்; உபயோகித்தவர்க ளெல்லாம் குணம் அடைந்திருக்கிறார்களாம்,

அறிந்தனர் எல்லாம்
அரியை வணங்கி,
அரிந்தனர் நோய்கள்
அறுக்கும் மருந்தே !

என்று அவர்களுடைய அநுபவத்தையும் எடுத்துக் காட்டுகிறார் இவர்.

## கடவுளுண்மை (தீவினைக்கு நஞ்சு)

கடவுள் தாயும் தந்தையு மாகி, அறியாதன வெல்லாம் அறிவித்து உபகரிக்கிறான் என்றும், அந்த உபகாரங்களை அளவிட்டு அறிய முடியாதென்றும் சொல்லுகிறார். அவன் அருளால் தமக்கு ஒரு குறையும் இல்லை யென்றும் தெரிவிக்கிறார்.

அவனுடைய குணங்களை நினைத்துக்கொண் டிருக்கும் நெஞ்சில் குறைகளுக்கு இடம் ஏது? 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே!' இந்தப் பெருஞ்செல்வம் உள்ளவர்களுக்குச் சேராதன உளவோ?

இங்கே நெஞ்சுக் கூனலுக்கோ, வேறு குறைகளுக்கோ இட மில்லை. கூனியைக் கம்பன், 'உள்ளமும் கோடிய (கூனிப் போயிருக் கும்) கொடியாள்' என்று குறிப்பிடுகிருன். முதுகுக் கூனலைக் காட்டிலும் நெஞ்சுக் கூனல் கொடியது. இந்தக் கூனல்நோயைக் கடவுள்மீது நம்பிக்கை யுள்ளவர்கள் அற்புதமாகப் போக்கிக் கொள்ளலாம் என்பது நம்மாழ்வார் கருத்து. இறைவனது நற்குணக் கடல் ஆடும்போது உள்ளம் குணப்படுகிறது ; உடம்பும் குணப்படுகிறது.

கடவுளை உண்மையாகக் காண விரும்பினுல் காணலாம் என்பர் ஆழ்வார். நெஞ்சு என்னும் உட்கண்ணைத் திறந்து பார்க்க வேண் டும். இந்தக் கண் இல்லாதவர், இரண்டு கண்களும் துலாம்பர மாகப் பெற்றிருந்தாலுங்கூடக் குருடரே யாவர். அன்புக் கண் ணுள்ள அடியவர்களுக்கே ஆண்டவன் எளியவன். பக்தி, அகக் குருடு என்ற நோயை அற்புதமாகப் போக்கிவிடும்.

ஊமையைப் பேசுவிக்கும் அற்புதத்திற்கும் ஆழ்வார் வாக் கிலே உட்பொருள் காணலாம். இறைவனே மாயக் கவியாக நெஞ்சில் எழுந்தருளித் தம்மை உலகம் உய்யுமாறு பேசுவித்தான் என்று இவர் கூறுகிருர். உலகம் வாழப் பேசுவதே பேச்சு ; உலகம் உய்யப் பாடுவதே பாட்டு. இத்தகைய பாசுரங்களைப் பாடியவர் நம்மாழ்வார்.

நன்னடை பயிலாதவனே-தீவினையாளனே-நடக்க முடியாத வனைக் காட்டிலும், 'முடவன்' ஆவான். இந்த முடத்தன்மையைப் போக்கிக்கொள்வதற்கும் பக்தி இன்றியமையாதது என்பது ஆழ் வார் கொள்கை. 'தீவினைகட்கு அரு நஞ்சு' என்று இறைவனை இவர் குறிப்பிடுவதைக் காணலாம்.

## எது அற்புதம்?

மற்றப்படி உடற் கூனலையும், கண் குருடாயிருக்கும் நிலையை யும், கால் முடமாயிருக்கும் தன்மையையும், வாய் பேசாத ஊமை நிலையையும் போக்குவதுதான் அற்புதம்; இத்தகைய அற்புதமே சமய வளர்ச்சிக்கும் நம்பிக்கை வளர்ச்சிக்கும் இன்றியமையாதது என்ற கொள்கையை இந்த ஆழ்வார் ஆதரிப்பதாகத் தெரிய வில்லை.

அற்புதத்தால் உடற்கூனல் போய்விட்டதும், அந்த ஆரோக்கிய நிலையில் அவன் கெட்ட காரியங்களைச் செய்யமாட்டான் என்று எப்படி நிச்சயிக்க முடியும்? உளக் கூனல் நிமிரும்போதுதானே நேர்மையான செயல்கள் செய்ய இயலும்?

கண் பெற்ற குருடன் அந்தக் கண்களைச் சரியானபடியே பயன் படுத்திக் கொள்வான் என்பதைத்தான் எப்படி நிச்சயிப்பது? முடவன் கால்பெற்று நடந்ததும், 'நிமிர்ந்த நன்னடை' வாய்ந்தவனாக நடந்துகொள்வதுதான் உறுதியா? ஊமை வரம்பெற்றுப் பேச்சுரிமை பெற்றதும் நாநலத்துடன், நாவீறுடன் உண்மையும் உறுதியும் பொருந்திய வார்த்தைகளையே பேசுவான் என்றுதான் யாராவது உறுதி கூற முடியுமா?

எனவே, ஸ்தூலமான அற்புதங்களைக் காட்டிலும் சூட்சுமமான அற்புதங்களை உள்ளத்திலே விளைத்து மக்களுக்கு நல்வழி காட்டுவதுதான் மத சம்பிரதாயங்களின் பெருநோக்காக இருக்க வேண்டும். 'வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேன் அல்லேன்' என்று தம்மை அறிமுகப்படுத்தும் நம்மாழ்வார் வாக்கிலே, மானிடப் பண்பை உயர்த்துகிற உண்மையான அற்புதம் புரியும் அருமையான உபதேசங்களையே காண்கிறோம்.

## நம்மாழ்வார் செய்த அற்புதம்

நம்மாழ்வார் காலத்திலும் அதன் முன்னரும் நமது நாட்டிலே பல தரிசனங்கள் அல்லது தத்துவங்கள் காணப்பட்டன. நாஸ்திக மனப்பான்மையுடன், 'கண்டதே, காட்சி; கொண்டதே கோலம்' என்பது போன்ற பிரசாரங்களும் நடைபெற்றன. கடவுளுண்மையை வற்புறுத்தாமல் ஒழுக்க நெறியை மட்டும் வற்புறுத்திய கொள்கைகளும் உண்டு. அற்புதங்களைப் பிரமாதப்படுத்திய சித்த மார்க்கங்களும் உண்டு. அத்தகைய பல்வேறு சமயப் பூசல்களுக் கிடையே சமரசம் விளைவித்துக் கடவுள்நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட சன்மார்க்க வாழ்விற்கும் தியாகப் பெருவாழ்விற்கும் ஒரு ராஜபாட்டை வழியை நம்மாழ்வாரின் பாசுரங்கள் செப்பனிட்டுக் காட்டுகின்றன எனலாம்.

இறைவன் அருளால் விழித்துக்கொண்ட அகக்கண், அற்புத உண்மைகளைக் கண்டுகொண்டது. 'யானும் தன்னைத்தான் பாடி'

அந்த உண்மைகளை இறைவனே வெளியிடுவதாக இவர் உறுதி கூறுகிறார்; எனவே, இந்த வாக்கை **வேதம்** என்று சொல்லுகிறார்கள்?

தொண்டு செய்து உயர்ந்த இவரது தூய நன்னடையைப் பாசுரங்களில் காண்கிறோம். இந்த வழியில் நடக்கமுடியாத முடவர்களுக்குக் கால் கொடுத்து உதவும் அற்புதத்தையும், மனக்கூனலைப் போக்கிச் செம்மைப் பெருநெறி பிடித்து ஒழுகும் ஆற்றலை ஆவலுடையவர்களுக் கெல்லாம் உதவக்கூடிய அற்புதத்தையும் இப் பாசுரங்கள் இன்னும் செய்துவருகின்றன என்பதில் ஐயமில்லை.

நம்மாழ்வாரைச் 'சித்து அசித்தொடு ஈசன் என்று செப்புகின்ற மூவகைத் தத்துவத்தின் முடிவுகண்ட சதுமறைப் புரோகிதன்' என்று குறிப்பிடுகிறார் பாரதம் பாடிய வில்லிபுத்தூரார். ஸ்ரீவைஷ்ணவம் என்ற விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று தத்துவங்கள் ஒப்புக்கொள்ளப்படுகின்றன.

சித்து என்பது அறிவுடைப் பொருள்; இதை ஜீவாத்மா என்றும் சொல்லுகிறார்கள். அசித்து என்பது அறிவில்லாத பொருள்; இதை அசேதனப் பொருள் என்றும், உடற்பொருள் என்றும் கூறுவ துண்டு. இந்த இருவகைப் பொருள்களையும் ஏவி நடத்துகிறவன் ஈசுவரன்.

ஈசுவரனைப் 'பரமாத்மா' என்றும் சொல்லுகிறோம். 'அகத்து உறையும் அழகன்' என்று பரமாத்மாவைக் காட்டுகிறார் ஆழ்வார்.

இம் மூவகைப் பொருள்களுள், ஜீவாத்மா என்ற அறிவுடைப் பொருளும் அறிவில்லாத இயற்கைப் பொருளும் உள்ளுறையும் அழகனுடைய உடம்பாக அமைந்துள்ளன. உயிர், உடம்பிற்குள் இருந்து உடம்பைத் தாங்கி இயங்கச் செய்கிற தல்லவா? அப்படியே பரமாத்மாவான அழகனும் இயற்கைக்கும் ஜீவாத்மாவுக்கும் உள் நின்று இவற்றை நிலையாகத் தாங்கி நடத்துகிறான் என்ற விசிஷ்டாத்வைதக் கொள்கையை நம்மாழ்வார் சிறப்பாக, தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

இயற்கையும் ஜீவாத்மாவும் இறைவனுக்கு உடம்பு என்ற இந்தத் தனிப்பெருங் கொள்கையை வெளியிடும் ஆழ்வார் பாசுரம்:

திடவிசும்(பு), எரி,வளி
நீர்,நிலம் இவைமிசைப்

படர்பொருள் முழுவதும்
ஆய்,அவை அவைதொறும்,
உடல்மிசை உயிர்எனக்
கரந்(து)எங்கும் பரந்துளன்;
சுடர்மிகு சுருதியுள்
இவைஉண்ட சுரனே.

[திடவிசும்பு - திடமான ஆகாயம். எரி - நெருப்பு. வளி - காற்று. மிசை - மேல். கரந்து - ஒளிந்து; மறைந்து. பரந் துளன் - பரவியிருக்கிறான். சுடர்மிகு - ஒளிமிகுந்த. சுருதி - வேதம். சுரன் - தேவன்.]

இப்படி உலகத்தையும் ஜீவாத்மாவையும் உடம்பாகக் கொண் டிருக்கும் இறைவன் ஒருவனே உளன் என்பர் நம்மாழ்வார். இந்த இறைவனை,

யாவையும் எவரும் தானாய்
அவரவர் சமயம் தோறும்
தோய்(வு)இலன்; புலன்ஐந் துக்கும்
சொலப்படான்; உணர்வின் மூர்த்தி

[தோய்வு இலன் - படிதல் இல்லாதவன். சொலப்படான் - சொல்லப்படாதவன். உணர்வின் மூர்த்தி - ஞானமூர்த்தி.]

என்று குறிப்பிடுகிறார்.

ஒரு சமயத்திற்குள்ளும் ஒரு சித்தாந்தத்திற்குள்ளும் இறைவனை அடக்கிப் பேச முடியாது என்பது இவர் சித்தாந்தம்.

அவரவர் தமதமது
அறி(வு)அறி வகைவகை
அவரவர் இறையவர்
எனஅடி அடைவர்கள்

[அறிவு அறி வகைவகை - அறிவு அறிந்த வகைகளில்.]

என்று கூறித் தாமும், 'முனியே! நான்முகனே! முக்கண் அப்பா!' என்றெல்லாம் தம் இஷ்ட தெய்வத்தை அழைக்கிறார்.

பரம பக்தியால் கனிந்து திருமாலைத் தாம் அடைந்ததைக் குறிப்பிடும் நிலையிலும் இந்த ஆழ்வாரின் சமரச உணர்ச்சியைக் காண்கிறோம். திருவாய்மொழியின் இந்த இறுதிப் பதிகத்தின் பல ச்ருதிப் பாட்டிலும், 'அரியை அயனை அரனை அலற்றி

அவாஅற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்' என்று இந்த ஆழ்வார் குறிக்கப்படுவதைக் காணலாம்.

இவரது சமரசப் பேருள்ளம் நாஸ்திகரையும் விலக்கி விடுவதாகத் தோன்றவில்லை:

உளன்எனில் உளன்,அவன்
 உருவம்இவ் உருவுகள்;
உளன்அலன் எனில்,அவன்
 அருவம்இவ் அருவுகள்;
உளன்என, இலன்என,
 இவைகுணம் உடைமையில்,
உளன்இரு தகைமையொ(டு)
 ஒழி(வு)இலன் பரந்தே!

[அருவம், அருவு - உருவம் இன்மை. இரு தகைமையொடு - இரண்டு தன்மைகளுடன். ஒழிவு இலன் பரந்தே - நீங்குதல் இல்லாமல் பரவியிருக்கிறான்.]

'இறைவன் உண்டு' என்று சொல்வதுபோல் 'இறைவன் இல்லை' யென்று சொல்வதும் அவனுடைய குணத்திற்குப் பொருந்துவதுதான் என்று கூறி, 'உண்டு' 'இல்லை' என்ற ஆஸ்திக நாஸ்திக முரண்பாடுகளையும் முரண்டுகளையும்கூடச் சமரசப்படுத்தி வைப்பது போல் அமைந்திருக்கிறது நம்மாழ்வார் வாக்கு. 'உண்டு' என்று சொல்லுகிறவன்தான் இறைவன் குணத்தை அப்படியே கண்டு விட்டானா? 'இல்லை' என்று சொல்வோரும் பரம்பொருளின் ஒரு நிலையை வருணிப்போரே யாவர் என்பது குறிப்பு.

நம்மாழ்வாருக்கு இஷ்டதெய்வம் திருமால். குழந்தையின் தாய், குழந்தைக்கு அண்மையிலேயே இருக்க விரும்புகிறாள்; தாயாகிய பரமாத்மாவும், ஜீவாத்மாவையும் இயற்கைப் பொருள்களையும் உடம்பாகக் கொண்டு எங்கும் பரந்து மறைந்து காணப்படுகிறது. இதே பரம்பொருளைத் தமது திருநகரிலும், வேறு திருப்பதிகளிலும் மிக எளியனாய், அடியவர்களை அணுகி நிற்கும் நிலையில் கண்டு காட்டுகிறார் நம்மாழ்வார்.

விஷ்ணு என்றால் எங்கும் பரவியிருக்கும் பரம்பொருள் என்றுதானே பொருள். எங்கும் அந்தர்யாமியாக இருக்கும் திருமாலின் தொடர்பு பெறாத உலகப்பகுதியே இருக்கமுடியாதல்லவா? இந்த

விஷ்ணு சம்பந்த ஞானமுள்ளவரே உண்மையான வைஷ்ணவர். இத்தகைய பரந்த சிறந்த, ஸ்ரீவைஷ்ணவத்தை நம்மாழ்வார் பாசுரங்களில் விசேஷமாகக் காண்கிறோம்.

எங்கும் நிறைந்த, 'விஷ்ணு'வை வழிபடும் சமயத்திற்குப் பூர்ணமான கலையுருவத்தை - வேதத்தமிழை - நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுரங்களில் காணமுடியும் என்பது வைஷ்ணவர்களின் நம்பிக்கை. இது நம்மாழ்வார் செய்த அற்புதம்.

## பிறருக்காக மன்றாடுகிறார்

பகவானைச் சாதனமாகக் கொண்டு வேறொரு பயனைப் பெறுவது அன்று நம்மாழ்வாரின் நோக்கம். பகவானையே சாதனமாகவும் பயனாகவும் பற்றி வாழ்க்கை நடத்தவேண்டு மென்பதே இவர் உபதேசம். இத்தகைய வாழ்க்கைக்கு வசீகரமாக வழி காட்டுவன இவர் பாசுரங்கள்.

வாழ வழி தெரியாமல் உழலும் பிறர் துன்பத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமல் நம்மாழ்வார் உபதேசிக்கிறார் என்பதை இவரது பல்வேறு பாசுரங்களிலும் கண்டு தெளியலாம். 'பராநர்த்தம் (பிறர் துன்பம்) நெஞ்சிலே படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்றாடுகிறார்' என்று நம்மாழ்வாரைக் குறித்து இவர் உபதேச வழியிலே சிறந்து விளங்கிய பேரறிஞர் ஒருவர் கூறியுள்ளார்.

'காயம்பட்ட ஒருவனைக் கண்டதும் நான் அநுதாபப் படுவதில்லை' என்றாராம் ஒரு பேரறிஞர். 'ஐயோ! அவ்வளவு கடின இருதயமா?' என்று, கேட்டவர் திகைத்து நின்றார். அந்தப் பேரறிஞரோ, 'நான் அநுதாபப் படுவதில்லை; ஆனால் நானே அந்தக் காயம் பட்டவனாகிவிடுகிறேன்!' என்று கூறி முடித்தாராம். அப்படி அவர் நெஞ்சிலே பட்டது, காயம் அடைந்தவன் அநுபவித்த துன்பம். இந்தவிதமாகப் பிறர் துன்பங்களை அநுபவித்து அவர்களுக்காக மன்றாடப் பிறந்த ஞானதேசிகரே நம்மாழ்வார் என்பதற்கு இவர் பாசுரங்களிலும் சான்று கிடைக்கிறது; இவர் வழிவந்த தொண்டர்களின் வாக்கிலும் தக்க சான்று கிடைக்கிறது.

## அற்புத ஞான சௌந்தரியம்

மகிழம்பூ மாலையும், கிரீடம்போல விளங்கும் கொண்டையும் திருமுகமாகிய ஜோதியும், மோனத்தில் இருக்கும் வடிவமும், ஞான

முத்திரையோடு கூடிய கையும் உடைய ஞானதேசிகர், நம்மாழ்வார் என்று பொருள்தரும் பாட்டு ஒன்றை, ஸ்ரீவைஷ்ணவ சமுதாயம் நம்மாழ்வார்மீது கொண்டிருக்கும் பெரும் பக்திக்கு ஒரு சான்ருகக் காட்டலாம் ;

தேன்அ ருமகிழ்த் தொடையலும் மவுலியும்,
திருக்கிளர் குழைக்காதும்
கான்அ ருமலர்த் திருமுகச் சோதியும்
கயிரவத் துவர்வாயும்,
மோன மாகிய வடிவமும் மார்பமும்
முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரணதா மரையும்என்
நயனம்விட் டகலாவே!

[தேன் அரு - தேன் நீங்காத. மகிழ்த் தொடையலும் - மகிழம் பூமாலையும். மவுலியும் - கிரீடமும். திருக்கிளர் - அழகு விளங்கும். குழை - காதில் அணியும் அணி. கான்அரு - வாசனை குறையாத. கயிரவம் - ஆம்பல். துவர்வாயும் - சிவப்புள்ள வாயும். மார்பமும் - மார்பும். தேசிகன் - குரு. சரண தாமரை - அடிகளாகிய தாமரை. நயனம் - கண்கள்.]

அந்த மாலையும் மௌலியும் நம்மை ஆட்கொள்ளும் என்பதும், அந்தக் காதுகள் நமது குறைகளைக் கேட்கத் தயாராக இருக்கின்றன என்பதும், வாய் நமது யோகக்ஷேமம் வினவத் துடிக்கிறது என்பதும், ஞானநெஞ்சிலும் மோன வடிவிலும் கருணை, கடல் போலப் பொங்கி அலையெறிகிறது என்பதும், அபயம் அளிக்கும் கையில் தேசிகரின் அதிகார ஞானமுத்திரை திகழ்கின்றது என்பதும் குறிப்பு.

ஞான சௌந்தரியமே உருவெடுத்து வந்ததுபோல் இருக்கும் இந்தத் தேசிக வடிவம் எப்போதும் உள்ளத்தில் இருக்கிறது என்று கூட இந்தக் கவி சொல்லவில்லை ; கண்ணைவிட்டு விலகாது என்கிருர், ‘கண்ணன் என் கண்ணிலே இருக்கிருன்’ என்று பொருள் படப் பேசும் நம்மாழ்வாரைப்போல, இந்த ஞானதேசிக வடிவிலே, பக்தர் கண்ணிலும் கருத்திலும் மலர்வது சரணத்தாமரை.

இந்த ஞானமுத்திரைக் கையைத்தான் தமிழர்கள்,

வேதம்ஒரு நான்கினையும்
மிக்கதமிழ் நாலடியால்
ஓதிஉரைத் தேகருணை
ஓங்கும்கை...(திருக்கை வழக்கம்)

என்று போற்றுகிறார்கள். மக்களின் ஆறாத ஞானப்பசியையும் ஆற்றுவது இந்தக் கையே என்பது குறிப்பு.

ஞானம் ஓங்க, கருணை ஓங்க, மானுடம் ஓங்க, நம்பிக்கையின் அற்புதத்தை உள்ளவாறு சுட்டிக்காட்டும் பரமாசாரியார்மீது பக்தர் களுக்குத்தான் எவ்வளவு நம்பிக்கை பாருங்கள் !

# 2. தமிழ் கண்ட தண்பொருநை

வடவேங்கடம் தென்குமரி யென்ற எல்லைகளையுடைய நம் தமிழ் நாட்டிலும் தமிழ்நாடு என்று சிறப்பித்துப் பேசுவதற்கு உரிய பெருமை வாய்ந்தது தென்தமிழ் நாடாகிய பாண்டிய நாடு. இப் பாண்டி நாட்டிலும் தென்பாண்டி நாடாகிய திருநெல்வேலிச் சீமைக்கு, மதுரைச் சங்கத்திற்கும் முற்பட்ட காலத்திலேயே தமிழ் வளர்த்த உரிமையும் பெருமையும் உண்டு என்பர்.

## தென்பாண்டி நாடு

அகத்தியமலை என்ற பொதியமலையிலே தமிழ் முனிவரான அகத்தியனார், தாமும் சீடர்களுமாக ஒரு சங்கம் அமைத்துக்கொண்டு இன்று நம் கைக்கு எட்டியுள்ள சங்க இலக்கியங்கள் தோன்றியிராத காலத்திலே நம் தாய்மொழியை வளர்த்துவந்தார் என்பது தமிழர்களின் நம்பிக்கை. திருநெல்வேலிச் சீமை, ஆதியில் வேலியிட்டு நெற்பயிர் விளைத்து, உடம்பைப் பேணியதுபோல், அகத்தியம், தொல்காப்பியம் என்ற இலக்கண வேலிகளை இட்டுத் தமிழ்ப் பயிர் வளர்த்து, உள்ளங்களையும் ஊட்டி வளர்க்க முயன்றதாம்.

தமிழ் முனிவரின் தமிழ்ச் சங்கமென்றால் எவ்வளவோ வசீகரமாகத்தானே இருக்கவேண்டும்! இது குறித்து நம் தமிழகத்தின் கவிச்சக்கரவர்த்தி எப்படிக் கற்பனை செய்திருக்கிறான் என்பதைப் பார்க்கலாம். சீதையைத் தேடப் புறப்படும் வானரவீரர்களுக்கு 'யாத்ரா மார்க்கம்' காட்டுகிறான் சுக்கிரீவ மகாராஜா. அப்போது 'அகத்திய மலையிலே காத்திருக்கிறது உங்களுக்கு ஓர் ஆபத்து' என்கிறானும்.

தமிழ் முனிவரும் தமிழ்ச் சங்கமும் இருக்கும் இடத்திலா? அனுமன் முதலான வீரர்களுக்கும் ஆபத்து ஏற்பட முடியுமா? இவர்கள் ஞானவீரர்களும் பரம ரஸிகர்களும்கூட. அகத்தியனார் இருக்கும் இடத்திலோ எப்பொழுதும் தமிழ் விருந்துதானே!

சுக்கிரீவன் சொல்வதைக் கவனமாய்க் கேட்போம் :

தென்தமிழ்நாட்(டு) அகன்பொதியில்
திருமுனிவன் தமிழ்ச்சங்கம்
சேர்கிற் பீரேல்,
என்றும்அவண் உறைவிடமாம்
ஆதலினல் அம்மலையை
வலத்திட் டேகி;
பொன்திணிந்த புனல்பெருகும்
பொருநையெனும் திருநதிபின்(பு)
ஒழிய, நாகக்
கன்றுவளர் தடஞ்சாரல்
மகேந்திரமாம் நெடுவரையும்
கடலும் காண்பீர்.

[அகன்பொதியில் - அகன்ற பொதிய மலையிலே. சேர்கிற் பீரேல் - சேர்வீர்களானல். என்றும் அவண் உறைவிடமாம் - அங்கேயே உங்களுக்கு நித்தியவாசம் நேர்ந்துவிடும். வலத்திட்டு ஏகி - வலத்திருக்கும்படி பிரதட்சிணமாக அதைக் கடந்துபோய். பொன்திணிந்த - அழகு நிறைந்த. பொருநை - தாமிரபர்ணி. நாகக்கன்று - யானைக்குட்டிகள். தடஞ்சாரல் - விஸ்தாரமான மலைச் சாரல்கள். நெடுவரை - பெரியமலை.]

என்ருனும் சுக்கிரீவன்.

பொதியமலையைத் தூரத்திலிருந்து கண்டதுமே, 'ஆஹா! இவ்வளவு தூரம் வந்துவிட்டு அந்த அகஸ்திய பர்வதத்தைப் பார்க்காமல் போவதா ?' என்று தோன்றும். மலைக்கு மேல் ஞானமலையாக எழுந்தருளியிருக்கும் குறுமுனிவரையும் பார்க்க வேண்டியது தானே ? தமிழ்மலையில் தமிழ்முனிவரைத் தமிழ்ச்சங்கத்தோடு பார்க்க வேண்டாமா ? ஆனல் அன்றே அப்போதே ஆபத்து ; அதுவே ஆபத்து ?

அங்கே எப்போதும் தமிழ்ப்பாட்டு, தமிழிசை, தமிழ்க்கூத்து ஆகிய மூவகை விருந்தும் முறையாக நடந்துகொண்டே யிருக்கும். அத்தகைய விருந்தை விட்டுப்போக மனம் வருமோ, அனுமன் முதலிய ரஸிகர்களுக்கு !

## தமிழ் கண்ட தண்பொருநை

சீதையைத் தேடும் முயற்சியாகிய ராமகாரியமும் மறந்து போய்விடுமாம், திருநெல்வேலித் தமிழின் புலமைப் பேரின்பத்திலே! மதுரைக்கும் முற்பட்டுத் திருநெல்வேலிச் சீமை வளர்த்து வந்த தமிழுக்குத்தான் எத்தகைய மகோந்நத ஸ்தானத்தை அளித்திருக் கிறது கவிச்சக்கரவர்த்தியின் மனோபாவம்!

பொதியமலைப் பிரதேசத்தைக் கடந்து, தமிழொடு பிறந்த தாம்பிரபர்ணியையும் கடந்து, ஒரே ஓட்டமாக ஓடித் தென்கடலை அடையவேண்டும் என்று சுக்கிரீவன் ஒரே மூச்சில் பேசிவிடுவதி லிருந்து, கம்பன் தனக்குத் தென்பாண்டித் தமிழிலுள்ள மோகத்தை வெளியிடுவதாக ஊகிப்பது மிகையாகாது.

திருப்பதி மலையை, வடமொழி தென்மொழி நிலங்களுக்கு வரம் பாய், இரண்டுக்கும் மத்தியாய்க் குறிப்பிடும் கவிஞன், தொண்டை நாட்டிலே ஸம்ஸ்கிருதம், தமிழ் என்ற இரு மொழிகளையும் கற்றுத் தேர்ந்த புலவர் குழாங்களைக் குறிப்பிட்டுப் பேசுகிறான். தன்னுடைய சொந்த நாடாகிய சோழவள நாட்டைச் செந்நெல்லும் கரும்பும் கமுகும் நிறைந்த நாடாக வருணிக்கிறான். அந்த வழியாகப் போய்க் கொண்டிருந்த வானரவீரர்கள் முற்றிக் கீழே விழுந்து கிடந்த தேங்காய்களில் தடுக்கி விழுந்தும், தேன் பெருக்கில் வழுக்கி விழுந்தும் போக நேர்ந்ததாம்.

இப்படிச் சோழவளநாட்டின் இனிய காட்சிகளை வருணிப் பவன், தென் தமிழ்நாடாகிய பாண்டிய நாட்டுக்கு இனிமையே தமிழ்தான் என்பதுபோல,

> இனிய தென்தமிழ்
> நாடுசென் றெய்தினர்

என்று சுட்டிக் காட்டுகிறான்.

இத்தத் தமிழினிமைக்குச் சொர்க்கலோகத்தின் இனிமைகளும் ஈடில்லை யென்கிறான். 'சொர்க்க இன்பத்திலும், இன்பமோ இனி மையோ பூர்த்தியாக வேண்டுமென்றால் முத்தும் வேண்டும்; முத்தமிழும் வேண்டும்' என்கிறது கம்பனின் கற்பனை யுள்ளம்.

'முத்தும் முத்தமிழும்!'—என்ன வசீகரமான, பொருள் பொதிந்த சொற்றொடர்! தமிழகத்தின் ஆதி சரித்திரமே இச் சொற்றொடரில் காணப்படுகிறது. முத்து, பழந்தமிழர்களின் பெருஞ்செல்வத்திற்கு அறிகுறி; முத்தமிழ் அறிவுச் செல்வத்திற்கும் கலைச் செல்வத்திற்கும்

நாகரிகத்திற்கும் பண்பாடுகளுக்கும் அறிகுறி. இந்த முத்தும் முத்தமிழும் தந்து ஆதிகாலத்தில் தமிழர்களின் வாழ்க்கையின்பத்தை முற்றுப் பெறச் செய்தது, தென்பாண்டி நாடாகத்தானே இருக்க வேண்டும்?

'முத்தமிழ் மாமுனி' என்று பாரதியார் குறிப்பிடும் அகஸ்தியரைப்பற்றிய கதைகளிலிருந்து, சரித்திரம் எட்டிப் பார்க்க இயலாத பண்டைப் பழங்காலத்திலேயே வடமொழிக்கும் தென்மொழிக்கும் உறவு ஏற்பட்டுவிட்டதென்பதை ஊகிக்கலாம். முதலாவது தமிழிலக்கணத்தை அகஸ்தியரே இயற்றினு ரென்ருல், வடமொழி, தமிழ்மொழி என்ற இருமொழிப் புலமையும் வாய்க்கப் பெற்றவரே பண்டைத் தமிழ்ப்பயிர் வளர இலக்கண வேலி அமைத்திருக்கக் கூடும் என்று கருதலாம்.

தொல்காப்பியம் என்னும் பிரசித்தமான இலக்கணத்தைச் செய்த அந்த ஆசிரியரும் பொதியமலைப் பிரதேசத்தை ஒட்டி வாழ்ந்தவரே என்று ஊகிக்கலாம். அந் நாளில் திருவாங்கூரின் ஒரு முக்கிய ஸ்தலமாக இருந்தது அதங்கோடு என்ற ஊர். அந்தப் பக்கத்தில் வாழ்ந்தவர் தொல்காப்பியர். அதங்கோடு திருவதங்கோடு ஆகித் திருவிதாங்கோடு என்று சிதைந்திருக்க வேண்டும்.

தொல்காப்பியர் காலத்திலேயே ஜைனசமயம் திருநெல்வேலிச் சீமைக்கும் வந்துவிட்டதென்று ஊகிக்கலாம். தொல்காப்பியரையே ஜைனர் எனத் துணிகின்ருர் ஓர் ஆராய்ச்சிப் பேரறிஞர். ஒரு காலத்தில் ஜைனசமயம் திருநெல்வேலிச் சீமையில் பரவியிருந்தது என்பதற்குத் தக்க ஆதாரங்கள் உண்டு. ஜைனர்களும் தமிழரோடு தமிழராக இருந்து தமிழ் வளர்த்திருக்கிருர்கள்.

பழைய காலத்தில் திருநெல்வேலிச் சீமையிலே ஜைனர்களும் சைவர்களும் வைணவர்களும் சமரச உணர்ச்சியுடன் கலந்து வாழ்ந்து, தமிழ்வளர்த்து வந்தார்கள் என்று ஊகிக்கலாம். இடையிடையே சண்டை போட்டுக்கொண்டாலும் அது 'செல்லச் சண்டை'யாகத்தான் இருந்திருக்க வேண்டும்!

திருநெல்வேலித் தமிழ்ப்பயிர், சங்ககாலத்திலே மதுரையில் வளரக் காண்கிருேம். அக் காலத்திலேயே தமிழ் வளர்ச்சியில் திருநெல்வேலிச் சீமை பங்கு கொண்டிருந்தது என்பது திண்ணம்.

சங்க காலத்திற்குப் பின்பு தோன்றிய பக்தியுகத்திலே திருநெல்வேலிக்கு விசேஷமான பங்கு உண்டு. சைவ உலகின் தனி நாயகமாகிய திருஞானசம்பந்தர் திருநெல்வேலி நகரில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானைச் செல்வர் என்றே போற்றுகிறார். இவர் பாடிய 'திருக்குற்றாலப் பதிகம்' 'குற்றாலத் தமிழ்' என்று சிறப்பித்துப் பேசத்தக்க நிலையில் அந்த மலையின் இயற்கை யழகுகளையும் வளங்களையும் அருவிப் பெருக்கையும் அப்படியே கண்முன் கொண்டு வந்து காட்டும் ஜாலக்கண்ணாடிபோல் அமைந்திருக்கிறது.

## திருக்குருகூரில்

ஸ்ரீ வைஷ்ணவ உலகின் தனிநாயகமாகிய நம்மாழ்வாரின் அவதார ஸ்தலம் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த திருக்குருகூர் என்ற ஆழ்வார் திருநகரிதான். இதை ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தின் அதிமுக்கியமான பிறப்பகம் என்றும், ஸ்ரீ வைஷ்ணவ ஆசிரியர்களின் 'ஞானராஜதானி' என்றும் சொல்லலாம். பொருநை என்ற தாம்பிரபர்ணி ஆற்றங்கரையில் உள்ளது குருகை என்ற திருக்குருகூர்.

நம்மாழ்வார் இவ்வூரில் தோன்றியதால் இதை, 'ஆழ்வார் திருநகரி' என்று சிறப்பித்துக் கூறுகிறார்கள். ஆற்றில் வெள்ளம் பெருகிப் போகும்போது, 'தெண்ணீர்ப் பொருநை, சுழி பலவாய் ஒழுகும் குருகூர்' என்ற கவிஞன் வாக்கு நினைவிற்கு வரும்.

பாண்டிய நாட்டிலுள்ள ஆறுகளில் தாம்பிரபர்ணியே மிகச் சிறப்புடையது. 'தண்பொருநை' என்ற பெயரே 'தாம்பிரணி' என்றும், 'தாம்பிரபர்ணி' என்றும், 'தாமிரவருணி' என்றும் சிதைந்திருக்கவேண்டும். 'தாமிரவருணி' என்பதற்குத் 'தாமிரம் அல்லது செம்பு போன்ற நிறமுடையது' என்று பொருள் கூறுகிறார்கள். இந்த ஆற்றுநீரில் தாமிரச் சத்துக் கலந்திருக்கிறதாம். 'பொன் திணிந்த புனல்பெருகும் பொருநை' என்பது கம்பன் கற்பனை.

காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருநைநதி—என
மேவிய ஆறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு

என்று தமிழ்நாட்டின் செழிப்பிற்குக் காரணமான ஆறுகளைப்

பாரதியார் குறிப்பிடுகிருரே, அந்த ஆறுகளில் தாம்பிரபருணி, தமிழகத்தின் ஞானச்செழிப்புக்கும் சிறப்பாக உதவியிருக்கிறதென்று சொல்லலாம். 'தமிழ் கண்டதோர் வையை' என்கிருர் பாரதியார். பொருநைக்கும் இச்சிறப்பு உரியதாகும்.

தென்மேற்குப் பருவக் காற்றினல் ஆனி, ஆடி மாதங்களில் தாம்பிரபர்ணி உற்பத்தியாகும் மேற்குத் தொடர்ச்சி மலேயில் மிகுதியாக மழை பெய்கிறது. அக் காலங்களில் இவ்வாற்றில் வரும் தண்ணீர் மிகத் தெளிவாயும் குளிர்ச்சியாயும் இருக்கும். நீராடுவ தற்கும் பருகுவதற்கும் அத் தண்ணீர் மிகச் சிறந்தது என்று மக்கள் அதைப் பயன்படுத்துவ துண்டு. அந்தத் தெளிந்த நன்னீர் மக்கள் அனைவருக்கும் பயன்படக்கூடிய நம்மாழ்வாரின் தெளிந்த ஞானத் திற்கு அறிகுறியாகக் கருதத்தக்கது.

# 3. வாழ்வு வேண்டி வரம் பெற்றது

இந்த ஆற்றங்கரையிலுள்ள குருகூரில் திருவழுதி வளநாடர் என்ற வேளாளர் குலத்தில் நம்மாழ்வார் வைகாசி விசாகத்தில் பிறந்தார். வேளிர் மரபினரான இவருடைய முன்னோர் ஏழு தலை முறையாகக் குறுநில மன்னர்களாக இருந்தவர்கள்.

இந்த வம்சாவளி வருமாறு ; (1) திருவழுதி வளநாடர், (2) அறந்தாங்கியார் (தர்மதரர்), (3) சக்கரபாணியார், (4) செந்தா மரைக் கண்ணர், (5) செங்கண்ணர், (6) போர்க்காரி, (7) காரி காரியின் புதல்வர் காரிமாறன் என்ற நம்மாழ்வார்.

ஆழ்வாரின் தாயான உடையநங்கை திருப்பதிசாரம் என்று இப்போது சொல்லப்படும் திருவெண்பரிசார வாசியான திருவாழ் மார்பர் என்பவரின் புதல்வியாவார்.

காரி ஆண்ட திருவழுதி வள நாடு, தென்பாண்டி நாட்டின் ஒரு பகுதி. இந் நாட்டின் தாயூர் திருக்குருகூர், இந்த நாட்டில் நவ திருப்பதிகள் என்ற ஒன்பது திருமால் கோயில்கள் உண்டு. அவற் றுள் பல நம்மாழ்வாரின் முன்னோர்களால் ஏற்பட்டவை.

## பிள்ளைமைச் செல்வம்

காரியாரும் உடையநங்கையும் தங்கள் மண வாழ்க்கையை அழகு செய்து, மாண்புறச் செய்யும் மக்கட்பேறு இல்லையே என்று நினைத்து நினைத்து வருந்துவராயினர். ஒருநாள் காரியார், உடையநங்கையை நோக்கி,

“மானே ; விலையில்லா
மாணிக்க மே ! தெவிட்டாத்
தேனே ! ஒருவார்த்தை
செப்புவது கேள்”

என்று பேரன்புடன் தம் இதய தாபத்தை வெளியிட லானர்.

தம் கணவர் சொல்லப்போவது இன்னது என்பதை உடைய நங்கை அறிந்தவள்தான். தன்மீது கணவருக்குள்ள பேரன்பையும்

நன்கு அறிந்தவள், கணவர் வார்த்தையைக் கவனமாய்க் கேட்டாள்.

நாடும் நகரமும்
நன்மணியும் நல்வளமும்
தேடும் பொருளும்
திரமாம் எனஇருந்தோம்

[திரமாம் - ஸ்திரமாம்]

என்று காரி சொல்ல, உடையநங்கை கண்களில் பனிசோரத் தான் ஒன்றும் பேசாமலே கேட்டுக்கொண் டிருந்தாள்.

காரி சொன்னர் :

குதலைமொழிக் கிண்கிணிக்கால்
கோக னகச்செவ்வாய்
மதலையரை இல்லாத
வாழ்வும்ஒரு வாழ்வாமோ ?

[குதலைமொழி - மழலைச் சொல், கிண்கிணிக்கால் - சதங்கை அணிந்த கால், கோகனகச் செவ்வாய் - செந்தாமரை போன்ற சிவந்த வாய். மதலையர் - குழந்தைகள்.]

புக்(கு)அடிசில் உண்டு
புறம்புல்கிக் கூத்தாடும்
மக்கள்முகம் காணுத
வாழ்வும்ஒரு வாழ்வாமோ ?

[புக்கு - புகுந்து வந்து, அடிசில் - சோறு. புறம்புல்கி - முதுகைக் கட்டிக்கொண்டு.]

ஐந்(து) அடக்கி, வேண்டும்
அறங்கோடி செய்தாலும்,
மைந்தரைப்பெற்(று) உய்யாத
வாழ்வும்ஒரு வாழ்வாமோ ?

[ஐந்துஅடக்கி - ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தி. அறம் கோடி - கோடி தருமங்கள்.]

இப்படிக் காரி சொல்லி வாய்மூடியதும், இருவரும் உள்ளம் மிக வாடிச் சிந்தனையில் ஆழ்ந்தார்கள். பிறகு தங்கள் குலதெய்வமான திருக்குருகூர்ப் பெருமானைப் போய் வழிபட்டார்கள்.

அப்போது, 'நீங்கள் திருக்குறுங்குடிக்குப் போய் வழிபட்டால் உங்களுக்குப் பிள்ளைப்பேறு கிடைக்கும்' என்று ஒரு வாக்கு ஆகாய வாணி ஒலிப்பதுபோல் இவர்கள் காதில் விழுந்தது.

காரியும் உடையநங்கையும், 'கொல்லை முல்லை மெல்லரும் (பு) ஈனும் குறுங்குடியே' என்று திருமங்கைமன்னன் பாடியிருக்கும் திருக்குறுங்குடியை அடைந்து அங்கே கோயில் கொண்டிருக்கும் நம்பியை வணங்கினார்கள்; வாயாரத் தோத்திரம் செய்தார்கள். 'எவ்வளவோ சம்பத்துள்ள நமக்குப் புத்திர சம்பத்தை விதிக்க வில்லையே!' என்ற மன வேதனையுடன் பக்தி பண்ணி அந்த வேதனையை இவர்கள் ஒருவாறு மறக்கவும் முயன்றார்கள்.

## வழக்குரைத்து வரம் வேண்டினாள்

உடையநங்கை தன்னை மறந்து சந்நிதியில் நின்றுகொண் டிருந்தாள். புருஷோத்தமனாகிய நம்பி, திருமாமகளுடன் அவள் விண்ணப்பத்தைக் கேட்கச் சித்தமா யிருப்பதுபோலக் காட்சி வழங்கினார்.

அச்சுதா நந்தா!
அரி!கேச வா!கண்ணா!

என்று நங்கை இறைவனை அழைத்தாள், அவனும், 'அம்மா, என்ன செய்தி?' என்று க்ஷேமம் விசாரிப்பதுபோலக் காணப்பட்டான்.

திருமகளும் இவள் குறையை நிறை செய்யவேண்டு மென்று நம்பியிடம் பரிந்து பேசுவதுபோலத் தரிசனம் அளித்தாள். உடைய நங்கைக்குத் தானும் தன் கணவனும் ஒரே குரலில் தெய்வத்துடன் வாதாடி வழக்குரைப்பதுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

ஏழு தலைமுறையாய்
யாங்கள்தொண்ட ராகிநிற்க
வாழும்அடி யோங்களுக்கு
மக்கட்பே(று) இல்லையென்றால்,
ஊழ்வினையோ? தெய்வம்!
உனதருளும் பொய்யாமோ?
வாழ்வினையே நல்கும்
மகவளிக்க லாகாதோ?

என்று இவர்களது விண்ணப்பம் ஆரம்பமாகிறது.

'நாங்கள் என்ன பாவம் செய்தோமோ?' என்று கேட்கிறார்கள்.

கற்றுவும் கன்றும்
கதறப் பிரித்தோமோ?
பெற்றோரைப் பார்த்துப்
பெருமூச் செறிந்தோமோ?

[கற்று—கன்றையுடைய பசு.]

என்று கேட்கிறார்கள்.

'நாங்கள் பிள்ளைப்பால் வார்க்க வில்லையா?' என்று கேட்கிறார்கள். நம்பியின் மௌனம் கண்டு, கொஞ்சம் ஆத்திரமாகவும் பேசுகிறார்கள்.

காதலித்து மைந்தர்உண்ணும்
கையைப் பிடித்தோமோ?

என்று கேட்கிறார்கள்.

'எந்தக் குழந்தையானாலும், எவர் குழந்தையானாலும் அந்த அந்தப் பிள்ளையழகைத் தாய்மார் பாராட்டுவதுபோலவே, நாங்களும் வளர்குழந்தைகளை உயர்வு தாழ்வு பாராது பாராட்டிச் சீராட்டிய தில்லையா?' என்ற கருத்துடன்,

பொற்புடைய பிள்ளைகளைப்
போற்றி எடுத்திலமோ?

[பொற்பு — (இங்கே) குழந்தையிடம் பெற்ற தாய் காணும் அழகு.]

என்று கேட்கிறார்கள்,

'ஐயோ! மலடாய்ப் பிறந்தோமோ?' என்று பெருமூச்சு விடுகிறார்கள். திருவழுதி வளநாட்டின் தலைவர்களல்லவா?

செங்கோலை விட்டுக்
கொடுங்கோல் செலுத்தினமோ?

என்று கேட்கிறார்கள்.

'சாதுக்களுக்கு வேதனைகள் செய்தோமோ?' என்றும் கேட்கிறார்கள் 'நன்றி மறந்தோமோ? அன்பர் செய்த உதவியையும் மறந்தோமோ?' என்று கேட்கிறார்கள்.

இப்படி யெல்லாம் வழக்குரைத்து ஏங்கிப் பரிதவித்து நின்ற அன்பர்களை முகம் நோக்கி, ஆதி நம்பி முகமலர்ந்து, நேசத்தால்

உள் இரங்கி, அருள் சுரக்கின்ருன். அந்த அருள் வாக்கு, அப்படியே இசை வடிவில் இவர்கள் காதில் வந்து விழுகிறதாம் :

ஆதிநம்பி கண்ணுக்(கு)
அணித்தாய் எழுந்தருளி,
'நீதிமைந்தன் நாம்உமக்கு !
நீர்ஏகு வீர்'

என்று வரம் கொடுக்கிருனும்.

## வேதாந்த மூர்த்தியின் விளையாட்டு

**வா**தாடி வழக்குரைத்தவர்களுக்கு இப்படி வரம் கொடுக்கும் தெய்வம் இன்னும் என்ன செய்கிறது பாருங்கள்! கண்ணீர் வழிய விடைகொண்டவர்களை, 'நில்லுங்கள்' என்று சற்று நிறுத்தி வைக்கிறதாம். மேலும் நெருங்கி வந்து, கண்ணீர் துடைக்கிறதாம்; கையால் தடவிக் கொடுக்கிறதாம். திருமாமகள், உடையநங்கையை மலர்க்கையால் தொட்டுக் கண்ணீர் துடைத்துக் கண்மலர் பரப்பி அருள் புரிகின்ருளாம்.

ராஜ தம்பதிகள் மீண்டும் விடை பெற்றுக்கொண்டதும் தெய்வ தம்பதி,

'பெண்நீர் மையினுல்நீர்
பேதலியா(து) ஏகும்'என

[பெண் நீர்மை—பெண்ணின் தன்மை; பெண்மைப் பண்பு. பேதலியாது—வேறுபடாமல்.]

விடை கொடுத்தருளியதும் காதில் விழுகிறது உடையநங்கைக்கு.

'கன்றைத் தாய்ப்பசுவிடமிருந்து பிரித்தோமா? பெற்ருேரைப் பார்த்துப் பெருமூச்சு விட்டோமா? பிள்ளைப் பால் கொடுக்க மறுத்தோமா? குழந்தைகள் ஆசையோடும் பசியோடும் உண்ணும் போது கையைப் பிடித்துக் கொண்டோமா?' என்றெல்லாம் வயிற்றெரிச்சலுடன் கேள்விகளை அடுக்கினுர்க ளல்லவா?

அதற்குத் தெய்வமோ, நீங்கள் நல்லவர்கள்; எவருக்கும் வேதனை செய்ததில்லை. குழந்தைகளுக்கும் குழந்தையுள்ளம் படைத்த பெரியோர்களுக்கும் விசேஷ நற்பணி புரிந்திருக்கிறீர்கள். மக்களுக்குப் பணிபுரிவதற்கு ஒரு வாய்ப்பாகவே செங்கோல் செலுத்தி வந்திருக்கிறீர்கள். ஆகவேதான், உங்களை மேலும்

சோதித்து, ஆயிரத்தெட்டுமாற்றுத் தங்கமாக்கி உலகத்திற்குப் பயன் படச் செய்யவேண்டும் என்பது நமது திருவுள்ளம்' என்று குறிப் பாக உணர்த்துகிறது. 'உங்கள் கண்ணீர் உங்களை மட்டுமல்ல, உலகத்தையே புனிதமாக்க வல்லது' என்பதையும் சொல்லாமல் சொல்லி வைக்கிறது. ஆனால் இந்தக் குறிப்பு அவர்களுக்குப் புலனாகவில்லை.

குழந்தையன்பு மேலிட்டுக் குழந்தை வேண்டுமென்று புலம்பு வது மக்கள் இயல்பு ; சிறப்பாகப் பெண்மையின் இயல்பு. குழந்தை வேண்டும் என்று பிரார்த்திக்கிறார்கள். அந்தக் குழந்தை, வாழ்வை நல்கும் என்று நம்புகிறார்கள். நல்ல பிள்ளைதான், பெற்ற வயிறு குளிர வாழ்வளிக்கும் என்பது நிச்சயமா ? பரம ஞானியான நம்மாழ் வாரைப் பெற்றெடுத்தும் காரியும் உடையநங்கையும் தாங்கள் எதிர்பார்த்த லௌகிக வாழ்க்கை வாழ முடிந்ததா ?

குழந்தை வேண்டும் என்று பிரார்த்திப்பதும், அந்தப் பிள்ளை ராஜபோக வாழ்க்கை வாழவேண்டும் என்று பிரார்த்திப்பதும் வீணான பிரார்த்தனைகளே. அது யாருக்கு நன்மை தரும் என்பதை இறைவனே அறிவான். சிற்றறிவுடைய நாம் அறிந்துகொள்ள முடியுமா ?

எனவே,

என்வ யிற்(று)அரு
மைந்தற்(கு) இனிஅருள்
உன்வ யத்தது

[அருமைந்தற்கு - அருமைப் பிள்ளைக்கு. வயத்தது - வச மானது.]

என்று ராமன் தாயாகிய கோசலை இறைவனை நோக்கிச் செய்து கொண்ட பிரார்த்தனையே சரியானது.

வாழ்வினையே நல்கும்
மக(வு) அளிக்க லாகாதோ ?

என்று உடையநங்கை செய்துகொண்ட பிரார்த்தனை, பக்தி என்ற முத்தைச் செந்நெல்லுக்கு வாரி இறைப்பது போன்ற ஒரு நிலைதான் பக்திப் பெருந்துறையிலே.

ஆனால் பகவான் என்ற கற்பகம் விரும்பியதைக் கொடுக்கிறது; கொடுத்துச் சோதனை செய்கிறது. நாம் விரும்புவதை நமது

விருப்பத்திற்கு மேலாகவே வழங்கவும் வழங்குகிறது; வழங்கிக் கடுஞ் சோதனைக்கு உட்படுத்துகிறது; துன்ப நெருப்பிலே தள்ளித் தூய தங்கம் ஆக்குகிறது. இத்தகைய அருளைத்தான் குறுங்குடி நம்பி. குரு கூர்க் காரிக்கும் உடையநங்கைக்கும் வழங்கினன் என்பது கதை.

இறைவன், தன்னுடைய திட்டம் முழுமையையும் அப்படியே எவருக்கும் காட்டிவிடுவ தில்லை. அடியெடுத்து வைக்க ஒரு படியைக் காட்டுகிருன். வானளாவிச் செங்குத்தாக நிற்கும் படிக் கட்டை எல்லாப் படிகளுடனும் அப்படியே காட்டிவிட்டால் தலை சுழலும்; மதி மயங்கும்; செயல் தடைப்பட்டுவிடும். எனவே, தெய்வ ஒளி ஒரு படியைக் காட்டுகிறது. அதில் அடிவைத்து ஏறிய பின்பே படிப்படியாக வழி காட்டிச் செல்கிறது.

காரியும் உடையநங்கையும் பிள்ளைவரம் கேட்டார்கள். சிவ பெருமானிடம் பிள்ளைவரம் கேட்கப் போய் அவர், தம் பூத கணங் களில் ஒன்றைப் பிள்ளையாக அனுப்பி வைத்தாரென்று கூறுவ துண்டு. குறுங்குடி நம்பியோ பிள்ளைவரம் கேட்ட இவர்களுக்கு, 'நாமே பிள்ளையாக வருவோம்' என்று அருள் புரிந்தாராம். இதன் பொருளை நீள நினைந்து, உண்மை காணுமலே இவர்கள் மகிழ்ந்து போனுர்கள்.

குருகாபுரிக்குத் திரும்பினுர்கள், காரியும் உடையநங்கையும் பணியாளர் பணிகேட்ப, அன்பர் புடை சூழ, குறுங்குடியிலிருந்து புறப்படும்போது ஒரே மகிழ்ச்சிதான்.

'வெள்ளைஆ ழித்துயிலும்
வேதாந்த மூர்த்தியையே
பிள்ளையா கப்படைக்கப்
பெற்றேம்!' என மகிழ்ந்தார்.

[வெள்ளை ஆழி - பாற்கடல். ஆழித்துயிலும் - கடலில் யோக நித்திரை புரியும்.]

ஆனுல் பிள்ளையாகப் பிறக்கும் வேதாந்த மூர்த்தி இவர் களுக்குச் சுக வாழ்வு நல்கப் போவதில்லை; உலகத்திற் கல்லவா நல்கப் பிறக்கிருன்?

# 4. அற்புத ஒளிவிளக்கு

உடைய நங்கையின் கர்ப்பக்குறி தெரிந்ததும் இவளுக்கும் காரிக்கும் ஊராருக்கும் நாட்டாருக்கும் ஒரே குதூகலந்தான்.

திங்கள்ஈ ரைந்தும்
திருவயிறு வாய்த்ததற்பின்,
அங்கம் குழைந்துகுழைந்(து)
ஆகுலமாய் நொந்துபட்டு,

[திங்கள் ஈரைந்தும் - பத்து மாதம்.]

உடையநங்கை, வைகாசி விசாகத்தில் பௌர்ணமி கூடிய வெள்ளிக் கிழமையன்று ஓர் ஆண் மகவை ஈன்றாள்.

குழந்தை, விசேஷ ஒளி உடையதாகத் தோன்றியதாம். சூரிய உதயத்தால் புறஇருள் நீங்குவதுபோல் மக்களின் உள்இருள் நீக்கப் பிறந்த குழந்தை யல்லவா? 'சூரிய உதயத்தால் மலராத இதய மலர்கள் மலரும்படி இந்த ஞானசூரியன் உதயமாயிற்று' என்று பக்தர்கள் இந்தப் பிறப்பைக் கொண்டாடி யிருக்கிறார்கள்.

## காரிமாறன் (சடகோபன்)

குழந்தையைக் கண்ட தாய் தந்தையர், களிப்பு என்னும் பெருங்கடலுள் ஆழ்ந்தனர். 'அரசருக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது' என்ற செய்தியைச் சங்குகளும் மங்கல முரசுகளும் முழக்கி அறிவித்தன. 'எங்கள் குட்டி மகாராஜா!' என்று பெண்கள் குதூகலித்துப் பல்லாண்டு பாடினர். 'எங்கள் குடிக்கரசு!' என்று உடைய நங்கை குதூகலம் அடைந்தாள்.

மக்கள், வீதிகளில் மலர்களை வாரிச் சொரிந்தனர். அவர்களுடைய அகமும் முகமும் மலர்ச்சி பெற்றன. பெருமகிழ்ச்சியை ஆடியும் பாடியும் அநுபவித்தார்கள்.

குழந்தைகள், கருப்பையினின்றும் வெளி வந்தவுடன் **சடம்** என்னும், அறியாமை நிலை இயல்பாக வந்து படரும் என்றும், அப்படி அது தன்மீது படர நெருங்கியதும், நம்பியின் வரப் பிரசாதத்தால் தோன்றிய இந்தத் தெய்வத் திருக்குழந்தை கோபித்து,

அந்தச் சடத்தை விலகச் செய்ததென்றும், அதனுல் இக் குழந்தைக்குச் **சடகோபன்** என்ற பெயர் உண்டாயிற்று என்றும் பக்தர்கள் நம்புகிருர்கள்.

பூதானம், கோதானம் முதலான தானங்கள் செய்து, அரசர், தமக்குப் பிள்ளைப் பேறு கிடைத்த பெருமகிழ்ச்சியை வெளியிட்டார். பன்னிரண்டாம் நாள், குருகூர் ஆதிநாதப் பெருமாளின் சந்நிதியில் தொட்டிலிட்டு, 'மாறன்' என்ற பெயரும் இட்டுக் குழந்தையை அத் தொட்டிலில் கண்வளர விட்டார்கள்.

குழந்தையைப் பெண்கள் தாலாட்டினுர்கள். சாதாரணக் குழந்தைகளைத் தாலாட்டும்போதே வீரப்புகழ், ஞானப்புகழ், தெய்வப் புகழ் முதலான திருப்புகழ்கள் பல பாடித் தாலாட்டுப் பாடல்கள் பாடுகிருர்க ளல்லவா ? தெய்வச் சுடராகிய இந்தக் குழந்தையைத் தாலாட்டும்போதே பெண்களுக்கு விசேஷ மனேபாவத்துடன் உள்ளொளி பொங்கி வெள்ளம் இடுகிறதாம்.

'செங்கண்ணர் வழித்தோன்றலோ?' 'போர்க்காரி போர் ஏறே?' என்று முன்னேர்களின் புகழை ஒட்டித் தாலாட்டியதுடன், 'அறம் தாங்கும் அற்புதமோ ?' என்றும், 'தொண்டர் வாழப் பிறந் தானே ?' என்றும் பாடினுர்களாம்.

தண்டமிழும் வேதாந்த
சாரப் பெரும்பொருளும்
மண்தலமும் விண்தலமும்
வாழப் பிறந்தானே?

என்று தாலாட்டினுர்களாம். 'தமிழ் மாறன்' என்றும், 'தமிழ்ச் சடகோபன்' என்றும், பக்த குலம் கொண்டாடப் பிறந்த ஞானக் கொழுந்தல்லவா ?

இப்படித் தாலாட்டியவர்கள் இக் குழந்தை, பக்திக்கு வித்தாக இருக்கும் என்று போற்றியதுடன், பக்தி வளத்துடன் இயற்கை வளமும் படைத்து உலகம் வாழவே இது பிறந்திருக்கிறது என்றும் பாடினுர்களாம்.

சேல்பாயும் வாவித்
திருவழுதி நாடனே?

[வாவி - நீர்நிலை. சேல் - ஒருவகை மீன்.]

என்றும்,

செஞ்சாலி சூழும்
திருவழுதி நாடனே?

[செஞ்சாலி - நெற்பயிர்.]

என்றும்,

தேசு குடிகொண்ட
திருவழுதி நாடனே?

[தேசு - தேஜஸ்; ஒளி.]

என்றும் பாடினர்கள்.

குழந்தையோ அழவில்லே; கண் திறக்கவில்லே; கைகால் அசைக்கவும் இல்லே. ஆனல் உயிரோடிருந்தது. தாய்ப்பாலும் பருகவில்லே; எனினும் வாட்டம் இன்றி அழகுடனும் ஒளியுடனும் விளங்கியதாம்.

இந்தத் தெய்வக் குழந்தை பிறந்தவுடன், அடியவர்களேத் தடுத் தாட்கொள்ளும் அழகன் விரைந்து வந்து, ஞானப்பால் ஊட்டி மறைந்துவிட்டானும். அந்தப் பால் பருகிய குழந்தை வேறு பாலேக் குடிப்பதற்கு விரும்பாமலும், வாய்விட்டு அழாமலும் மௌன நிலேயை மேற்கொண்டுவிட்டதாம். (கதையின் இப்பகுதி திருஞான சம்பந்தர் ஞானப்பால் ஊட்டப் பெற்றதை நினேவூட்டுகிறது.)

உலக நடைக்கு மாருன நிலேயை உடையதா யிருந்ததால் இக் குழந்தைக்கு, 'மாறன்' என்ற பெயர் விசேஷமாகப் பொருந்தி விட்டதாம்.

## பெற்றும் கவலே

குழந்தைகளின் இள நகை, சிரிப்பு, மழலேச் சொல், தளர் நடை முதலியவைகளேக் கண்டும் கேட்டும் அடையும் களிப்பிலே தாய்மார் பத்துமாதம் சுமந்து, பலவகைத் துன்பங்களேயும் பொறுத்திருந்து, பெற்றெடுத்த சிரமத்தை யெல்லாம் மறந்து, பூரித்துப் போகிருர்கள். உடையநங்கையோ அழகிய குழந்தையைப் பெற்றெடுத்தும் அந்தக் குழந்தை, தன்னேக் கண்திறந்தும் பார்க்கவில்லேயே என்று மனம் பொருது கதறினுள்.

மற்றப் பெண்களே நோக்கி உடையநங்கை, 'என் கன்று பால் உண்ணுது காலம் கழிக்குமோ ? ஆ, ஆ !' என்று சொல்லிப் பதறி

ளுள். குழந்தையை எடுத்து மடியில் கிடத்திக்கொண்டு அந்த ஒளியையும் அழகையும் கண்களால் பருகினுள்.

பிறகு அம் மாதரசி அக் குழந்தையை முகம் நோக்கி,

அப்ப ! என் ஆருயிரே !
ஆருயிர்க்கும் ஆருயிரே
ஒப்பாரும் மிக்காரும்
இல்லா ஒளிவிளக்கே !

என்று வாய்குளிர அழைத்தாள்.

குழந்தையை நோக்க நோக்க அந்த இனிய அழகை வியந்து வியந்து,

கண்ணுக்(கு) இனியானே !
கட்டழகில் மிக்கானே !
பண்ணுக்(கு) இனியானே !
பாகொழுகும் சர்க்கரையே !

என்று அழைத்தாள்.

'தேனின் மதுரமே!' என்ருள். 'தேமாம் பழச்சுவையே!' என்ருள். 'சுாமருசீர் ஓவியமே!' என்ருள்.

தோழியர் அனைவரும் இவளையும் குழந்தையையும் சூழ்ந்து கொண்டனர். நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கிக் குழந்தையின் அழகைப் பாராட்டினர். உடையநங்கைக்கு ஆறுதல் கூறவும் முயன்றனர். இவளோ,

மான்நேர் விழியார்
மனம்உருக்கும் குஞ்சரமே!

[மான்நேர் விழியார் - மானை ஒத்த விழியை உடையவர்கள். குஞ்சரம் - யானை.]

என்று குழந்தையைக் கொஞ்சியபின்,

கிட்டாத் திரவியமே !

என்று அழைத்தாள்; அழுதாள்.

உடையநங்கை, பேரன்புடனும் ஆருத சோகத்துடனும் அழைத்த அழைப்பெல்லாம் பாட்டாக அவள் குரலிசையோடு முழுக்க இசைந்து வெளிப்பட லாயிற்று,

கிட்டாத் திரவியமே !
கேடில்லா மெய்யுணர்வே !

அட்டாங்க யோகத்துக்(கு)
ஆணிப் பசும்பொன்னே !

என்று பாடத் தொடங்கிவிட்டாள்.

பிள்ளைமைச் செல்வம் கிடைத்தும் கிட்டாத் திரவியமாகவே. எட்டாத பாக்கியமாகவே போய்விடுமோ என்ற ஏக்கம் தெளிவாகத் தொனித்தது வாக்கிலும் குரலிலும்.

'இப்படி யெல்லாம் உணர்ச்சிகளை விண்ணிலே பறக்கவிடுவது சரியன்று; தைரியத்தைக் கைவிட லாகாது' என்று தோழியர்கள் தெளிவித்தும், உடையநங்கை மறுபடியும் குழந்தையைப் பார்த்து,

பே(று)அளிக்கும் வித்தகனே !
பிள்ளைமா ணிக்கமே !
கூறரிய நித்திலமே !
கோமே தகத்தெளிவே !

[பேறு - பாக்கியம். கூறுஅரிய நித்திலம் - விலைமதிக்க முடியாத முத்து.]

என்று பாடிச் சற்றுத் தெளிவடைய முயன்றாள்.

சிந்தா மணிவடிவே !
தித்திக்கும் தெள்ளமுதே !

என்று கொஞ்சித் திருப்தி அடைய முயன்றாள்.

'நம்பியின் நல்லருளால் உதித்த மகன் எப்படியும் என் துயரத்தைப் போக்குவான்' என்ற நம்பிக்கையும் சற்று உள்ளத்தில் எழுந்தது. இவன் கல்விக் களஞ்சியமாக வளர்ந்து, நாடு புகழத் தாயின் மேனி சிலிர்க்க உரையாட வேணும் என்ற ஆசையும் பெருகியது.

அல்லல் ஒழிக்கும்
அருமைப் பெருமானே !
நல்ல திருமகனே !
நாவீ(று) உடையானே !

[நாவீறு - நாவின் சிறப்பு.]

என்று கண்குளிர நோக்கி உளங்குளிரப் பாடினாள்.

குழந்தையின் அற்புத ஒளி, மேலும் மேலும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ள,

திருவிசா கத்தில்வந்த
தெய்வத் தனிச்சுடரே!

என்று பாடினுள்.

குருகைப் பெருமானே!
குமரித் துறையானே!
பொருநைத் துறையானே!
பொதியமலை காவலனே!

என்றும் பாடினுள்.

உலகமெல்லாம் அருளாணை செலுத்தி, ஞான அரசு புரியப் பிறந்தவனைக் குருகையூரைத் தலைமையூராகக் கொண்டு, தாமிர வருணி தீரத்தையும், குமரித்துறை வரையுள்ள தென்பாண்டி நாட்டையும் ஆளப்பிறந்தவன் என்று மயங்கியது தாயின் அன்பு நிறைந்த உள்ளம்,

குழந்தையைப் பார்த்தால், அந்தப் பேரழகையும் தெய்வப் பேரொளியையும் மறந்து நோக்கினுல், அசைவற்று உறங்கிக் கொண்டிருக்கும் சாதாரணக் குழந்தைபோலத்தான் தோன்றியது. இந்த உணர்ச்சியுடன் உடையநங்கை,

செம்மலே! நாவில்
தெவிட்டாத முக்கனியே!
அம்மம்உண்டு கண்துயிலாய்,
அற்புதனே!

என்று விளித்து, வேண்டிக் குழந்தையை எடுத்துப் பாலூட்ட முயன்ருள்.

ஆனுல் அந்தப் பால் குழந்தை வாய்க்குள் செல்லவில்லை. உடனே தோழியர்களை நோக்கினுள்; வருந்தித் தன் குறைகளைச் சொல்லிப் புலம்பினுள்.

மைந்தன் கடைவாய்
வழியே வழிந்தொழுக,
நைந்து பயப்பட்டு
மடநல்லார் தமைநோக்கி,
'எங்கள் குடிக்கும்
இறையோன் பெருங்குடிக்கும்

உங்கள் குடிக்கும்
ஒருமகவாய்த் தோன்றினுன்;
பால்உண்ண வில்லை;
பசித்தழவோ தானும்இல்லை !'

என்ருள்.

## இயக்கமும் இல்லையா?

இயக்கந்தானே குழந்தைக்கு உயிர்? உடைய நங்கையோ;

இயக்கம்ஒன் றும்காணேன் !

என்ருள்.

உண்ணவில்லையே, உடம்பு வாடி உலர்ந்துபோயிற்ரு? அப்படியும் இல்லையே !

உண்ணுது பூரிக்கும்
உத்தமரைக் கண்டதுண்டோ !

என்று அதிசயமாகக் கேட்டாள்.

அங்கே கூடியிருந்த பெண்க ளெல்லாம் உடையநங்கையைப் போலவே அதிசயித்தார்கள் ; அல்லற்பட்டு ஆற்ருது அழுதார்கள். உடையநங்கையோ,

கைகால் அசையாமல்,
கண்ணும் விழியாமல்,
மெய்வாய் திறவாத
வித்தகரைக் கண்டதுண்டோ?

என்றும்,

இருத்திஞல் எட்டுநாள்
ஆகிலும், அவ்வண்ணம்
இருக்கும் குழந்தைகளை
இவ்வுலகில் கண்டதுண்டோ?

என்றும்,

எடுத்துக் கிடத்திஞல்
யான்கிடத்தும் அவ்வண்ணம்
படுத்திருக்கும் பாலகரைப்
பாருலகில் கண்டதுண்டோ?

என்றும் கேள்விகளை அடுக்கினுள்.

மையெழுத வேண்டுமென்று கொஞ்சம் கண்ணைத் திறக்க முயன்ருள். குழந்தையும் கண்ணைப் பையத் திறந்து மையெழுதக்

காட்டியதுபோலத் தோன்றியதாம். அப்பால் கண் திறக்க வில்லையே என்று கொதித்தது தாயின் நெஞ்சு.

பண்பினுடன் மையெழுதப்
பையத் திறந்து,பின்னைக்
கண்திறவாப் பாலகரைக்
காசினியில் கண்டதுண்டோ?

என்று கேட்டாள் தோழியரை.

ஒரு சமயம் உடையநங்கை மறுகி மயங்கி நின்றுகொண் டிருந்தாள், விரித்த படுக்கையில் கிடத்தியிருந்த குழந்தையைப் பார்த்துக் கொண்டே. திடீரென்று கொஞ்சம் தனக்காகக். குழந்தை இள நகை யரும்பியதுபோலவும் தோன்றியதாம்.

ஐயோ பாவம்! அம்மா ஆற்ருமல் அழுகிருளே என்றுதான் சற்றுக் கருணையுடன் குழந்தை குறுநகை புரிந்திருக்க வேண்டும் என்று எண்ணினுள். தோழியரை நோக்கி,

மறுகிஅன் னைநின்று
மயங்கிருல் சற்றே
குறுமூரல் செய்யும்
குழவியையும் கண்டதுண்டோ?

[குறுமூரல் - குறுநகை. குழவி - குழந்தை,]

என்று கேட்டாள்.

உடையநங்கையின் தோழியரும் ஊர்ப்பெண்களும்,

ஈதேது மாயமோ?
எண்ண முடியாது!

என்று பதில் சொன்னுர்கள்.

அவர்களில் சிலர், 'எல்லாம் ஆதிநாராயணன் செயல். அவனருளால் கிடைத்த உங்கள் குலவிளக்கை அவனுடைய சந்நிதியிலேயே மறுபடியும் கொண்டுபோய் விட்டுப் பிராத்தனை செய்து பார்ப்போம்' என்று சொன்னுர்கள். உடையநங்கையும் இசைந்தாள்.

திருக்குருகூரில் கோயில் கொண்டிருக்கும் ஆதிநாதப் பெருமாளே திருக்குறுங்குடிக்கும் தங்களைச் செலுத்தியதால் அப்பெருமானின் சந்நிதிக்கே குழந்தையைக் கொண்டுபோக வேண்டுமென்று தீர்மானித்தார்கள். பிறகு உடையநங்கை தன் கணவரை அழைத்துவந்து, அவரையும் கலந்து ஆலோசிக்கத் தொடங்கினுள்.

# 5. தாயின் துயரம்

சிலந்து ஆலோசிக்கு முன் குழந்தையை ஒரு பார்வை பார்த்து, 'ஐயோ, மகனே! உனக்குப் பாலூட்டும் பாக்கியத்தைச் செய் யாத பாவியானேனே! நீ, உன் ஜோதிவாய் திறந்து பால் உண்ணுயோ? உன்னைப் பெற வேண்டுமென்று நெடுநாளாக நெடு மாலை நோக்கித் தவம் கிடந்த உன் அருமைத் தந்தையைப் பார்த் தாவது இளநகை அரும்பலாகாதா?' என்ருள்.

கணவருடன் பேசிக்கொண் டிருக்கும்போதே ஒரு கணம் குழந்தையைக் கணவருக்குச் சுட்டிக் காட்டினுள். பளிச்சென்று பேச்சை நிறுத்திவிட்டுக் குழந்தையை நோக்கிய வண்ணம், 'என் அருமைப் பெருஞ்செல்வமே! உன்னைப்போன்ற குழந்தையின் அழுகையைக் கேட்டுத் தாலாட்டும் தாயைப் பார்த்ததும், நான் நாணிக் கோணி எண்சாண் உடம்பும் ஒரு சாணுகக் குன்றிப் போகிறேனே! என் கண்ணே! உன்னைப் பெற்றும் மலடிபோலத் தானே இருக்கிறேன்!' என்று புலம்பினுள். அரசருக்கும் கண் களில் நீர் ததும்பியது.

உடையநங்கையின் தந்தையார், ஒரு தங்கத் தொட்டிலைக் குழந்தைக்காக அனுப்பியிருந்தார். அந்தத் தொட்டிலையும் அதற்கு அருகேயுள்ள இரத்தினத் தொட்டிலையும் பார்த்துப் பெருமூச்சு விட்டாள், உடையநங்கை. மறுபடியும், தான் கணவருடன் பேசிக்கொண் டிருந்த பேச்சை நிறுத்திவிட்டுக் குழந்தையைப் பார்த்தாள்.

'குழந்தாய்! கண்விழித்துப் பார்! அந்தக் கனகத் தொட்டிலை, என் தந்தையும் உன் தாத்தாவுமாகிய திருவாழ் மார்பர் நீ களிப் புடன் கண்வளர வேணுமென்று அனுப்பி வைத்திருக்கும் தொட்டில் தான் அது. கொஞ்சம் கண்திறந்து பார்க்கக் கூடாதா? உன் தந்தையாருக்குப் பிள்ளை பிறந்துள்ளதைக் கேட்டுத்தானே நமது பாண்டிய மன்னர் நவமணித் தொட்டிலை அனுப்பியுள்ளார். அதை யாவது பாராய்!' என்று புலம்பினுள். கண்ணைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் கணவருடன் பேச்சைத் தொடர்ந்தாள்.

## தவழக் காண்பேனு?

பேச்சு முடிவதற்குள் இப்படிப் பல தடவை குழந்தையை நோக்கி வருந்தினுள். 'அப்பா! நீ ஊமை என்று ஊரார் நகைப் பார்களே!' என்ருள் ஒரு சமயம். 'நீ தவழக் கண்டு நான் மகிழ்ச்சி யடைவதற் கில்லையே' என்ருள், ஒரு சமயம்.

தளர் நடை காண்பதற் கில்லையே என்று தளர்ந்தாள். 'நீ சிறு விடு கட்டி விளையாடக் காண்பதற்கு என் கண்கள் தவம் செய்யவில்லையே!' என்று வருந்தினுள்.

'உன்னைப் பெற்றும் ஒரு சுகமும் அடையாத பாவியேனுன நான் வாழ்வதைக் காட்டிலும் உயிர் துறப்பதே நலம்' என்று கூடக் கதறிவிட்டாள்.

உடையநங்கையின் துயரம் கண்ட காரியும் நெருப்பில் இட்ட மெழுகென அகம் கரைந்து ஆவி சோர்ந்தார். எனினும் ஒருவாறு தம்மைத் தாமே தேற்றிக்கொண்டு, 'என் ஆருயிர்க் காதலியே! பெருமாள் தாமே பிள்ளையாக வரப்போவதாக வரங் கொடுத்தார் என்று, நீதானே என்னிடம் தெரிவித்தாய். அப்படியானுல் இந்தப் பிள்ளை நமக்கே உரியது என்று எப்படிக் கருதுவது?' என்று சொல்லி மனைவியைத் தேற்ற விரும்பினுர். அனுல் தாய் என்ன பதில் சொன்னுள் தெரியுமா?

'பெருமாளே இக் குழந்தை உருக்கொண்டு வந்தால்தான் என்ன? கண்ணன் குழந்தையாக இருக்கும்போது பூதனையென்னும் கொடிய பேய்ப் பெண் கொடுத்த நச்சுப் பாலையும் குடித்தானே! இந்தக் கண்ணன் என் பாலைப் பருகாததற்குக் காரணம் என்னவோ? பூதனையின் நஞ்சைக் காட்டிலும் என் நெஞ்சு கொடியதா?' என்று உடையநங்கை சொன்னதும் காரிக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

இப்படி வெகு நேரம் கழிந்தபின் உடையநங்கையும் ஒருவாறு தேறிக் கணவன் முகம் நோக்கி, 'என் பேதைமையைப் பொறுத்துக் கொள்ள வேணும். புண்ணில் கோல் இடுவதுபோல் உங்கள் துயரத்தைக் கிளறிவிட்டேனே! இந்தப் பிள்ளை நமக்கு உரியதில்லை என்று உங்கள் வாயிலிருந்து வந்துவிட்டது. திருமாலே நமக்குப் புதல்வனுக வந்திருப்பது உண்மையானுல், அவன் கோயிலிலேயே

கொண்டுபோய் விடுவோம்; மறுபடியும் இரங்கி அருள் புரியவும் கூடும். அவன் அருளாளன் அல்லவா ?' என்றாள்.

பிறகு இருவரும் குழந்தையைக் கொண்டு, குருகூர்ப் பெருமாள் கோவிலுக்குப் போக வேண்டுமென்று தீர்மானித்தார்கள்,

தந்தச் சிவிகையில் குழந்தையை ஏற்றிக்கொண்டு போனார்கள். ஈத வாத்தியங்கள் இசை மழை பொழிந்தன. பெண்கள் ஆலவட்டமும் வெண் சாமரையும் வீச, வட்டக் குடை நிழற்ற, அரசனும் அரசியும் புறப்பட்டார்கள். 'ஜய, ஜய'! என்ற கோஷத்துடன் படைவீரர்கள் தொடர்ந்தனர்.

'பொலிந்து நின்ற பிரான்!' என்று நம்மாழ்வார் போற்றப் போகும் ஆதி நாதப் பெருமாள் திருமுன் எல்லோரும் தண்டன் இட்டார்கள். உடையநங்கை, குழந்தையையும் பெருமானுக்கு முன்னே கிடத்தித் தண்டனிட விட்டாள்.

பிறகு உடையநங்கை. பெருமானை நோக்கி, 'மாயவனே ! உன் பெயருக்குத் தகுந்த செய்கையை அடியவராகிய எங்களிடம் காட்டுதல் நீதியோ? நீ புத்திரப் பேறு அளித்துத்தான் என்ன பயன்? இயக்கமே இல்லாத இத்தகைய குழந்தையைப் பெறுவதைக் காட்டிலும் மலடியாய் , . . 'என்று கூறி முடிப்பதற்குள், என்ன ஆச்சரியம் குழந்தை தவழத் தொடங்கிவிட்டது.

தெண்ட னிடவிட்ட
　　திருத்தாய் மனம்குளிர,
கண்டுகண்டு காரியார்
　　கண்கள் களிகூர,
காதசையத் தோளசைய
　　கையசையத் தாள்அசையத்
தா(து)அசையப் பூஅசையத்
　　தார்அசைய மெய்அசைய(த்)

தவழ்ந்து சென்றது.

கோயிலுக்கு வடதிசையில் இருந்த புளியமரத்திற்கே விரைந்து தவழ்ந்து போய்விட்டது குழந்தை. தாய் தந்தையர், 'இறைவன் இரங்கி அருள் புரிந்துவிட்டான்; இனி நம் கவலை தீர்ந்தது. தவம் பலித்துவிட்டது!' என்று உளம் குளிர்ந்து, குழந்தையைப் பின்தொடர்ந்தனர். உற்றார் உறவினரும் பூரித்து வாழ்த்தினர்.

## தவழ்ந்தது போதும்!

'அப்பா! நீ தவழ்ந்தது போதும்!' என்று சொல்லிக்கொண்டே தாய் பெருமகிழ்ச்சியுடன் வந்து பார்த்தாள். பார்த்துப் பார்த்து ஒரே களிப்பு வெறியில் இருந்தாள். குழந்தையோ புளியமரத் தடியில் பத்மாசனம் இட்டுத் தெற்கே முகம் நோக்கி வீற்றிருந்தது.

வலது கையில் ஞானமுத்திரை தரித்து, இடது கையை மடியில் வைத்துக்கொண்டு, கண்களைத் திறவாத ஒரு குட்டி யோகிபோல் காணப்பட்டது குழந்தை.

களிப்பென்னும் கடலில் மூழ்கி யெழுந்து, கரையேறிய தாய், ஒருவாறு தன் மகிழ்ச்சியை மட்டுப்படுத்திக்கொண்டு, 'என் அப்பனே! நீ இப்போதே யோகி யாகிவிட வேண்டாம்' என்று சொல்லிக் கொண்டே குழந்தையை எடுக்க முயன்றாள். எவ்வளவு முயன்று பார்த்தும் எடுத்துக்கொள்ள முடியவில்லை.

'மரம் அசைந்தாலும் மகன் அசையான்!' என்று உடைய நங்கை சொல்லிக்கொண்டே, வியப்புடனும் கவலையுடனும் குழந்தை முன் நின்றாள்.

காரி, 'அது என்ன அப்படி?' என்று கேட்டுக்கொண்டே வந்து பரிவுடன் கைநீட்டிக் குழந்தையைச் சீராய் அணைத்து எடுக்கப் பார்த்தார். 'மரம் அசைந்தாலும், மலை அசைந்தாலும் மைந்தன் அசையான்?' என்று சொல்லிக்கொண்டே பிரமித்து நின்றார்.

பெண்கள், ஒருவர் பின் ஒருவராக வந்து எடுத்துப் பார்த்தார் கள்; சேர்ந்தும் எடுக்க முயன்றார்கள்.

மானுர் எடுத்தார்;
மகவுடையோர் தாம்எடுத்தார்;
ஆனுத செங்கோல்
அரசரெல்லாம் வந்தெடுத்தார்.

எப்படியும் எடுக்க முடியவில்லை.

அவர்களெல்லாம் காரிமுன் வந்து,

நானு விதத்தாலும்
நம்மால் அசைபடான்

ஆனாலும் இந்தமைந்தன்
ஆனைக்கும் தான்அசையான்!
என்று சொல்லிப் பிரமித்து நின்றார்கள்.

## ‘ஆர் இரங்க வல்லார்?’

இப்போது தாயின் நிலையைச் சொல்லவா வேண்டும்? இவள் கடைசியாக, ‘எந்தை! வருக; மைந்த! வருக; அம்மம் உண்ண வருக; அரசே! வருக; மலர்சூட வருக! மையெழுத வருக; பெற்ற மனம் குளிரப் பிள்ளாய்! இனி வருக’ என்றெல்லாம் கொஞ்சிக் கொஞ்சிக் கூவிக் கூவி அழைத்துப் பார்த்தாள். கைநோவ மெய் நோவ அசைத்துப் பார்த்தாள்.

குழந்தைச் சடகோபரோ தம் குழந்தை உள்ளத்திலே புதிது புதிதாகப் புனிதபோதம் வேரூன்றி வளர, அப்படியே தாமும் அப் புளிக்கீழ் வேரூன்றிவிட்டதுபோல் வீற்றிருக்கிறார்! குலகிரிகள் அசைந்தாலும் அசையாத ஞானமலையாகக் காண்கிறது இந்த யோக மங்கள ரூபம்!

உடைய நங்கையோ அந்தக் குழந்தை முன்,
கைசோர, உள்ளம்
கரையக்கண் ணீர்சோர,
மெய்சோரக் .கால்சோரக்,
விம்மல் பொருமலாய்,
நோய்விட்டுப் பின்னும்அந்த
நோய்பிடித் தாற்போல,
வாய்விட்(டு) அழுதரற்ற
மாட்டாமல் உள்ளடக்கி,
புகையுண்டதொரு சித்திரம்போல் நின்றுகொண் டிருக்கிறாள். இவர்களை விட்டுப் பிரிய மனமில்லாதவராய்க் காரியும் கண்கலங்கி நிற்கிறார்.

தோழியர் உடையநங்கையைத் தேற்ற முயன்றார்கள். ‘பிள்ளை வரம் கொடுத்த பெருமான் உன்னைக் கைவிடமாட்டான்’ என்று சொன்னார்கள்.

'அன்று நம்பியிடம் வாதாடி, வழக்குரைத்து, வெற்றி பெற்ருயே; இன்று இந்த ஆதிநாதரிடம் நமது வழக்கை நீதான் எடுத்துரைக்க வேணும்' என்ருர் காரி.

உடையநங்கையும் ஒரு புதிய உணர்ச்சி பெற்றவள்போல்,

அன்றுபோல் போட்ட
அணையாடை யிற்கிடவா(து)
இன்றுதவழ்ந்(து) ஓடவைத்த
எம்பெருமா னே!இரங்காய் !

என்று சொல்லிக்கொண்டே ஆதிநாதப் பெருமான் திருமுன் போய் நின்ருள்.

சாத்திரர்க்கும் காணுத
தாமோத ரா!இரங்காய் !

என்றும்,

அறமே! இரங்காய் !
அருள்மூர்த்தி யே!இரங்காய் !

என்றும் பிரார்த்தித்தாள்,

பிறகு பித்தேறியவள்போல், 'விண்ணே, இரங்காய்! மண்ணே, இரங்காய்! விதிவலியே, சற்றிரங்காய்!' என்றும் புலம்பினுள். கடைசியாக, 'ஆர் இரங்கவல்லார் ?' என்று தவித்தது தாயுள்ளம்.

# 6. உதயமாயிற்றே—தாமரை எங்கே?

வைத்தியர்கள் வந்தார்கள். 'இதுவோ நோய்? என்ன ஜீவ ஒளி! எங்கள் பார்வையும் மூலிகையும் பயன்படுமோ?' என்று மனம் சலித்துப் போயினர்.

மந்திரவாதிகள் வந்து முகத்தைப் பார்த்தார்கள். 'இது என்ன மாயமந்திரமோ? இங்கே எங்கள் மந்திரமும் தந்திரமும் பயன்படுமோ?' என்று மனம் நைந்து வந்த வழியே திரும்பிப் போய்விட்டார்கள்; விடைபெற்றுக் கொள்ளாமலே நழுவி விட்டனர்.

## எட்டாத புதிர்

அறிஞர்கள் வந்து பார்த்தார்கள்.

மண்ணவரும் விண்ணவரும்
வாழ்த்தெடுப்ப, வேதாந்தப்
பண்ணமுதம் ஊறப்
பரஞ்சோதி யாய்இருந்து,

தரிசனம் அளித்த குழந்தையைக் கண்டு பிரமித்து நின்றார்கள். 'எங்கள் அறிவுக்கு எட்டாத நிலை இது!' என்று சொல்லிப் போய்விட்டார்கள்.

கலைஞர்கள் வந்து பார்த்தார்கள். இவர்களில் பெருங்கலைஞர்கள், 'ஒரு தெய்வக் கலைஞான மேதாவியின் முகத்தை நினைவூட்டுகிறது, இந்தக் குழந்தை முகம்!' என்றார்கள். அன்பர்கள், அடியவர்கள், பக்தர்கள் எல்லாரும் வந்து பார்த்தார்கள்;

ஆனை இடர் ஒழித்த
அச்சுதா னந்தன்என்பார்.

தவசிகளும் யோகிகளும் சித்தர்களும் தரிசித்துப் போனார்கள்.

கண்ணன் அடிக்கமலம்
காமித்து மெய்ஞ்ஞானக்
கண்ணன் எனஉண்மைக்
கரமுத் திரைதரித்து,

'நாசிநுனி நோக்கி, நாட்டம் பிறழாமல்' மார்பு நிமிர்ந்து மூச்சும் அகத்தே அடங்க வீற்றிருந்த குழந்தை வடிவு, அஷ்டாங்க யோகியர்க்கும் எட்டாத புதிராகவே இருந்தது.

வந்து பார்த்தவர்களெல்லாம் தத்தமக்குத் தோன்றியபடி ஏதேதோ சொன்னார்கள். 'இந்தக் குழந்தை விஷயத்தில் நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை' என்பதுதான் அவர்கள் கண்ட முடிவு.

'அரசே! தாங்களும் அரசியாரும் இந்தக் குழந்தையை 'இனி மறந்துவிட வேண்டியதுதான் என்று காரியிடம் சொன்னவர்களும் உண்டு.

## தாயின் தவம்

**தா**யுள்ளமோ, 'இன்னும் யாராவது வந்து குழந்தையை அம்மம் உண்ணச் செய்தால் ஆகாதோ? வாய்பேச வைத்தால் ஆகாதோ? அப்படியும் நமக்கு ஒரு பாக்கியம் வாய்க்க லாகாதோ?' என்று தவித்தது; கனவு கண்டது.

மக்கள், கூட்டம் கூட்டமாக வந்து பார்த்துப் போய்விட்டார்கள். உடையநங்கையோ 'இங்கே விட்டுப் போகாது மகனுக்குப் பக்கத்திலேயே காத்திருப்பேன்' என்று துணிந்துவிட்டாள். புத்திரனுக்கு அன்னைமார்,

எவ்வண்ணம் சீராட்டி
எவ்வண்ணம் பாராட்டி
எவ்வண்ணம் போற்றுவார்,
அவ்வண்ணம் செய்து வந்தாள்

உடையநங்கை.

இவளுக்கு வேண்டிய உணவு முதலியவற்றைத் தோழியரும் பணியாளர்களும் கொடுத்து உதவி வந்தார்கள். காரி, அடிக்கடி வந்து பார்த்துப் போவார். பாண்டிய மன்னனுக்கு அடங்கிய சிற்றரசராக இருந்த காரிக்குத் தமது சாதாரண அரசுரிமைக் கடமைகளைக் கவனிப்பதுடன், குடிகளின் விசேஷ நலத்திலே சிந்தை செலுத்திப் பணிபுரியும் பொறுப்பும் இருந்தது.

உடையநங்கையோ, குழந்தை இருக்கிறது என்ற ஆனந்தமும் இல்லாமல், அது இல்லை என்ற துக்கமும் இல்லாமல், 'இனி இக் குழந்தையின் நிலை எப்படி யாகுமோ?' என்ற கவலையுடன் நாள்

தோறும் ஆதிநாதப்பெருமாளை வழிபட்டுப் பிரார்த்தனை செய்வதையே தவமாகக் கொண்டு குழந்தையையும் கவனித்து வந்தாள்

குழந்தை, உணவின்றி யிருந்தும், அசைவற் றிருந்தும் வயதுக்குத் தகுந்த வளர்ச்சியை ஆச்சரியமாகப் பெற்று வந்தது. தாயின் துயரம், நாளடைவில் தூய தவமாக முதிர்ந்து கனிய லாயிற்று.

## தவத்திலும் தாய்தான்

எனினும் சில சமயங்களில் குழந்தையைப் பார்த்ததும் தாயுள்ளம் தவநிலையை முறித்துக்கொண்டு,

பொற்காரி யார்உனக்குப்
    பொற்கழங்கும் பொற்பந்தும்
பொற்காம தேனுவும்
    பொற்பூவும் வரவிட்டார்

[கழங்கு - கழற்சிக்காய்.]

என்று கொஞ்சவும் துணிந்துவிடும்.

பாண்டிய மன்னன் காரியாரின் குழந்தைக்குச் சிறு தேர், சிறு பறை, தொட்டில் இவைகளுடன் வேறும் விளையாட்டுப் பொருள்களையும் புதிதாய் வரவிட்டதாகக் கனவு காண்பாள், உடைய நங்கை ஒரு சமயம். உடனே குழந்தைக்கு முன் வந்து நின்று,

தென்னர் சிறுதேரும்
    சிறுபறையும் தொட்டிலும்செம்
பொன்னின்அம் மானையும்
    புதிதாய் வரவிட்டார்!

[தென்னர் - பாண்டியர்.]

என்று கொஞ்சுவாள்.

மறுபடியும் ஒரு கனுக் கண்டு விழித்துக்கொண்டவள்போல் குழந்தைமுன் வந்து நின்று,

சப்பாணி கொட்டித்
    தளர்நடையிட்(டு) அப்பூச்சி
எப்போது காட்டி
    எமக்(கு) இன்பம் தந்தருள்வாய்?

என்று பரிதாபமாய்க் கேட்பாள்.

திருமஞ் சனம்ஆட்டிச்
சிற்றுடை யும்சாத்தி
மருமஞ் சரிசூட்ட
மாதரார் வந்துநின்றார்

[மரு - மருக்கொழுந்து. மஞ்சரி - பூமாலை.]
என்று சொல்வாள் ஒரு சமயம்.

பெண் குழந்தைகள் சிறுவீடு கட்டுவதை ஆண் குழந்தைகள் போய் அழித்து விளையாடுவது உண்டல்லவா? அத்தகைய துஷ்டத் தனத்தையும் குழந்தையிடம் காண ஆசைப்படுகிறது உடையநங்கையின் தாயுள்ளம்.

சிற்றில் சிதைத்தழிக்கும்
சிற்றடியைக் காணஎன்றே,
சிற்றில் பலகோடித்
தெரிவையர்கள் சூழ்ந்து நின்றார்!

[சிற்றில் - சிறுவீடு. தெரிவையர்கள் - பெண்கள். சூழ்ந்து (இங்கே) செய்து; இழைத்து.]
என்று உடையநங்கை தெரிவித்து, 'பாப்பா! நீ ஓடிப்போய், அந்தச் சிற்றில்களை யெல்லாம் சிதைத்து வா. அந்தத் துஷ்டத் தனத்தை நீ எப்போது செய்வாய் என்று அலந்து போயிருக்கிறது என் நெஞ்சு!' என்கிறாள்.

பதினாறு ஆண்டுகளாகக் குழந்தையும் அசைவற்ற நிலையிலேயே நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது. ஞான சௌந்தரியம் மேலும் மேலும் பொங்கிய வண்ணமாக இருக்கிறது. இந்த நிலையிலும் தாயுள்ளம்,

வேலையிட்ட கண்ணார்உன்
மெய்யழகைப் பார்த்துப்பூ
மாலையிட்டு நிற்கும்
மணக்கோலம் காணவந்தார்!

என்று புலம்புகிறது.

இந்த என் பிள்ளையையும் மாப்பிள்ளைக் கோலத்தில் பார்ப்பேனா? என்று ஆசைப்படும் தாயுள்ளத்தைப் பாருங்கள்!

மணம் செய்வித்துத் தந்தையின் சிங்காசனத்திலும் வைத்துப் பார்க்க விரும்புகிறது தாயுள்ளம்.

பெருவழுதி நாடாளும்
பிள்ளை இவன்என்றே
திருஅபிஷே கம்புனையத்
தேசிகர்எல் லாம்வந்தார்!

[பெருவழுதி நாடு - அளவிற் சிறிதாயினும் பரம்பரைப் பெருமை பொருந்திய பாண்டி நாடு. திரு அபிஷேகம் - முழுக்கு; (இங்கே) திருமுடி. தேசிகர் - குருமார்.]

என்று தன் பிள்ளையின் முடிசூட்டு விழாவைக் குறித்தும் கனுக் காண்கிருள் உடையநங்கை.

உடனே பிள்ளைமுன் போய் நிற்கிருள். தெய்வ ஒளி வீசும் திருமுகத்தை நோக்கி, 'ஐயா, முடி சூட்டிக்கொள்ள வேண்டாமா? தேசிகர்கள் காத்திருக்கிருர்களே! எத்தனை அரசர்கள் கப்பங் கட்ட வந்து, தங்கள் காணிக்கைப் பொருள்களை மலைபோல் குவித்து நிற்கிருர்கள்! என்கிருள்.

இளவரசு தேவரீர்
எங்களுக்(கு)! என்(று)ஏத்தி,
வளவரசர் கப்பம்
மலைபோல் குவித்துநின்ருர்!

[வள அரசர் - செல்வமுள்ள அரசர்.]

என்று கல்லும் புல்லும் மண்ணும் மரமும் கேட்டு உருகும்படி வேண்டிக்கொள்கிறது தாயின் இதயம்.

'எவ்வளவு சொல்லியும் விடையொன்றும் கிடைக்கவில்லையே!' என்று நினைக்கிருள். 'இத்தகைய எண்ணம் ஒன்றும் இல்லாமல் இந்தப் பதினறு வயதுப் பிள்ளை ஏன் இப்படி இருக்க வேண்டும்?' என்று அதிசயப்படுகிறது தாயுள்ளம். இப்போது அல்லற்பட வில்லை; ஆற்ருது அரற்றவும் இல்லை.

முந்தித் தவம் கிடந்து பெற்ற பிள்ளைக்காகப் பிந்தியும் பதினறு ஆண்டுகள் இப்படியெல்லாம் தவம் கிடக்கிறது இந்தத் தாயுள்ளம் என்றுதான் சொல்ல வேண்டும்.

## இருவேறு உலகம்

இப்போது பிள்ளையைப்பற்றிக் கவலையும் இல்லை; பயமும் இல்லை. தெய்விகசக்தி இப் பிள்ளையிடம் குடிகொண்டு, இப்படி அற்

புதமாக வளர்ந்துகொண் டிருக்கிறது என்பதை அறிந்து கொண்டாள் தாய்.

எனினும், 'இந்தப் பதினாறு வயதுச் சிறுவன் ஏன் மற்றப் பிள்ளைகளைப்போல் உலக இன்பம் துய்க்க லாகாது? ஏழு தலை முறையாக வந்த அரசு, என் பிள்ளையின் காலத்தில் பட்டுப்போக வேணுமா?' என்று எண்ணுகிறது, உடையநங்கையின் உள்ளம். 'இந்தத் தெய்வப்பிள்ளை உலக வாழ்க்கைக்குத் திரும்பிவிட்டால் எவ்வளவு நலமா யிருக்கும்' என்று கனுக் காண்கிறாள்.

'பிள்ளை, செயல் மறந்துதான் இருக்கிறானு? அல்லது உடம்பு அசைவற் றிருப்பதுபோல், உள்ளமும் அசைவற்றுச் சிந்தனை இயக்கங்களும் இன்றியே இருக்கிறதா?

ஏதேனும் எண்ணு(து)
இருக்கின் றதும்இயல்போ?
நாதா!'

என்று உரக்கக் கூப்பிடுகிறாள்.

தாயின் இந்தக் குரலும் காதில் விழவில்லை. அவர் எண்ணத் தில் அவர் இருக்கிறார்; அந்த எண்ணத்தோடு இசைத்த குரல் அல்லவா அவரை விழிக்கச் செய்யும் என்பதை உடையநங்கை எப்படி அறிவாள்?

காரியாரின் பொற்பந்து. பொற்பூ, பொற்பசு முதலான பொம்மைகளைப் போன்றதே காரியாரின் குலதனமாகிய அரசும்! ஞானப் பெருநெறியிலே சிறுதேர் ஓட்டுவதா? 'அழாதே, அழாதே, என்று ஆன்மாவைத் தொட்டிலில் இட்டு உறங்கப் பண்ணுவதா?

இப் பெருநெறியிலே தவழ்ந்தும் தளர் நடையிட்டுத் தடுமாறி விழுந்தும் எழுந்தும் சில சமயங்களில் பெருநெறி விட்டு விலகி, முள்ளுக்காடுகளில் சிக்கியும் அல்லற்படுவோருக்கு வழிகாட்டியாக வந்திருப்பவ ரல்லவா இவர்?

பல்வேறு சமயக்கொள்கைகள் என்ற சிறுவீடுகளைச் சிதைக்க வத்தவ ரல்லர் நம் சடகோபர். ஆனால் ஒரு மணக்கோலம் காணவே வந்திருக்கிறார். தாய் விரும்பும் அந்த மணக்கோலம் அல்ல, இவர் காணவும் பூணவும் விரும்புவது!

உள்ளுறையும் அழகனாகிய பரமாத்மாவைப் புறஉலகிலும் 'அழகிய மணவாளனாகக் காட்டி, ஆன்மாவாகிய பெண்ணே! இந்தப்

புருஷோத்தமனை மாலையிட்டு மணந்து வாழ்வாய் !' என்று உபதேசிக்க வந்தவ ரல்லவா? இந்த உபதேசம் பெறுவதற்கு ஏற்ற கலமாகிய சீடரைத் தேடுகிறது இவருள்ளம்.

வழுதிநாடாளப் பிறந்த பிள்ளையா இவர்? ஞானஉலகில் பேரரசு புரியப் பிறந்தவ ரல்லவா? இந்த இளைஞர் தமக்கு ஓர் இளவரசு தேடுகிறார்.

அந்த இளவரசு, அந்தச் சீடர் எங்கே யிருக்கிறார்?' அவர்களை இவர், தம் ஒளிவலையை வீசிப் பிடித்துக்கொள்ளப் பார்க்கிறார்.

இந்த நிலையில் தாயின் குரலும் காதில் விழவில்லை. தொலை தூரத்திலே தவங்கிடக்கும் சீடரின் இதய ஒலிதான் இவர் காதில் விழுந்துகொண் டிருக்கிறது. அந்தச் சீடர் யார்?

* * *

ஞானசூரியன் உதயம் ஆகிவிட்டதே! ஆனால் இந்த ஒளிக்கு அலந்துபோயிருக்கும் உள்ளம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது! அந்தத் தாமரையை மலரச் செய்வதுதான் இந்த உதயத்தின் மெய்ம்மைப் பெருநோக்கு.

# 7. தெற்கே உதயம் !

வடக்கே அயோத்தியில் ஒருவர் யோகநிஷ்டையில் இருக்கிறார். அவ்வூரைச் சேர்ந்தவ ரல்லர்; தேச யாத்திரையாக வந்தவர் தாம். சிறு வயதிலேயே சிறந்த நூல்களை ஐயம் திரிபற ஓதி உணர்ந் தவர். வடமொழியிலுள்ள வேத-வேதாங்க-வேதாந்த நூல்களிலும் யோக நூல்களிலும் தக்க பயிற்சி பெற்றவர்.

தமிழ்மொழியிலும் பயிற்சி உண்டு; இவரது தாய்மொழியே தமிழ்மொழிதான். தமிழகத்திலிருந்து வந்திருப்பவரே இவர்.

சடகோபர் தோன்றுவதற்கு முன்பே தமிழ்நாட்டிலிருந்து யாத்திரை செய்யப் புறப்பட்டார். தமது நாட்டிலுள்ள பல திருப் பதிகளுக்கும் சென்று திருமாலைக் கண்குளிரக் கண்டு களித்து வந்தார். சமய உண்மைகளின் ஸாரத்தை ஞான ஒளியைக் கண்டு கொள்ள வேண்டுமென்று இவருள்ளம் தவித்துக்கொண் டிருந்தது.

## ஒளி காணக் கடுந்தவம்

தமிழ்நாட்டுத் திருப்பதிகளான பல ஊர்களிலும் கடவுளை வணங்கினார். பிறகு உத்தரதேச யாத்திரை செய்ய விரும்பினார். பொருநையாற்றங் கரையிலும் காவிரியாற்றங் கரையிலும் கோதாவரி முதலான நதிக்கரைகளிலும் பரம்பொருளைத் தியானித்து வந்த உள்ளம், கங்கை யமுனை முதலான ஆற்றங்கரைகளிலும் யோகம் புரிந்து, தவம் கிடந்து, கடவுளைக் காண விரும்பியது.

குற்றம் அற்ற சிந்தையராகிக் காமம் வெகுளி மயக்கம் என்ற முப்பகையும் வென்று பேறு பெறவேண்டும், இறையருளுக்கு இலக்காகவேண்டும் என்பதற்காக இப்பெரியார் கடுமையான யோக நியமங்களையும் தவநியமங்களையும் மேற்கொண்டார். கார்காலத் திலும் பனிக்காலத்திலும் கங்காநதிப் புனலிலும் கரிய யமுனை யாற் றின் குளிர்ந்த நீரிலும் படிந்து நீராடுவார். உண்ணாவிரதங்களையும் அடிக்கடி மேற்கொண்டு, உடம்பையும் உள்ளத்தையும் அடக்கி ஆண்டார்.

காட்டில் கிடைக்கும் காய்கனி கிழங்குகளையே உண்டு பசியாறித் தவங்கிடந்தவர், இலையுணவுகளை உட்கொள்ளத் தொடங்கினார். பிறகு உதிர்ந்த காய்கனிகளும் உலர்ந்த சருகுகளும் உணவாக உதவின.

அப்பால், 'காற்றை அருந்திப் பசியாற்றிக் கொண்டார்; கதிரவன் ஒளியையே அமுதாகப் பருகினார்' என்றெல்லாம் உலகம் சொல்லத் தொடங்கியது. அத்தகைய கடு நோன்புகளை மேற்கொண்டார் இவர்.

இவரது யோகநிஷ்டை, நாளடைவில் கோர மாதவமாக முற்றி வந்திருந்தது. இந்த நிலையில் பஞ்சாக்கினி நடுவே பழகலானார். இவரது உள்ளமோ திருமாலின் அருளை நாடியது; அந்த அருளுக்கு உரிய பெருநெறி காட்டும் குருமூர்த்தியையும் தேடி நின்றது.

யாத்திரை வழியிலே காடுகளிலும் நாடுகளிலும் ஆற்றங்கரைகளிலும் மலைப்பிரதேசங்களிலும் எத்தனையோ கலைஞர்களை, அன்பர்களைச் சந்தித்தார்; முனிவர்களை, யோகிகளைச் சித்தர்களைக் கண்ணுற்றார். எனினும் அவர்களுடைய உருவமோ உபதேசமோ இவருள்ளத்தைக் கவரவில்லை.

கடைசியாக ராமன் அவதரித்த அயோத்திக்குப் போய்க் கடுந் தவங் கிடந்தார்,

ஊசி நுழையாத
உரோமச் சடைமுடியான்

என்று மக்கள் இயற்பெயரையும் மறந்து இவரைக் குறிப்பிடலாயினர்.

'பாசிபற்று மேனியான் ஆசிபெற்று வருவோம்' என்று நாட்டு மக்கள் தேடிவந்து, இவரைத் தரிசித்துப் போயினர். இவரோ அயோத்திக்கு அருகிலுள்ள காட்டுக்கு உள்ளே உள்ளே போய் மனித சஞ்சாரமற்ற ஒரு பிரதேசத்திலுள்ள குகையில் அமர்ந்து தவம் புரியலானார்.

'எவ்வளவோ யோகம் புரிந்தோம்; தவங் கிடந்தோம். நெறி தேடி வந்தோம்; குறி நாடி வந்தோம். நமது நோக்கம் இன்னும் நிறைவேற வில்லையே?' என்று எண்ணுவார், ஏங்குவார். மறுபடியும் கடுந்தவ முயற்சிகளில் ஈடுபடுவார்.

## நடு நிசியில் சூரியனா?

ஒரு நாள் வழக்கம்போல் தவயோகத்தில் அமரும்போது இவர் உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஒரு பிரார்த்தனை எழுந்தது: 'இந்தச் சுடுமயான வாழ்க்கையிலிருந்து நித்திய வாழ்வை அருள் வாய்! "பொய், பொய், பொய், பொய்!" என்ற சூழ்நிலையிலிருந்து மெய்வழி காட்டுவாய்! அகமும் புறமும் ஒரே இருட்டாக இருக்கிறதே! இந்த இருட்டினிடையே ஒளி காட்டுவாய்!"

அன்று யோகநிலையில் செழுஞ்சோதி யொன்று தம்மைத் தேடிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. 'என்ன, இந்த நட்ட நடுநிசியில் எப்படிச் சூரியோதய மாகிவிட்டது?' என்று திகைத்தார், 'என்ன திவ்யஜோதி! பதினாயிரம் சூரியர்கள் உதித்ததுபோலத் தோன்றினாலும், என்ன 'அழகான, இனிமையான, வசீகரமான குளிர்ந்த ஜோதி!' பெரியவர் பெருவியப் புற்றார்.

ஜோதி தோன்றிய ஆதியிடத்தைக் கண்டுபிடிக்க வேண்டு மென்று பேராவல் கொண்டார். ஜோதி தெற்கே தோன்றியது.

தென்பால் ஒருகோடிச்
செங்கதிரோன் என்றுதித்த

அற்புதத்தைச் சோதிக்க வேண்டுமென்று புறப்பட்டார்.

தவமும் யோகமும் புரிந்த வண்ணமாய் வடக்கே வடக்கே சென்றுகொண் டிருந்தவருக்குத் தம் தாய்நாட்டின் திசையிலே பேரொளி தோன்றியது பேராச்சரியமாகவே இருந்தது.

## தீயோ, பிரமையோ?

'ஏதோ ஒரு பெருங் காட்டுத்தீயாக இருக்கலாமோ?' என்று பிரமித்தார் ஒரு கணம். 'ஒரு பெரிய நகரமோ, பல ஊர்களோ தீக்கு இரையாகி இருக்கவேண்டும்!' என்றுகூட எண்ணி வருந் தினார் ஒரு சமயம்.

ஒளியை நோக்கிப் புறப்பட்டவர் அந்தத் தென்திசை நோக்கி நடந்தார். வழியில் சந்தித்த சிற்சிலரை நோக்கி, "அதோ அந்தத் தீ எரிகிறதே; அந்த இடம் இங்கேயிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கக்கூடும்?" என்று கேட்டார். அவர்களோ, "எங்கள் கண்ணுக் குத் தீ எரிவதாகவே தெரியவில்லையே" என்று சொல்லிவிட்டார்கள்.

பொழுது புலர்ந்ததும் இவர் கண்ணுக்கும் ஜோதி ஒன்றும் தென்படவில்லை. 'ஏதோ சித்தப் பிரமைதானோ?' என்றுகூட எண்ணினார். ஆனால் அன்று இரவிலும் ஜோதி தெரிந்தது. உடனே தொடர்ந்தார்.

மறுநாள் பொழுது விடிந்ததும் ஜோதி மறைந்துவிட்டது. அந்த இடத்திலேயே பகற்பொழுதைக் கழித்துவிட்டு இரவில் ஜோதியை நோக்கி வழி நடந்தார். இப்படி இரண்டு மூன்று தினங்கள் கழிந்தன.

இரவெல்லாம் ஜோதி மறையாது மழுங்காது தெரிந்து கொண்டே இருந்தது. இவர் கண்ணுக்கு மட்டும் தென் திசையி லேயே தோன்றிக்கொண் டிருந்தது.

## கவர்ந்து இழுக்கும் ஒளி

இவர் போய்க்கொண்டே இருந்தார். ஜோதி தெற்கு முக மாகவே இவரைச் செலுத்திய வண்ணமாக இருந்தது. 'தெற்கே தெற்கே நம்மை இழுத்துச் செல்லுகிறதே!' என்று அந்தக் கவர்ச்சி யையும் உணர்ந்துகொண்டார்,

பின்ஒருவர் காணாது
 பேதையேன் தன்அருகு
மன்னுவ(து) ஏதென்றே
 மலைத்தோம் அறியாமல்

என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டவர், 'நெறியல்லா நெறி' நோக்கிய நம் முகத்தைத் தென் திசை நோக்கித் திருப்பிவிட்டதற்கு ஒரு காரணம் இருக்கவேண்டும் என்று தீர்மானித்தார்.

அந்தத் திவ்ய ஒளியையே லட்சியமாகக் கொண்டு வேகமாக வழி நடந்தார். 'ஏதோ ஒரு புனித நிலத்திலிருந்து தழைக்கின்றது, வளர்கின்றது இந்த ஜோதி. இதன் விளை நிலத்தை விரைவில் கண்டுபிடிப்போம்' என்று நடந்து நடந்து, சரயு, கங்கை, யமுனை முதலான ஆறுகள் பாயும் வடதேசம் கடந்து, கோதாவரியும் கிருஷ்ணையும் பாயும் பிரதேசத்தையும் தாண்டித் தமிழகத்தின் வட எல்லையான திருமலைக்கே வந்து விட்டார்.

வழியிலுள்ள திவ்ய தேசங்களில் ஒன்றுடனும் தாம் கண்ட ஒளிக்குத் தொடர்பில்லை என்தைத் தெரிந்துகொண்டு, 'அன்று

உலகம் அளந்த ஆதியஞ்சோதி இன்று, "திரண்டு அருவி பாயும்" திருமலையில் இப்படிக் காட்சி வழங்குகிறதோ?' என்று எண்ண மிட்டவராய்த் திருமலை வந்து சேர்ந்ததும், ஜோதி திருமலைக்கும் தெற்கே தெரிவதைக் கண்டுகொண்டார். திருமலைக்கும் பெரும் புகழ்தரப் போகும் 'ஞான மலை'யை நோக்கி நடந்தார்.

'ஓஹோ, உபய காவேரியை மாலையாகப் பூண்டு, தென் திசை நோக்கிப் பள்ளிகொண் டிருக்கும் அழகிய மணவாளன்தான் அந்தகாரத்தில் இட்ட தீபம்போல் ஒளி வீசி அழைக்கிறான்! அவனை விட்டு எவ்வளவு தூரம் விலகிப் போய்விட்டோம்!' என்ற எண்ணத்துடன் திருவரங்கத்தை நோக்கி விரைந்தார். அழகிய மணவாளனைத் தொழுது அன்றைப் பகற்பொழுதைக் கழித்தார்.

இரவில், ஜோதி, 'தென் திசை இலங்கை நோக்கி அறிதுயில் அமர்ந்திருக்கிறானே அழகிய மணவாளன், அந்தத் தென் திசை யிலேயே பின்னும் தெரிந்தது. திருமாலிருஞ்சோலையில் கோயில் கொண்டிருக்கும் 'வளரொளி' மாயவனின் நினைவு வந்தது. 'தளர் வின்றி அங்கே போய்விட்டால் இந்த வளரொளியின் மூலஸ்தானம் தெரிந்துவிடும்' என்று எண்ணி நடந்தார்.

திருமாலிருஞ்சோலையில் அழகனை வணங்கிப் பகற்பொழுதைக் கழித்தார். இன்னும் தென் திசையிலிருந்தே ஒளிவிடும் சுடர் கிளம்பி, வானில் விளங்கக் கண்டார். பின்தொடர்ந்து போனார். தாம்பிரபர்ணி தீரத்துக்கு வந்து சேர்ந்தார்,

'ஊரைவிட்டு, நாட்டை விட்டு, வெகு தூரம் சென்றோம்; ஒளியைத் தேடி. அந்த ஒளியோ தெற்கே தெற்கே இழுத்துக் கொண்டு வந்து, நமது ஊரை நோக்கிச் செலுத்துகிறதே!' என்று ஆச்சரிய பரவச ரானார்.

## ஜோதி மறைந்தது

**தா**ம்பிரபர்ணி தீரத்தில் குருகூருக்கு வந்து சேர்ந்தார்; குரு கையைக் கடந்து செல்லும்போது, அந்தி மயங்கி, இருள் வந்து விட்டது. 'இது என்ன ஆச்சரியமோ? ஜோதி தெரியவில்லையே! மங்கி மறைந்துவிட்டதோ?' என்று வாடினார்; ஓடினார்.

திடீரென்று திரும்பிப் பார்த்ததும் ஜோதி வடக்கே தெரிந்தது. இவர் திரும்பி வந்து திருக்குருகூருக்குள் பிரவேசித்ததும் ஜோதி

மறைந்துவிட்டது. 'பொலிந்து நின்ற பிரான்' என்ற ஆதி நாதா கோயிலில் புளியமரத்திலே ஜோதி புகுந்துவிட்டதாகத் தோன்றியது.

'வடதிசையில் எவ்வளவோ தவம் செய்தேன். அந்தத் தவமே வெளிப்பட்டு வந்து, வழி காட்டுவதுபோலத் தோன்றியது. ஆனால் தெற்கே வந்து வந்து, பொருநையாற்றின் வடகரை வந்து சேர்ந்து விட்டேன். இந்த ஊரில், இந்தக் கோயிலில் ஏதோ ஓர் அதிசயம் இருக்கவேண்டும். எனக்கு வழிகாட்டி வந்த ஜோதியை இப்போது காணவில்லையே; ஐயோ ! எப்போது காண்பேனோ ?' என்று தவித்தது உள்ளம்.

பொழுது விடிந்ததும், 'இன்றைய விடிவு எனக்கும் விடிவாகுமோ?' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டு, யாத்திரிகர் தாம்பிரபர்ணியில் நீராடினர். ஆற்றிலே வெள்ளம் பெருகிச் சுழித்து ஓடியது. சங்கணிநீர்த் துறையில், தெளிந்த நன்னீரில் மூழ்கி யெழுந்தபின், அங்கே இருந்தவர்களை நோக்கி, 'இந்த ஊரில் ஏதேனும் விசேஷம் உண்டா ?' என்று வினவினர்,

மண்டலத்தில் செய்ததவம்
  வந்துவெளிப் பட்டதெனக்
கண்ட கதிரோன்
  கதிரே வழிகாட்ட

வந்த முனிவர் பெருமான்.

அவர்கள் சொன்னார்கள், தங்கள் அரசரின் குலக்குமரனைப் பற்றி;

'வாயும் திறவான்;
  மலர்க்கண் இணைநோக்கான்,
தாயை முகம்பாரான்;
  தந்தையையும் 'வா'என்னான்;
என்றுதவ முப்படித்தான்
  அன்றுமுதல் இன்றளவும்
ஒன்றும் இருப்பில்
  ஒழியாதே வீற்றிருந்தான்;
சேய்என்றால் சேயோ?
  செழுமணிதான் கொண்டநோய்

பேய்என்ருல் பேயும்அன்று;
பேசஅரி தாம்'என்ருர்.

இந்த விநோத ராஜகுமாரனைப்பற்றிய விவரமெல்லாம் கேட்டறிந்தார்; வியந்தார். 'அந்தச் சிறுவனை நான் பார்க்க விரும்புகிறேன். உங்கள் அரசரிடம் சொல்லுங்கள்' என்று சொல்லிவிட்டுப் பெரியவர், 'காரியாரின் விருப்பம் யாதோ?' என்று காத்திருந்தார்.

மந்திரிமார் விரைந்து வந்து, முனிவரை வணங்கி, 'பெரியவரே! பிள்ளையைப் பேசுவிப்பவருக்கு இந்த வளநாடு முழுமையும் உரிமையாகும் என்பது அரசர் விருப்பம்' என்று சொன்னர்கள். அப்போது சிலர், 'இந்தச் சடைமுடியானுக்குப் பொன்முடியும் பொருளாமோ?' என்று தமக்குள் தாமே பேசிக்கொண்டனர்.

வேறு சிலர், நீறுபூத்த நெருப்பென்று தெரிந்துகொள்ளாமல், மாசுபூத்த மேனி கண்டு நகைத்து, 'எத்தனையோ வைத்தியர்கள், மந்திரவாதிகள், பண்டித சிரேஷ்டர்கள் வந்து கண்டும் பயன் ஒன்றும் இல்லையே; இவரோ நமது அரசருக்கும் அரசியாருக்கும் உள்ள மனநோயைப் போக்கவல்லவர்?' என்று ஐயம் கொண்டனர்.

மறைந்த ஜோதியை மறக்க முடியாமலே கோவிலை நோக்கிப் புறப்பட்ட பெரியவரை அரசரே எதிர்கொண்டு வந்தார்; 'நல்லவரே, வருக! வல்லவரே, வருக!' என்று முகம் நோக்கி, முகமன் கூறி அழைத்துக்கொண்டு போனர்.

அரசியின் தோழியரும் அரசியாரும் முனிவர் அடிகளில் வணங்கி, 'மைந்தன் பேசினல் நாங்கள் உமக்குத் தொண்டராவோம்' என்றனர். 'உமக்கே நாம் ஆளாவோம்' என்ருர் அரசரும்.

## ஜோதிமுகம் கண்டார்

வயது முதிர்ந்த முனிவர் பெருமான், புண்ணியப் பதினறு ஆண்டு இளைஞரை முகம் நோக்கினர். தாயின் உள்ளத்தில் ஆர்வம் பொங்கித் ததும்பியது. 'பிள்ளை பேசினலே போதும்; இனிமேல் இந்தப் பிள்ளையுரிமை உமக்கே!' என்று வழியும் கண்ணீருடன் முறையிட்டுக்கொண்டாள் உடையநங்கை.

இந்த வார்த்தை ஏகாந்த யோகத்தில் இருந்த இளைஞரையே நோக்கிக்கொண் டிருந்த முனிவரின் காதில் விழவே இல்லை.

'இச்சோதி யோஎன்
இதயம் உருக்கியது,
முச்சோ தியினும்
முழுச்சோதி!' என்(று)இறைஞ்சி

முனிவர் புறஉலகை முற்றும் மறந்திருந்தார்.

ஆடினர்; பாடினர்; அங்கும் இங்கும் ஓடினர். 'இந்த மகாத்மாவை ஈன்றெடுத்த தாயல்லவா கோசலைபோன்ற இப்பெரியாள்?' என்று சொல்லிக்கொண்டே பெரியவர், உடையநங்கையை வியப்புடன் நோக்கினர்.

ஆடிஆ டிப்பாடி
அங்கோடி இங்கோடி
நாடிநா டிப்பார்த்து,
'நங்கை பெரும்பேறோ?'

என்று ஜோதிமுகத்தை மறுபடியும் நோக்கினர்.

வானத் தவர்பேறோ?
மாநிலத்துள் ளார்பேறோ?
ஞானத் தவர்பேறோ?
நன்ன வலர்பேறோ?

என்றெல்லாம் வியந்து வியந்து போற்றினர்.

கடைசியாக, 'என் பேறுதான் இது!' என்று சித்தாந்தம் செய்துகொண்டவர்போல் உரக்கச் சொன்னர்.

என்பேறும் என்பதற்கும்
ஏதுவும்இப் போதுளவால்;
அன்பேறும்; இன்புருகும்;
ஆதரவு மிக்காகும்;
அங்கம் புளகம்எழும்;
ஆனந்த வாரிஎழும்;
துங்க முகம்மலரும்
சுந்தரத்தோள் பூரிக்கும்!

என்றெல்லாம் பாடி ஆடினர்.

இவர் சொன்னதைச் சொன்னதைத் திருப்பிச் சொல்வதைக் கேட்டார்கள் அங்குள்ளவர்கள்.

சென்றுடும் தீர்த்தம்எதிர்
வந்தாடப் பெற்றதே!

என்று பலதடவை சொன்னார்.

'இச்சைப்படி யெல்லாம் இயம்புகின்றாரே, பித்தேறினாரோ?' என்று அருகேயிருந்த பண்டிதர்களும் கவன்றனர். ஆம்;

பித்தே றினர்போலப்
பேதலித்து மெய்ம்மறந்து
கொத்தேறு பூவும்
குழையும் பறித்தெறிந்தார்.

[கொத்தேறுபூ - பூங்கொத்து. பேதலித்து - மாறுபட்டு.]

இந்தப் பூக்களை ஏகாந்த யோகியான சடகோபர்மீது பொழிந்தாரா? அதுதான் இல்லை. என்ன விநோதம்! என்ன விபரீதம்!

தன்னைப் புகழ்ந்து
தனைத்தானே பூசித்து,
பின்னைத் தெளிந்து
பிழைத்தோம்!'

எனப் போற்றி நின்றார். தெற்கே கண்ட கதிரோன் இப்படி ஒரு பைத்தியத்துக்கே வழி காட்டிவிட்டானா?

# 8. தென்பால் உதித்த தெய்வச்சுடர்

சடகோபரைப் புகழ்ந்தவர் அவரைப் பூசிக்கவேண்டுமென்று கொய்த பூக்களைக் கொண்டு, தம்மைத்தாமே பூசித்துக் கொண்டார். தம்மைத்தாமே புகழ்ந்து கொண்டார். பிறகு தெளிந்து, 'என்ன பிழை செய்துவிட்டோம்!' என்று அஞ்சிச் சடகோபரைப் போற்றி நின்றார். இதற்குமேல் ஒரு பூசனையும் உண்டோ?

அயோத்தியில் தென்பட்ட ஜோதியெல்லாம் வீசுகிறதே, நம்பி! உன்தன் ஞானத் திருமுகத்திலே! என்று கதறினர்.

## பகவானே

'நீர் யாரோ? மானுடமாய்த் தோன்றவில்லையே! என்று அதிசயித்து,

கரியதிரு மேனிஎங்கே?
கைநான்கில் இரண்டெங்கே?
பெரியதொரு உந்திமலர்
பெற்றபிர மன்எங்கே?

என்று கேட்டார்.

திருமாலே தமக்கு அருள்புரிய வேணுமென்று, ஞானோபதேசம் செய்ய வேணுமென்று, இவ்வுருக் கொண்டு வந்துள்ளான் போலும் என்று கருதியவர்,

ஆகத்தில் வாழும்
அலர்மேல்மங் கைஎங்கே?

[ஆகம் (இங்கே) மார்பு - அலர்மேல் மடந்தை - திருமகள்.]

என்று கூட ஒரு கேள்வி கேட்கிறார்.

சடகோபரோ வாய் திறக்கவில்லை. அந்தத் திருவாயின் பொலிவை நோக்கியவர்,

அண்டம்உண்ட செவ்வாய்
அரவிந்தப் போ(து)இதுவோ?

[அரவிந்தப்போது - தாமரைப்பூ.]

என்று கேட்கிறார்.

'இந்தத் திருவடிகளே நமக்குப் புகலிடம்' என்று சடகோபரின் திருவடியை நோக்கியவண்ணம் நின்றுர். தமக்கும் அருள் செய்து உலகத்திற்கும் அருள் செய்யவேண்டும் என்பது குறிப்பு.

அடிமுதல் முடிவரை நோக்குகிருர். அந்த ஒளிவடிவை. 'பிரளய காலத்திலே உலகங்களை வயிற்றில் அடக்கிக்கொண்டு தான் ஓர் ஆலந்தளிரில் அடங்கிவிட்டதுபோல் மாமாயம் செய்யும் அந்த மாயப் பிரானே இந்த வடிவில் இங்கே வந்து நமக்கு அருள் செய்யக் காத்திருக்கிருன் என்று கருதி.

ஆலந் தளிரில்
அடங்கும் வடி(வு) இதுவோ?

என்று ஆச்சரியப்படுகிருர்.

'இந்த இளமைக் கோலத்தில் அடங்கும் சீலத்திற்கு ஒரு முடிவும் உண்டோ?' என்று தோன்றுகிறது.

சீலம் பலவும்
தெரிந்துணரக் கூடுமோ?

என்று தம்மைத் தாமே கேட்டுக்கொள்கிருர்.

## இந்த ஜோதியைக் காப்பாற்றுங்கள்!

இந்த மங்கள சொரூபத்திற்கு ஏதாவது இடையூறு வந்து விடுமோ?' என்ற பயமும் சற்று வருகிறது. பொங்கும் பரிவுடன் புளியமரப் பொந்தில் வளரும் இந்த ஞான ஒளியை இந்த அதிசய மரமே பாதுகாக்கும் என்று நினைக்கிருர்.

சுழித்து ஓடிக்கொண் டிருக்கும் தாம்பிர பர்ணியையும் ஒரு பார்வை பார்க்கிருர். தமிழ் முனிவனது பொதிய மலை இருக்கும் திசையையும் நோக்குகிருர்.

குன்றே! மரமே!
குளிர்புனலே! காமின்!

[காமின் - காப்பாற்றுங்கள்.]

என்று சொல்லுகிருர்.

தமிழ் வளர்த்த குன்றும், தமிழொடு பிறந்த நதியும், சடகோபருக்கு யோகம் புரிய இடம் கொடுத்த மரமும் சடகோபரின் இந்தச் சீடரின் உள்ளத்தைக் கவர்கின்றன. 'காப்பாற்றுங்கள் எங்கள் தாயை!' என்கிருர், ஞானக்கன்ருகிய சீடர்.

## கன்றும் தாயும்
### (ஓர் உவமக் கதை)

தாய்ப்பசுவை விட்டுத் தனியே திரிந்துகொண் டிருந்ததாம் ஒரு கன்று. வெகுதூரம் விலகிப் போய்விட்டது. காடும் மேடும் பள்ளமும் போய்த தவித்தது. எத்தனையோ மேய்ச்சல்–தரைகளில் பசும்புல் கிடைக்கும் என்று நம்பியது. எங்கே புல் கிடைத்தாலும், தவிடு கிடைத்தாலும் தாய்ப்பாலுக்கு ஏங்கிக் கடைசியாகத் தாய் இருக்கும் இடத்திற்கே திரும்பி வந்துவிட்டதாம். 'இதுதான் என் நிலை' என்கிறார் யாத்திரிகர்.

தன் தாயை நோக்கும்
தனிக்கன்று போல்மகிழ்ந்து

நிற்கிறார்.

குருபக்தி மேலும் மேலும் அதிகரிக்க, நமது யாத்திரிகர்,

நிலைவணங்கி மெய்ஒடுக்கி
நீதி நெறியாகத்
தலைவணங்கிக் கைஒடுக்கித்
தாழ்ந்து, முறை தப்பாமல்

வழிபடுகிறார்.

## கண்விழித்துப் பேசவைத்தார்

கடைசியாக, கண் திறவாமல் அசையாமல் இருந்த இளைஞரை விழிக்கச் செய்வோமென்று கைதட்டினர்; பல தடவை கைதட்டிப் பார்த்தார். பிறகு ஒரு பெருங்கல்லை எடுத்துச் சடகோப ருக்கு அருகே போட்டுப் பார்த்தார் இளைஞர். கண்களை மலர விழித்துக் கிழவனுரை நோக்கினர் அவர்.

உடனே மதுரகவிகள் கைகட்டி, வாய்புதைத்து, ஒரு கேள்வி கேட்டார்.

வாய்புதைத்துத் தூ(சு)ஒதுக்கி
வந்துதனை ஆட்கொண்ட
சேய்உகக்கு மாறு
திருச்செவியில் ஓர்வசனம்

தூசு - ஆடை.]

செப்பியதும், ஞானவடிவம் பதில் சொல்லிவிடுகிறது, மோனவாய் திறந்து!

"செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்பது கேள்வி. "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்பது உடனே கிடைத்த விடை.

சடகோபரின் வாக்கு, மோனத்தைப் பிளந்துகொண்டு இடி முழக்கம்போல் பத்துத் திக்கும் கேட்க முழங்கியதாம். 'புதல்வனைப் பேசுவித்த புண்ணியனே!' என்று கிழவனார் காலில் விழுந்தார்கள் காரியும் உடையநங்கையும். சக்கரவர்த்திக்குக் கப்பங் கட்டுவது போல் பொன்னையும் மணிகளையும் கொண்டு குவித்தார்கள்.

## 'என் செல்வம் எனக்கு!'

குருகூரெங்கும் ஒரே குதூகலம். வீதிதோறும் வீடுதோறும் கொண்டாட்டங்கள். திருவழுதி நாடெங்கும் செய்தி பரவி, மக்கள் உள்ளங்க ளெல்லாம் ஒரே மகிழ்ச்சிக் கடல் ஆயின.

கிழவனார், அரசர் கொடுத்த செல்வத்தைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. சடகோபர் முகம் நோக்கி, 'தெற்கே உதய சூரிய னைக் கண்டேனே! அடியேன் என்ன பாக்கியம் செய்தேன்!' என்று அழுதார், தொழுதார்.

காரியாரும் உடையநங்கையும் அங்கே வந்து,

தென்பால் உதய
    தினகரனைக் கண்டோனே!
அன்பாக யாங்கள்
    அளித்த திரவியத்தை,

கைக்கொள்ளாமல் வெறுத்ததற்குக் காரணத்தைச் சொல்ல வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

அதற்கு யாத்திரிகர், 'என் செல்வம் எனக்குக் கிடைத்து விட்டது. இதோ என் மெய்த்திரு!' என்று அவர்கள் புதல்வரையே சுட்டிக் காட்டினார். 'தவமே தனமாகக் கொண்டவருக்கு நம் பொருளும் பொருளாமோ?' என்றார் காரி, உடையநங்கையை நோக்கி.

'அப்படியானாலும் புத்திரனைப் பேசுவித்த புண்ணியர் இன்னும் நன்றாகப் பேசுவித்துக் கண்களையும் நன்றாகத் திறப்பித்து, உண்ண

வைத்து, உடுக்கவைத்து, வாழவைத்து, நமக்கும் வாழ்வருளலாமே என்ருள் உடையநங்கை.

## தெளிந்ததும் குளிர்ந்ததும்

அதுகேட்ட கிழவனுர் சொன்னுர் : 'நீங்கள் துன்பம் அடைந்து மனம் தளர வேண்டாம். உங்களுக்குப் புதல்வராகத் தோன்றி யுள்ளவர் குழந்தை - ஆசையை மாற்றவந்த எம்பெருமானே யாவர். அடியவர்கள் வாழ, அனைத்துலகும் வாழப் பிறந்தவர், இவருடன் உறவு பூண்ட பாக்கியசாலிகளாகிய உங்கள் பெயரும் உலகில் நிலை பெற்று நிலவும்.

கிழவனுரின் முகத்தையும் கண்களையும் நோக்கியவண்ணம் அந்த வாக்கைப் பருகிய தாய் தந்தையர் அவரைத் தாழ்ந்து வணங்கி, 'தபோதனரே ! நாங்கள் வாழ்ந்தோம், வாழ்ந்தோம் !' என்ருர்கள்.

நம்பி உரைத்ததுவும்
நாங்கள் மறந்துவிட்டோம்;
எம்பெருமான்! நீர் உரைக்க
இன்று தெளிந்தோமே!

என்று சொல்லிவிட்டு,

தந்தையும் தாயும்,
தநயன்என எண்ணுமல்
முந்தை முதல்வன்என
முக்கால் வலம்செய்தார்.

குருவைக் கண்டு சித்தம் தெளிந்த தபோதனரோ, 'தென்பால் உகந்து உதித்த தெய்வச்சுடரே !' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண் டிருந்தார். குருவோ சீடரைக் கண்டு சித்தம் குளிர்ந்தார். அவர் குருவைத் தேடிக்கொண் டிருந்ததுபோல் இவரும் சீடரைத் தேடித் தவித்தவர் தாமே !

# 9. இவர் காட்டிய ஒளி நெறி

'பதினறு ஆண்டுகளாக எறும்போ ஈயோ உபத்திரவம் செய்யாமல் எங்கள் கண்மணியைக் காத்துவந்தோம். இனி, ஐயா, உனக்கே அடைக்கலம்' என்று தபோதனரிடம் சொல்லி விட்டுக் காரியும் உடையநங்கையும் தங்கள் அரண்மனைக்குப் போய் விட்டார்கள். முனிவரோ, 'ஐயா! உனக்கே அடைக்கலம் அடியேன்' என்று,

தன்னைத்தான் ஒப்பாம்
 தலைமகனைத் தத்துவனை

நோக்கி விண்ணப்பம் செய்துகொண்டார்.

காரியும் உடையநங்கையும் அடிக்கடி வந்து, புதல்வரைப் பார்த்துவிட்டுப் பணித்து போவது உண்டு.

## மலைக்குகையும் மனக்குகையும்

மலைக் குகையில் பிரவேசிக்கும் சிங்கக் குட்டிபோல் புளியமரத்தில் இருந்த ஒரு பொந்தில் புகுந்து, மோனநிலையை மேற்கொண்டு ஏகாந்தபோகத்தில் இருந்து, உண்மை கண்ட அதிசயப் பிறவி இந்தச் சடகோபர் என்பதைத் தபோதனர் நன்கு உணர்ந்து கொண்டார்.

அடியவர்களை ஆட்கொள்ளும் ஆண்டவனே இவருக்கு உள்ளுறையும் அழகனாய் இவர் மனக்குகையில் இருந்தவண்ணமே வேதப்பொருள்களையெல்லாம் விரிவாய் உரைத்தான் என்பதைத் தெரிந்துகொண்டு, 'பகவானால் உபதேசிக்கப் பெற்ற இந்த ஞானக்கொழுந்தே நமக்கு ஞான தேசிகர்' என்று உறுதியாக நம்பினார் சீடர்.

## மதுரகவிகளும் நம்மாழ்வரும்

இத் தபோதனர் வேறு யாரும் அல்ல. பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவரான மதுரகவி யாழ்வாரே யாவர். இந்தக் கிழவனாரின் குருபக்தியைக் கண்டு அருள்புரிந்த சடகோபரை, ஆழ்வார்களின்

தலைவரான நம்மாழ்வார் என்று வைஷ்ணவ உலகம் போற்று கிறது.

பகவானுடைய குணங்களில் ஆழ்ந்திருந்தவர்கள் ஆழ்வார் கள் என்பது வைஷ்ணவர் கொள்கை. ஸ்ரீரங்கநாதனால், 'நம் ஆழ் வார்' என்று அபிமானிக்கப் பெற்றதால் இவருக்கு நம்மாழ்வார் என்ற திருப்பெயர் ஏற்பட்டது என்பர். பொதுமக்களும், சிறப்பாக ஸ்ரீ வைஷ்ணவ உலகமும், 'நம் ஆழ்வார்' என்று குருகூர்ச் சட கோபரைப் போற்றினர் என்பது குறிப்பு.

நம்மாழ்வார் தோன்றுவதற்கு முன்பே திருக்கோளூரில் விஷ்ணுசேனர் என்னும் அந்தணருக்குப் புதல்வராய்ப் பிறந்தவர் மதுரகவி. மதுரமான கவிகளைப் பாடும் ஆற்றல் பெற்றிருந்ததால் இப் பெயர் இவருக்கு ஏற்பட்டது என்பர்.

மதுரகவி பாடிய பாடல்களில் தம் குருவாகிய நம்மாழ்வாரைக் குறித்து, இவர் பாடியிருக்கும் பன்னிரண்டு பாடல்களே நமக்குக் கிடைத்திருக்கின்றன. 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்று தொடங்கும் இப் பாடல்களைக் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற பெயராலேயே குறிப்பிடுகிறார்கள்.

மதுரகவி ஒருவரே இப்பரந்த பாருலகில் தமக்குத் தக்க துணை என்று நிச்சயித்தார், நம்மாழ்வார். 'அதிசயப் பிறவியான இச் சிறுவர் ஒருவரே இப்பரந்த பாருலகில் நமக்குத் தக்க ஆசிரியர்' என்று நிச்சயித்துச் சீடரானார், கிழவரும் அந்தணாளருமான மதுரகவி.

இறைவனுடைய அருளால் அவனுடைய கல்யாண குணங் களையும் உலகின் இயல்பையும் அறிந்து, அநுபவித்துக்கொண் டிருந்த ஞானபூர்ணரது வாயிலிருந்து பொங்கியெழுந்த அமுதப் பாடல்களை யெல்லாம் பட்டோலை கொண்டு எழுதிவந்தார் மதுரகவி.

குரு கண்டுபிடித்திருந்த ஒளிநெறியைக் குருவின் அருளால் சீடரும் அறிந்துகொண்டார். 'பொய்ந்நின்ற ஞானமும்' என்று ஆரம்பிக்கும் நூறு பாடல்கள் நம்மாழ்வார் வாயிலிருந்து பிறந்து, திருவிருத்தம் என்னும் பெயரால் வழங்கிவருகின்றன. பெரிய திருவந்தாதி, 87 பாடல்கள் அடங்கிய ஒரு ஞானக் களஞ்சியம்; ஏழு பாடல்களால் அமைந்தது திருவாசிரியம். 1,102 பாடல்களால் அமைந்தது திருவாய்மொழி. இப்பாடல்களெல்லாம் நம்மாழ்வார்

கண்ட ஒளிநெறியை வெளியிடும் ஞானத்தமிழ் என்றும், வேதத் தமிழ் என்றும் மதிக்கப்படுகின்றன.

ஆதி வேதமாகிய ரிக்வேதத்தின் ஸாரத்தைத் 'திருவிருத்தமா'கவும், யசுர் வேதத்தின் ஸாரத்தைத் 'திருவாசிரியமா'கவும், அதர்வணவேதத்தின் திரண்ட பொருளைப் 'பெரிய திருவந்தாதி'யாகவும் இயற்றிய நம்மாழ்வார், வேதங்களில் சிறந்த ஸாமவேதத்தின் ஸாரமான சிறந்த பொருளைத் 'திருவாய்மொழி'யாகச் செய்துள்ளார் என்பது ஸ்ரீவைஷ்ணவர்களின் நம்பிக்கை,

இந்தப் பாடல்களை ஓதி ஓதி, ஆழ்ந்த பொருள்களை உணர உணர, நம்மாழ்வார் கண்ட ஒளிநெறியை நாமும் ஒருவாறு கண்டுகொள்ளலாம் என்பது உறுதி.

மதுரகவி யாழ்வாரின் கூரிய மதியும் ஆழ்ந்த பக்தியும் நம்மாழ்வார் காட்டிய ஒளிநெறியை உபதேச வாயிலாகவும் பாசுரங்களின் வாயிலாகவும் எளிதில் உணர்ந்திருக்க வேண்டும். திருவாய்மொழிப் பாசுரங்களைக் கேட்டதும் மதுரகவி யாழ்வார் ஆனந்தக் கடலுள் ஆழ்ந்தார்.

எல்லாவற்றுக்கும் மேலாக, ஞானசாரியரின் கடைக்கண் பார்வையே அநுபவ ஞானத்தை அருளவல்லது என்ற நம்பிக்கையுடன் மதுரகவி, நம்மாழ்வார் பாடல்களின் உட்பொருள்களை யெல்லாம் உய்த்துணர்ந்து, தாம் கண்ட பேரின்பத்தை உலக மெல்லாம் பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டார்.

மக்களாலும் பகவானாலும் நம்மாழ்வார் என்று அபிமானிக்கப் பெற்ற ஆழ்வாரை, மதுரகவியும் நம்மாழ்வார் என்றே போற்றி வந்ததுடன் இப்பாடல்களை நாடெங்கும் பரப்பவும் பரப்பினர். இந்த உயர்ந்த பக்திப் பாக்களை அநுபவித்த மக்களெல்லாம், 'இப்பாக்களைப் பாடியவர் நம்மெல்லோரையும் உய்விக்கும்பொருட்டே இவ்வுலகில் அவதரித் திருக்கிறார்!' என்று நம்பினர்கள்.

திருமால், திருமாமகளுடன் நம்மாழ்வாரின் அகக்கண்ணுக்கு இலக்காகி, 'என்னைப் பாடு' என்று வற்புறுத்திப் பாடச்செய்தாரென்றும், பல திருப்பதிகளிலும் எழுந்தருளி யிருக்கும் மூர்த்திகள், ஆழ்வார் வீற்றிருந்த திருப்புளியில் இலக்கு ஒருவராக வந்திருந்து, 'என்னைப் பாடு, என்னைப் பாடு!' என்று மன்றாடி, இந்த வள்ளலின்

மணிவாயிலிருந்து பிறந்த மங்கலத் தமிழால் புகழப் பெற்ருர் ளென்றும் பக்தர்கள் நம்பலாயினர்.

மதுரகவிகள், தம்முடைய ஆசிரியரே எல்லாம் வல்ல இறைவ ரென்று கருதும் அளவிற்கு நம்மாழ்வார்மீது பக்தி கொள்ளலானுர் என்பதற்கு இவர் பாடிய **கண்ணிநுண் சிறுத்தாம்புப்** பாசுரங்களே சான்ருகும். இவர் ஆசிரியரின் குறிப்பறிந்து ஒழுகிவந்தா ரென் றும், குருவுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைக் குதூகலத் துடன் செய்துவந்தா ரென்றும் குருபரம்பரைக் கதைகள் தெரிவிக் கின்றன. நம்மாழ்வாரின் அருளுக்கு உரியவரானமையின் மதுரகவி, தாம் தவத்தால் கண்டுகொள்ளாததும், எத்தகைய தபோதனர்களும் காண்டற்கு அரியதுமாகிய பரம்பொருளை மிக எளிதில் அகக்கண் குளிரக் கண்டு களித்தாரென்றும் சொல்லுகிருர்கள்.

## பெற்ரேர் பேறு

தங்கள் அருமைப் புதல்வர், 'தத்துவத்தின் முடிவுகண்ட சது மறைப் புரோகிதரா' கப் போற்றப்படுவதைத் தாய் தந்தையரும் தெரிந்துகொண்டார்களாம். அவர்கள் மதுரகவியைப் பணிந்து,

நீர்செய்த பாக்கியம்இந்
நீள்நிலத்தில் செய்தவர்ஆர் ?
பார்செய்த பாக்கியமாம்
பாவலர்கள் கோமானே
இடைவிடா(து) ஆராதித்(து)
ஏத்தினீர் ; எங்களுக்(கு)
உடையவர் நீர்அல்லால்
ஒருவர் உண்டோ ?

என்று தங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்களாம்.

காரியும் உடையநங்கையாரும் தங்கள் அரசுரிமைச் செல்வத்தை தம் அருமைப் புதல்வர், குலதனமாகப் பெற்று அநுபவிக்கவேண்டு மென்று ஆசைப்பட்டார்க ளல்லவா ? அதற்கு மாருகப் பக்தர்களுக் கெல்லாம் குலதனமாக இப் புதல்வர் தேடிவைத்த தனிப்பெருஞ் செல்வத்தைத் தாய்தந்தையரும் அநுபவித்துப் பேறு பெறவேண்டும் என்பது, இறைவன் திருவுள்ளமாகி விதியின் விசித்திரமாகவும் அமைந்துவிட்டது !

## குருவும் சீடரும்

நம்மாழ்வார் முப்பத்தைந்து ஆண்டுகள் வரைக்கும் குருகூரில் எழுந்தருளி யிருந்தார். பதினாறு வயதில் பாடல் பாட ஆரம்பித்தவர் இறைவனுடைய அழகிய குணங்களை அநுபவித்தவண்ணம் இடையிடையே தம்மை மறந்திருப்பார். அத்தகைய காலங்களில் மதுரகவி பெரும் பொறுமையுடனும் பரமபக்தியுடனும் பணி செய்து கொண்டிருப்பார். பிறகு உணர்ச்சி உண்டாகி, நம்மாழ்வார் தொடர்ந்து பாடுவார். இப்படி நாலு பிரபந்தங்களையும் பாடி முடிக்கப் பத்தொன்பது ஆண்டுகள் ஆயின என்பர்.

'எண்ணிரண்டு ஆண்டாக எறும்பு ஈக் கடியாமல் கண்ணின் மணியாக'த் தாய் தந்தையர் பாதுகாத்துத் தம்மிடம் ஒப்படைத்த பரமஞான மேதையைச் சீடரான மதுரகவி தாமே தாய் தந்தையர் நிலையிலிருந்து பத்தொன்பது ஆண்டுகள் பாதுகாத்து வந்தாரென்பது பக்தர் பெருங்கதைகளில் வேறு எங்கும் காணாத ஓர் அதிசயப் பெருநிகழ்ச்சி யாகும்.

நம்மாழ்வாருக்கு வயது முப்பத்தைந்து ஆனதும் தாம் வந்த காரியம் முடிந்துவிட்டது என்ற உணர்ச்சி ஏற்பட்டது. இறைவனை அகக் கண்ணால் கண்டு,

தருவாய் பரமதம் ;
தந்தொழியப் போகேல் ?

என்று வழிமறித்தாராம்.

பகவானோ, பொய்கையாழ்வார் தொடங்கி, ஆழ்வார்கள் வரிசையில் வந்த பாடல்களையும், இவர் (நம்மாழ்வார்) பாடிய பாடல்களையும் நம்மாழ்வாரே உலகத்திற்கு உபதேசிக்க வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டானும். நம்மாழ்வாரோ, அந்தப் பணியைத் தம் சீடராகிய மதுரகவி செய்து முடிப்பார் என்று இறைவனுக்கு உறுதி கூறினராம்.

அது கேட்ட மதுரகவி, 'சடகோபரே ! என்னையும் கொண்டு சென்றால் நாயேன் குறை முடியும்' என்றார், அப்போது நம்மாழ்வார்,

மெய்யன் பனைநோக்கி
மேதினியில் உள்ளோர்க்கு,

செய்ய மறைத்தமிழைச்
செப்புவதார் நீஅல்லால்?

என்று பதில் சொல்லிவிட்டு மேலும், 'நீர் ஏங்கி நைந்து தடுமாற வேண்டாம். நாம் உரைத்தவண்ணமே நமது ஒளிநெறித் தமிழை நீர் பிரசாரம் செய்துகொண் டிருக்க வேண்டும். 'பொலிந்து நின்ற பிரான்' நம்முடன் பொலிந்து நிற்பதுபோல், நாமும் உம்முடனே நித்தியமாகப் பொலிந்து நிற்போம்' என்று உறுதி கூறினர்,

## தோன்ருத் துணை

பிறகு மதுரகவி தமது துயரத்தை விட்டு, மன அமைதியுடன், 'அடியேன் உம் அடைக்கலப் பொருள்; எனக்கென்று ஒரு தனி விருப்பம் உண்டோ?' என்று பதில் சொன்னர். நம்மாழ்வார் என்றும் அழியாத பேரின்ப வடிவாயுள்ள பரமபத வாசி யாகிவிட்டபோதிலும், மதுரகவியுடன் பிரியாது பொலிந்து நிற்பதைச் சீடரும் கண்டு, உணர்ந்து, ஆனந்தபரவச ரானுர்கள்.

அன்று, முதல் முதல் அயோத்தியிலே கண்ட ஜோதி, பதினறு வயதுள்ள பாலனுக்குக் காட்சியளித்துப் பத்தொன்பது ஆண்டு தம்முடன் வாழ்ந்ததுடன் தம் வாழ்நாள் முழுமையும் தோன்ருத் துணையாக உதவி வருவதை அறிந்துகொண்ட சீடருக்குக் குருபக்தி மேலும் மேலும் பொங்கிக்கொண் டிருந்தது. 'சடகோபரே! நாராயணன் உமக்குத் தெய்வம்; நமக்குத் தெய்வம் நீரே!' என்று குருவை அகக் கண்ணுக்கு இலக்காக்கிக் கொண்டு உறுதி கூறினர் மதுரகவி.

மதுரகவிகள் தம் ஆசாரியருக்குச் சரம கைங்கரியங்களைச் செய்த பின் அவரது ஞாபகத்தையே கொண்டு, காலங் கழிக்க விரும்பினர். அந்த ஞாபகத்தையே கொண்டு பிரசாரம் செய்து உலகப் பணி புரியவும் ஆசைப்பட்டார்.

## மதுரகவிகளின் கைங்கரிய நெறி

நம்மாழ்வாரின் புனித நினைவு இப்போது இவருள்ளத்தில் சிறிதும் துன்பத்தை உண்டாக்கவில்லை, ஞானசிரியரை நினைத்து,

நினைத்து, 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்ற நிலையை அடைந்துவிட்டார். நம்மாழ்வார் காட்டிய பேரொளிப் பெரு நெறியில் துன்ப இருளுக்கும் இடம் உண்டோ?

நம்மாழ்வார் தம்மோடு கலந்து, உயர்ந்த வேதாந்தப் பொருள்களையெல்லாம் கலையாக்கிப் பரிமாறியது, தம்மைக் கால்வாயாகக் கொண்டு உலகத்திற்கு நன்மை விளைக்கவேதான் என்ற கருத்து மதுரகவிகளுக்கு மேலும் மேலும் உறுதிப்பட லாயிற்று. இந்த நினைப்பிலே அனலிடு நெய்போல் அகம் கரைந்து நின்றார்.

நம்மாழ்வாரின் உயர்ந்த குணங்களை யெல்லாம் எண்ணமிடும் போது அவை தம்முடைய குணங்களுடன் இரண்டறக் கலந்து விட்டது போன்ற உணர்ச்சியையும் மதுரகவிகள் அடைந்தார். 'எந்தக் குரு எந்தச் சீடருக்குத்தான் இத்தகைய பேருதவி செய்தார்? செய்திருக்க முடியும்' என்ற எண்ணத்துடன், 'யானே பெருஞ் செல்வன்! யானே பெருஞ்செல்வன்!' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார்.

நம்மாழ்வார் அருளிச்செய்த பாடல்களை யெல்லாம் ஆழ்ந்து ஆழந்து, ஓதி ஓதி, உணர்ந்து உணர்ந்து, பிரசாரம் செய்து செய்து, தாம் இன்புறுவீது (தம்மைச் சூழ்ந்துள்ள) உலகு இன்புறக் கண்டு பெரும் பேறு பெற்றார்; பேரின்பம் அடைந்தார்,

நாளடைவில் 'இந்தப் பேரருள் - நெறியை நன்கு பரப்புவதற்காக நம்முடைய ஞானசிரியருக்கு அழகிய கோயில் ஒன்றும் அவசியமாகும்' என்று தீர்மானித்தார். கோவிலில் ஆழ்வார் விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்தார்; திருமண்டபம் முதலான கைங்கரியங்களையும் செய்து முடித்தார். நம்மாழ்வார் விக்கிரகத்தை அலங்கரிப்பதற்கு ஆணிப்பொன்னால் அணிகள் பலவும் செய்தார், முற்றத் துறந்த இம்முனிவர் பெருமான்.

ஒவ்வொரு நாளும் தாமே பூசனை புரிந்து வந்தார்.

மஞ்சன நீராட்டி,
மலரால் அருச்சித்து,
'தஞ்சம் அடியேற்(கு) உன்
சரணார விந்தம்' என
நாவில் அமுதூறப் போற்றி நின்றார்.

ஆண்டாண்டு தோறும் நம்மாழ்வாருக்குத் திருவிழாக்கள் சிறப்புடன் நடைபெறவும் ஏற்பாடு செய்து வைத்தார். மதுரகவி யாழ்வாரின் குருபக்திக்கு ஈடான குருபக்தியைச் சமய உலகம் கண்டதில்லை யென்று அறிஞர்கள் பெரிதும் வியந்தனர்.

மதுரகவி யாழ்வார் நம்மாழ்வாருக்குக் கோவில் கட்டி வைத்த தால், பெருமாள் சந்நிதியைக் காட்டிலும் குருபக்திக்கு அறிகுறி யாக மதுரகவி அமைத்த ஆழ்வார் சந்நிதி மிகவும் பிரசித்தம் ஆகிவிட்டது. திருக்குருகூரின் பிரசித்தமான பெயரும் ஆழ்வார் திருநகரிதானே?

மதுரகவிகள் கட்டிய பழைய கோவில் இன்று காணப்பட வில்லை. இப்போதுள்ள ஆழ்வார் கோவில் அந்தக் கோவில் சிதைந்தபின் அமைக்கப் பெற்றதொரு பிற்காலக் கோவிலே யாகும்.

ஆனல் நம்மாழ்வாரின் பிரபந்தங்களையும் இதர ஆழ்வார்களின் பிரபந்தங்களையும் பேணிப் பாதுகாத்து, 'இதோ உங்கள் ஞானப் பூங்கோயில்! வந்து வழிபாடு செய்யுங்கள்!' என்று காட்டிக் கொடுத் திருக்கிருரே, இந்தக் கோயிலுக்குச் சிதைவும் இல்லை, அழிவும் இல்லை. இது என்றும் புதியதாய், என்றும் இனிமையாய், என்றும் வளரும் ஒளிமயமாய் விளங்கி, மக்கள் அனைவருக்கும் பெருவாழ்வு அளிக்கும் சிறப்பு வாய்ந்தது.

நம்மாழ்வார் அருளால் தமக்குக் கிடைத்திருந்த நாலாயிர திவ்யப் பிரபந்தங்களையும் மதுரகவி யாழ்வார் பிரகாசப்படுத்திய போதிலும், தமக்குச் சிறப்பாக உதவிய திருவாய்மொழியைப் பிர காசப்படுத்துவதில் இவர் விசேஷ சிரத்தையை மேற்கொண்டார். இப்படி மதுரகவிகள் நீண்ட காலம் இவ்வுலகில் வாழ்ந்தார் என்பர்.

'உம்மைப் பிரிந்திருக்க முடியாது. நானும் கூட வருவேன்' என்று குருவிடம் விண்ணப்பித்துக்கொண்டவர், தமது ஞானு சிரியருக்கு உகந்த நற்பணிகளில் ஈடுபட்ட பின், நெடுங்காலம் வாழ்ந்தார் என்பது கவனிக்கத் தக்கது.

திருவாய் மொழியும்
செகத்துளோர்க்(கு) ஓதி
இருநூற்(று) நாற்பதாண்(டு)
இங்கிருந்து வாழ்ந்தருளி

என்றுகூடக் கதை கேட்கிருேம்.

மதுரகவிகள் தம்முடைய சீடரான பராங்குச தாசரிடத்தில் ஆழ்வார் கோவிற் பணிகளையும் பாடற் பணிகளையும் ஒப்படைத்து, ஆசாரியனையே தியானித்துக்கொண்டு பரமபதவாசி யானுர்.

ஸ்ரீ வைஷ்ணவம் என்ற பக்திமதமே ஸாராம்சத்தில் மதுர கவி வாயிலாக நமக்குக் கிடைத்திருக்கும் நம்மாழ்வாரின் அருள் நெறிதான், ஒளிநெறிதான். இதே கருத்தை ஸ்ரீ வேதாந்த தேசிக ரும், 'அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு, துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார் கட்கே' என்று தமது வாக்கிலே தெளிவாக வெளியிட்டிருக்கிருர்.

# 10. புலவர்கள் செருக்கொழிந்து போற்றியது

நம்மாழ்வாருக்கு ஆலயத் திருப்பணி செய்து பூசனையும் விழாவும் சிறப்புடன் நடத்திவந்த மதுரகவி ஆழ்வாரின் குருபக்தியைப் பொதுமக்கள் பெரிதும் வியந்து பாராட்டி வந்தனர். எனினும் அக்காலத்துச் சங்கப் புலவர்களில் சிலர், கல்விச் செருக்குடன் மதுர கவி யாழ்வாரையும் அவரது நல்லாசிரியரான நம்மாழ்வாரையும் சாதாரண பக்தர்களாகவே மதித்தும் புறக்கணித்தும் வந்தார்கள் என்று குருபரம்பரைக் கதைகளில் சில கூறுகின்றன.

ஒரு சமயம் மதுரகவி யாழ்வார் நம்மாழ்வாரின் ஆண்டு விழாவைச் சிறப்பாக நடத்தி, அவர் விக்கிரகத்தை ஊர்வலம் செய்வித்தார். பல்லாயிரக் கணக்கான மக்கள் தரிசனத்திற்குப் பல ஊர்களிலிருந்தும் வந்திருந்தார்கள். மதுரகவி யாழ்வார் வழக்கம்போல் விருது கூறத் தொடங்கி, 'இந்த உலகின் இருள்நீங்கத் தமிழ்மறை உதவிய ஞானசூரியர் வந்தார்! வேதங்களை யெல்லாம் ஓதாது உணர்ந்த உத்தம ஞானக் கடல் வந்தார்! தெய்வப்புலமை வாய்ந்த ஞானமலை வந்தார்!' என்று சொல்லிக்கொண்டே போனர்.

## பூசல் விளைத்த புலமை

அப்போது அங்கே வந்திருந்த புல்வர்களில் சிலர், மதுரக்வி யாழ்வாரைத் தடுத்து, நிறுத்தி, 'உம்முடைய குருவைத் தெய்வப் புலவர் என்றும், ஞானசூரியன் என்றும், எப்படிச் சொல்லலாம்? அவர் இயற்றிய பாடல்கள் எந்தச் சங்கத்தில் எப்போது அரங் கேற்றப்பட்டன?' என்று கேள்விகளை அடுக்கினர்கள். மதுரகவிகள் எவ்வளவோ சமாதானமாகச் சொல்லிப் பார்த்தும், அவர்கள் மேலும் மேலும் கூச்சலிட்டார்கள்; பூசலிட்டார்கள்.

மதுரகவிகள் மனம் வருந்தி, நம்மாழ்வாரின் விக்கிரகத்துடன் திரும்பிக் கோவிலுக்கு வந்து சேர்ந்தார். பிறகு இந்த ஆழ்வார் தம்முடைய நல்லாசிரியரைக் குறித்த தியானத்தில் சிறிது நேரம்

ஆழ்ந்திருந்தார். அச்சமயம் ஒரு கிழவனுர் இவர் முன் தோன்றினுர். மதுரகவி யாழ்வார் அந்தக் கிழவரை வணங்கினுர்.

கிழவனுர் மதுரகவிகளின் முகம் நோக்கி, "ஏன் இப்படி வாட்ட மடைந்திருக்கிறீர்" என்று கேட்டார். அதற்கு மதுரகவிகள், "சடகோபரின் அருள் வாக்கையும் சில புலவர்கள் இகழ்ந்து பேசத் துணிந்தனரே !" என்று பெருமூச்சுவிட்டுப் பதில் சொன்னுர்.

கிழவனுர் சிரித்துக்கொண்டே, "அதற்காக நீர் சிறிதும் வருந்த வேண்டாம். கண்ணன் கழலிணை துணைபுரியும்!" என்று சொல்லி மறைந்துவிட்டார். மதுரகவி யாழ்வார் ஆச்சரியத்துடன் தியானத்தில் இருந்து விழித்துக்கொண்டார்,

கண்ணன் கழலிணை
நண்ணும் மனம்உடையீர்!
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே

என்ற திருவாய்மொழிச் செய்யுளை ஓதியவண்ணம் எழுந்து நின்ருர்.

கிழவனுரின் உருக்கொண்டு வந்தவர் நம்மாழ்வாரே என்று நம்பிய மதுரகவி யாழ்வார், 'கண்ணன் கழலிணை' என்ற பாசுரத்தை ஓலை முறி ஒன்றில் எழுதிக்கொண்டு சங்கப் புலவர்களிடம் சென்ருர். அவர்கள், 'செய்தி என்ன ?' என்று கேட்கவே, இவர் தாம் கொண்டு வந்த ஓலையை அவர்களிடம் கொடுத்தார்.

அந்தப் புலவர்கள் அந்தச் செய்யுளை வாசித்துப் பார்த்து விட்டு மதுரகவியாரை நோக்கி, 'இதையா எங்கள் சங்கத்தில் அரங்கேற்றப் போகிறீர் ?' என்று பரிகசித்தார்கள். 'இதை உங்கள் சங்கப்பலகையில் வைத்துத்தான் பார்க்கலாமே !' என்ருர் மதுரகவி. அதற்கு அவர்கள், 'இத்தகைய பாசுரங்கள் சங்கப் பலகையில் இடம் பெறுவதற்கு ஏற்ற சிறப்புடையன அல்ல' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்கள்.

சங்கப் பலகை சிறியதாக இருந்தும் தக்கவழி விரிந்து, சங்கப் புலவர்களுக்கெல்லாம் இடம் கொடுத்ததாகவும், அந்தப் பலகை மதுரைப் பொற்ருமரைக் குளத்தில் சங்கப் புலவர்களைத் தாங்கி மிதந்துகொண் டிருந்ததாகவும் கதை வழங்குகிற தல்லவா ? மதுரகவி யாழ்வார் அந்தச் சங்கப் பலகைமீது, 'கண்ணன் கழலிணை' என்ற நம்மாழ்வார் பாசுரம் எழுதிய அந்த முறியை

வைத்துவிட்டாராம். உடனே பலகை தன் மீதிருந்த புலவர்களை யெல்லாம் தண்ணீரில் தள்ளிவிட்டதாம்.

புலவர்களெல்லாம் நீந்திக் கரையேறி வந்து, அதிசயமாகப் பார்க்கும்போது, மதுரகவியார் தன்மீது இட்ட செய்யுளை மாத்திரம் தாங்கிக்கொண்டு அந்தப் பலகை மிதந்துகொண் டிருந்ததாம். அதனால் சங்கப் புலவர்கள் திருவாய்மொழியின் சிறப்பையும் அதனை இயற்றிய பெரியாரின் தெய்வப் புலமையையும் தெரிந்துகொண்டார்களாம்.

## பக்தி கமழும் புலமை

பிறகு அப் புலவர்கள் நம்மாழ்வாரைச் சிறப்பித்துப் பாடினர்களாம்: ஒவ்வொருவரும் தனித்தனியாக ஒவ்வொரு வெண்பா இயற்றுவதாகத் தீர்மானித்துப் பாடியபோதிலும், எல்லா வெண்பாக்களும் ஒரே மாதிரியாக, ஒரு வெண்பாகவே அமைந்துவிட்டனவாம். அந்த வெண்பா :

சேமம் குருகையோ, செய்யதிருப் பாற்கடலோ,
நாமம் பராங்குசமோ, நாரணமோ—தாமம்
துளவோ, வகுளமோ, தோள்இரண் டோ,நான்கும்
உளவோ, பெருமான்! உனக்கு?

புலவர்கள் அத்தனை பேரும் நம்மாழ்வார் விஷயத்தில் பாடிய பாடல்களெல்லாம் ஒன்றுக்கொன்று, ஒரு சொல்லாவது ஓர் எழுத்தாவது, எழுத்தின் உறுப்பாவது சிறிதும் பேதமில்லாமல் மேலே காட்டிய பாடலாகவே இருக்கக் கண்டு, 'இது என்ன அற்புதமோ?' என்று அதிசயப்பட்டார்கள். பாட்டின் பொருளும் அவர்களுக்கு அதிசயமாகவே இருந்தது.

'ஆழ்வாரே! உமது உறைவிடம் திருக்குருகூரோ? திருப்பாற் கடல்தானோ?' என்று பிரமிக்கும்படி இந்த ஞான சூரியனின் உதயத்தால் சூழ்நிலையே அதிசயமாக மாறுபட்டுத் தோன்றுகிறதாம்.

அவருடைய திருப்பெயர்களில் ஒன்று பராங்குசன் என்பது. மதயானைகள் போலச் செருக்கித் திரிந்து, தவறான கொள்கைகளால் மக்களைக் கெடுத்து வருவோரை அடக்கும் அங்குசம் போன்றவர் ஆதலின் 'பராங்குசன்' என்ற பெயர், இவருக்கு உண்டு என்பர். இப்போது சங்கப் புலவர்கள், 'ஆழ்வாரே! உம்முடைய திருநாமம்

பராங்குசன் என்பதோ, நாராயணன் என்பதுதானே?' என்று கேட்கிறார்கள்.

நம்மாழ்வாருக்கு உரிய மாலை, வகுளம் என்ற மகிழம்பூ மாலை. இப்போது சங்கப் புலவர்களின் மனக்கண்ணுக்கு அந்த மாலை, 'பகவானை அணி செய்யும் பச்சைப் பசுந்துழாய் மாலைதானே? என்றுகூடத் தோன்றுகிறது. எனவே, 'தாமம் (மாலை) துளவோ, வகுளமோ?' என்று கேட்கிறார்கள்.

நம்மாழ்வாரின் திருவுருவத்தை அகக் கண்ணால் தரிசிக்கத் தரிசிக்க அதிசயத்தின் மேல் அதிசயம் தோன்றுகிறது. அவருக்குத் 'தோள்கள் நான்கு!' என்ற பிரமைகூட ஏற்படுகிறது. 'பக்தரோ? பகவானோ?' என்ற ஐயமும் பிறந்துவிடுகிறது.

புலவர்கள் கடைசியாகச் செருக்கொழிந்து நம்மாழ்வாரைப் புகழ்ந்து பாடிய அந்த வெண்பாவை மதுரகவி யாழ்வார் கண்டு, கரை கடந்த உவகை அடைந்தாராம். புலவர்களும் இனி நண்பர்களாகித் தமது பிரசாரத்திற்குத் துணைபுரியக் கூடும் என்ற பெரு நம்பிக்கை பிறந்துவிட்டதாம், மதுரகவியார் உள்ளத்திலே.

புலவர்கள் நம்மாழ்வாரின் தெய்வப் புலமையை உணர்ந்து கொண்ட பின் அப் பெரியாரின் திருவாய்மொழியைக் கசடறக் கற்று உணர்ந்தார்களாம். நாவினால் மட்டும் அல்ல; ஒருமை உள்ளத்தால் கற்றுணர்ந்தார்கள். 'உள்ளத்தோடு உடம்பு சேர்ந்து ஓதியது!' என்று சொல்லும்படி ஓதி உணர்ந்துகொண்டார்களாம்.

அந்த நிலையில் அவர்கள், 'தெய்வப் புலமைக்குக் கல்விப் பெருமை நிகராமோ?' என்ற கருத்தை உள்ளிட்ட செய்யுள் ஒன்றை இயற்றினார்களாம்;

ஈயா டுவதோ கருடற்(கு) எதிரே?
இரவிக்(கு) எதிர்மின் மினியா டுவதோ?
நாயா டுவதோ? உறுவெம் புலிமுன்?
நரிகே சரிமுன் நடையா டுவதோ?
பேயா டுவதோ அழகூர் வசிமுன்?
பெருமான் வகுளா பரணன் அருள்கூர்ந்(து)
ஓவா து உரையா யிரமாம் மறையின்
ஒருசொற் பெறுமோ உலகிற் கவியே?

[இரவிக்கு - சூரியனுக்கு. வெம்புலி - கொடிய புலி, கேசரி - சிங்கம். அழகூர்வசி - அழகு ஊர்வசி: அழகுள்ள ஊர்வசி. வகுளாபரணன் - மகிழம்பூ மாலையை ஆபரணமாகக் கொண்ட நம்மாழ்வார்.]

பறவைகளுக்கு இறைவனுகிய கருடனுக்கு முன் ஈயின் ஓட்டம் சிறப்புறுமோ? அப்படித்தான் சாதாரணப் புலவர்களின் வாக்கும் அருட்புலமை பெற்ற பெரியோர்களின் வாய்மொழிக்கு முன்!

சூரியனுக்கு முன் மின்மினிப் பூச்சி, புலிக்குமுன் நாய், சிங்கத்தின் முன் நரி இப்படியே பெரியோருக்கு முன் செருக்கு மிக்க சாமானியப் புலவரும்! அழகிற் சிறந்த ஊர்வசி ஆடுகிருள் என்று பேயும் ஆட்டம் போட்டால் சபைகூடி ரசிக்க முடியுமோ?

இப்படி யெல்லாம் தெளிந்தவர்களாய்ப் புலவர்கள் நம்மாழ்வாரின் சிறப்பை நன்கு விளக்குவதில் மதுரகவி யாழ்வாருடன் ஒத்துழைப்பதாக வாக்களித்தார்களாம். இத்தகைய கற்பனைகளாலும் நம்மாழ்வாரின் சிறப்பையும் திருவாய் மொழியின் சிறப்பையும் குருபரம்பரைக் கதைகள் விளக்க முயல்வதைக் காண்கிறோம்.

திருவாய்மொழியையும், அதிலே இனிது புலனுகும் சடகோபரின் அருளையும் எட்டுத் திக்குகளிலும் கொட்டி முழக்க வேண்டுமென்று ஆசைப்பட்டது மதுரகவியார் உள்ளம். திருவாய்மொழியை இவர் பாராயணம் செய்யாத நாள் இல்லை என்றும், நம்மாழ்வாரின் திருவிழாவையும் ஆண்டு தோறும் மிகச் சிறப்புடன் நடத்தி வந்தார் என்றும் குருபரம்பரை வரலாறுகள் தெரிவிக்கின்றன.

## திருவள்ளுவர் ஆதியரும் புகழ்ந்தனராம்

சங்கப் புலவர்களுடன் மதுரகவி யாழ்வாரைத் தொடர்பு பெறச் செய்து நம்மாழ்வாருக்கும் திருவாய்மொழிக்கும் தனிப் பெருஞ் சிறப்பைக் கற்பித்திருக்கும் பக்தர்களின் மனோபாவம், புலமைச் செருக்கே இல்லாத திருவள்ளுவர், ஔவையார் முதலானவர்களும் நம்மாழ்வாரைப் போற்றிப் பாராட்டி யிருப்பதாகக் கற்பனைகள் செய்து பார்த்திருக்கிறது.

தெய்வப் புலமைத் திருவள்ளுவரும், தமிழ்ப் பாட்டியாகிய ஔவையாரும், இடைக்காடரும் ஒரு நாள் ஓரிடத்தில் சந்திந்தார் களாம். (இந்நாளில் கால ஆராய்ச்சி செய்யும் அறிஞர்கள் இம் மூவர் காலமும் ஒரு காலம் அல்ல என்று நிச்சயித்திருப்பது குறித்துப் பக்த மனோபாவத்திற்குக் கவலையே யில்லை !) அம் மூவருள் ஔவை யாரும் இடைக்காடரும் திருவள்ளுவனாரின் நுண்ணறிவுத் திறனை யும் அவர் இயற்றியுள்ள திருக்குறளின் சிறப்பையும் பன்னிப் பன்னிப் பாராட்டினார்களாம்; 'உமது தெய்வப் புலமையே புலமை!' என்றார்களாம்.

அப்போது திருவள்ளுவர் அவ்விருவரையும் நோக்கி, 'நம் மாழ்வாரின் தெய்வப் புலமை பெரிதும் வியக்கத்தக்கது' என்று சொல்லி,

குறுமுனிவன் முத்தமிழும் என்குறளும் நங்கைச்
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்

[குறுமுனிவன் - அகஸ்தியர். முத்தமிழும் - இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழும். நங்கைச் சிறுமுனிவன் - உடைய நங்கையின் புதல்வராகிய நம்மாழ்வார். சேய் - குழந்தை.]

என்ற ஒரு புதுமைக் குறளையும் பாடிவைத்தாராம்.

பிறகு ஔவையார் திருவாய் மொழியின் சிறப்பைக் குறித்து,

ஐம்பொருளும், நாற்பொருளும் முப்பொருளிற் பெய்தமைத்த
செம்பொருளை, எம்மறைக்கும் சேட்பொருளைத்—தண்குருகூர்ச்
சேய்மொழிய தென்பர் சிலரியான் இவ்வுலகின்
தாய்மொழிய(து) என்பேன் தகைந்து

[சேட் பொருள் - சேண் பொருள்; உயர்ந்தபொருள். சேய் - இளமகன், தகைந்து - தடுத்து.]

என்று ஒரு வெண்பாவை இயற்றினாராம்.

இடைக்காடரும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியைச் சிறப் பித்து ஒரு வெண்பா இயற்றினாராம். 'குருகூர்ச் சேய்' என்ற நம் மாழ்வாரின் தமிழை இவ்வுலகின் தாய்மொழி என்றார் ஔவையார். இடைக்காடரோ, 'ஆராய்ந்து கற்பதற்குரிய நூல்கள் பல இவ்வுல கில் உண்டு என்பது உண்மைதான்: எனினும் அவை யாவும் திருவாய்மொழியின் சாய்மொழி (சாயையாகிய மொழி) என்றே நான் சாதிப்பேன்' என்னும் பொருளை அமைத்து,

சேய்மொழியோ தாய்மொழியோ செப்பில் இரண்டுமொன்(று); அவ்
வாய்மொழியை யாரும் மறையென்ப—வாய்மொழிபோல்
ஆய்மொழிகள் சால உளஎனினும், அம்மொழிகள்
சாய்மொழியென் பேன்யான் தகைந்து

என்ற வெண்பாவைப் பாடினராம்.

## யோகியார் புகழ் மாலை

நம்மாழ்வாரின் தனிப் பெருஞ் சிறப்பை விளக்குவதற்கு வேறொரு கதையும் வழங்கி வருகிறது. பொருநை ஆற்றின் வட கரையில் யோகி ஒருவர் வசித்து வந்தார். அவர் நாய் ஒன்றை வளர்த்து வந்தார். அந்த நாய் ஒவ்வொரு நாளும் நம்மாழ்வார் அவதரித்த, தென் கரையிலுள்ள குருகூருக்குச் சென்று, அப்பதியிலுள்ள பக்தர்கள் உண்டு மிகுந்ததைத் தின்று வயிற்றை நிரப்பிக் கொண்டு திரும்பி வருவது உண்டாம்.

ஒருநாள் நாய் குருகூரினின்றும் வழக்கம்போல் குறித்த நேரத்தில் திரும்பி வரவில்லை. யோகியார், 'நாய்க்கு யாது நேர்ந்ததோ?' என்று மனம் வருந்தி ஆற்றின் கரையோரத்தில் வந்து நின்று பார்த்துக்கொண் டிருந்தார். அப்பொழுது அந்த நாய் ஆற்றில் நீந்தி வந்துகொண் டிருந்தது. யோகியார் மகிழ்ச்சியடைந்தார்.

ஆனல் நாய் நட்டாற்றில் வந்துகொண் டிருக்கையில் திடீரென்று ஆற்றில் வெள்ளம் பெருகிவிட்டது, நாய் நீந்திக் கால் ஓய்ந்துபோய், நீருள் மூழ்கி வெளியே கிளம்பிற்று. யோகியார் வருத்தத்துடன் உற்று நோக்கிய வண்ணமாக இருந்தார்.

அப்பொழுது நாயின் மண்டை வெடித்து, அவ் வெடிப்பின் வழியாக ஓர் ஒளிவடிவம் எழுந்து, மேல் நோக்கிச் சென்றதாம். அமாவாசை இருட்டில் சூரிய ஒளிபோல் தோன்றியதாம் அந்த ஒளி.

அந்த அற்புதக் காட்சியைக் கண்ட யோகியார், 'நாயும் பெறுதற்கரிய பேறு பெற்றுவிட்டதே!' என்று அதிசயித்தார். 'அது என்ன ஞான சாதனத்தை அல்லது யோக சாதனத்தைப் பெற்றிருந்தது?' என்று தம்மைத் தாமே கேட்டுக்கொண்டார். 'ஒன்றும் இல்லாதிருந்தும் ஆழ்வார் அவதரித்த திருப்பதியிலுள்ள பரம பாகவதர்களின் எச்சிலைத் தின்றதனல் அல்லவோ நாயும் வீடு பெற்றது?' என்று ஒரே அதிசயத்தில் ஆழ்ந்தார்.

'இது தவசிகள் யோகிகள், ஞானிகள், முதலானவர்களுக்கும் எளிதில் சித்திக்காத சிறப்பல்லவா?' என்று எண்ணி எண்ணி நெஞ்சுருகிக் கண்ணீர் விட்டு அழுதார். நம்மாழ்வாரின் வைபவத்தை நினைத்து நினைத்து உருகி உருகி நின்றார்! திசை நோக்கித் தொழுதார்,

அந்த உருக்கமும் அழுகையும் தொழுகையும் ஒரு பாட்டாகப் பிறந்தன:

வாய்க்கும் குருகைத் திருவீதி
எச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரம பதமளித்
தாய்!அந்த நாயோ(டு)இந்தப்
பேய்க்கும் இடமளித் தால்பழு
தோ?பெரு மான்மகுடம்
சாய்க்கும் படிக்குக் கவிசொல்லும்
ஞானத் தமிழ்க்கடலே!

இந்த அற்புத நிகழ்ச்சியும் நம்மாழ்வாரின் தெய்வப் புலமைக்குச் சான்றாகி, வடமொழி, தமிழ்மொழி முதலான பன்மொழிப் புலவர்களும் செருக்கொழிந்து குருகூருக்கு வந்து வந்து, ஓதாது மறை உணர்ந்து, தமிழ் செய்த இந்த உத்தம பக்த ரத்தினத்தைப் போற்றிப் புகழ்ந்து பேறு பெறுவதற்கு ஒரு பெருந் தூண்டுகோலாக உதவியது என்பர்.

# 11. பக்தர்கள் சூட்டிய மணி மகுடம்

தென்பாண்டி நாட்டில் பொருநை ஆற்றங்கரையில் உள்ள திருக்குருகூர், ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வாரின் அவதாரச் சிறப்பினால், ஆழ்வார் திருநகரி என்ற பெயரும் புகழும் பெற்றிருக்கிற தல்லவா? இந்தப் புகழுடன், சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி ஏறக்குறைய 50 ஆண்டுகளுக்கு முன்பு வரை நம் தாய்மொழியை வளர்த்த பெருமக்கள் வாழ்ந்து, தொண்டாற்றிய புகழும் இவ்வூருக்கு உண்டு. நம்மாழ்வார் காலத்துக்கு முன்பே தமிழ் நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணைகளில் ஒன்றாக இருந்தது இவ்வூர் என்று கருதுவதும் மிகையாகாது.

## ஆழ்வார் திருநகரியும் தமிழ் வளர்ச்சியும்

'சமீப காலம்வரை நம் தமிழன்னையைப் போற்றி, அவளது பேரணிகலன்களைப் பாதுகாத்து, புத்தணிகலன்களைப் புனைந்து தமிழ்நாட்டிற்கும் இலக்கிய உலகிற்கும் அரிய தொண்டுகள் இயற்றி வந்த பெருமுது நகர்களுள் குருகூர் எனப் பெயர் பெற்ற இந்த ஆழ்வார் திருநகரி தலைசிறந்து விளங்குவ தாகும்' என்று ஆராய்ச்சி அறிஞர் ஒருவர் கூறுவது தமிழிலக்கியம் வளந்த கதையில் இடம் பெறவேண்டிய ஒரு முக்கியமான செய்தியாகும். எனவே, இத் திருப்பதி மத பக்தர்களே யன்றி மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் உள்ள தமிழர்கள் அனைவரும் தரிசித்து இன்புறுதற்குரிய பெருந் தகுதியையும் இவ்வூர் பெற்றிருப்பதாக மேலே சொன்ன அறிஞர் தொடர்ந்து கூறியிருப்பதும் பொருத்தமே யாகும்.

இவர் மேலும் கூறுகிறார் :

'டாக்டர் உ. வே. சாமிநாதையர், மகா வித்வான் ரா. ராகவையங்கார் முதலியோர்களுக்குப் பண்டைத்தமிழ்க் கருவூலங்கள் அகப்பட்ட புண்ணிய ஸ்தலம் இதுவே யாகும், சுமார் 50 ஆண்டுகட்கு முன்பு வரை இந் நகரினர் குன்றாத ஊக்கங்கொண்டு, தமிழ் கற்றுத் தமிழ்க் கருவூலங்களைப் பேணிவந்தனர். குருகூரை அடுத்துள்ள வாசிகள் பலரும் இங்கே வந்து, பிரதிகள் எழுதுவித்துப் பெற்றுக்கொள்வது

வழக்கமாயிருந்தது. இவ்வூரிலுள்ள வித்வான்களை அழைத்துச் சென்று, பிரதிகள் எழுதுவித்துக் கொள்ளுதலும் உண்டு. எனவே, இப் பிரதேசத்திலுள்ள பிரதிகள் வித்துவ பரம்பரையினருள் ஒரு சாராரால் பெரும்பாலும் மரபு நெறி தவருது எழுதப்பட்டனவாம். தமிழ் இலக்கிய சரிதம் எழுதப் புகுவார் இத் திருப்பதியின் இலக்கிய வாழ்க்கையை மறந்துவிட முடியாது. பண்டை இலக்கியங்களைக் கற்றுப் பெயர்த்தெழுதிப் பின் - சந்ததியினருக்கு இந்நகரினர் உதவியது போலவே, தமிழ்க் கலைவாணியின் மணிமகுடமாகிய கம்பராமாயணத்தையும் இவர்கள் போற்றி வந்தார்கள்.' (திரு வையாபுரிப் பிள்ளையின் 'கம்பன் காவியம்' : பக்கம் 58).

இப்படித் தமிழைப் போற்றி வளர்த்து வந்த குருகூர் வாசிகள் பொதுவாக வைணவ சமயத்திலும் சிறப்பாக நம்மாழ்வாரின் பாசுரங்களிலும் கொள்கைகளிலும் பெரிதும் ஈடுபாடு உடைய வர்கள். இத்தகைய குருகூர், நம்மாழ்வார் காலத்திலே திருவழுதி வளநாடு என்ற தென்பாண்டிநாட்டின் ஒரு பகுதிக்குத் தாயூராக இருந்தது.

திருவழுதி வளநாடு என்பது சுமார் பத்து மைல் நீளமும் ஐந்து மைல் அகலமும் உள்ள - அதாவது ஐம்பது சதுரமைல் பரப்புள்ள - சிறு நிலப்பகுதிதான். தாமிரபருணி ஆற்றை இரு புறமும் அடுத்துள்ள இடம் இந்த நாடு.

## சமரச வளநாடு

திருவழுதி வளநாட்டில் நவதிருப்பதிகள் என்று பிரசித்தி பெற்றிருக்கும் ஒன்பது திருப்பதிகள் உண்டு. இவையெல்லாம் திருமாலுக்கு உரியன. இத் திருப்பதிகள் வருமாறு: (1) திருக்குருகூர். (2) ஸ்ரீ வைகுண்டம், (வைகுந்தம்), (3) வரகுணமங்கை (நத்தம்) (4) திருப்புளிங்குடி, (5) பெருங்குளம் (குளந்தை) (6) தென் திருப்பேரை (திருப்பேர் எயில்) (7) இரட்டைத் திருப்பதி (தொலை வில்லிமங்கலம்), (9) திருக்கோளூர். இந்தத் திருப்பதிகளை நம்மாழ் வார் பாடியிருக்கிறுர்.

குரு பரம்பரை வரலாறுகளில் நம்மாழ்வாரின் ஏழு தலைமுறை குறித்த பிரஸ்தாபத்தைக் காண்கிறோம். நம்மாழ்வார் காலத்துக்குச் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கி, இம் மரபினர்

திருவழுதி வளநாட்டைப் பாண்டிய மன்னர்களுக்கு உட்பட்ட குறுநில மன்னராக ஆண்டு வந்திருக்கவேண்டும்.

இவர்கள் வேளிர் மரபினர். சேரசோழ பாண்டியர்களுடன் பெண் கொண்டு கொடுத்து வந்த மற்றை வேளாளர் தலைவர்களைப் போல், ஆழ்வார் மரபினரும் பாண்டிய அரசர்களோடு உறவு பூண்டிருந்தார்கள் என்று ஊகஞ் செய்யலாம். இவர்கள் தங்கள் உறவினர்களும் அரசர்களுமான அக்காலத்துப் பாண்டியர்களைப் போல் வீரராகவும் வைணவர்களாகவும் இருந்தார்கள்.

போர்க்காரி, காரி, காரிமாறன் என்ற பெயர்கள் நம்மாழ்வாருடன் முற்றுப்பெறும் மூன்று தலைமுறைப் பெயர்க ளாகும். காரி மாறன் என்ற நம்மாழ்வாரின் பாட்டனாராகிய போர்க்காரியார், பாண்டியர்களுக்குப் படைத்துணைவராக இருந்து, போர்க்களத்தில் வீரம் விளைத்தவர் என்று கூறுவதும் உண்டு. இந்தப் பரம்பரையில் வந்த காரிமாறன் என்ற நம்மாழ்வார், ஞான வீரராகி ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் பரமாசாரியராகவும் போற்றப் பெறுகின்றார்.

நவதிருப்பதிகள் என்ற திருமால் கோயில்க ளெல்லாம் நம்மாழ்வாரின் முன்னோர்களால் கட்டப்பெற்றோ, சீர்திருத்தப் பெற்றோ இருக்க வேண்டும். சில திருப்பதிகளில் பழைய காலத்துச் சிவன் கோயில்களும் காணப்படுவதால் ஆழ்வாரின் முன்னோர் வைணவர் களாயினும் சிவன் கோயில்களிலும் பணி செய்திருக்கக் கூடும் என்று ஊகிப்பவரும் உண்டு. வீரராகவும் வைணவராகவும் இருந்த அவர்கள் அந்தப் பழைய காலத்தில் வீரவைணவர்களாகவும் இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. நம்மாழ்வாரின் பாசுரங்களிலேயே சர்வசமய சமரசக் கருத்துக்களைக் காண்கிறோம்!

பாண்டிய மன்னர்கள் பெரும்பாலும் சைவ சமயிகளாகவே இருந்தனர். சிற்சிலர் வைணவர்களாகவும், பரம வைணவர்க ளாகவும் இருந்தார்கள். அக்காலத்தை ஒட்டி வாழ்ந்த ஆழ்வார் மரபினரும் பரம வைணவர் ஆகியிருக்கலாம். எனினும் மறந்தும் புறந்தொழாத வீர வைணவர்கள் ஆகி வாழ்ந்திருக்க வேண்டும் என்பதற்கு ஆதாரம் இல்லை.

குருகூரிலேயே ஒன்பது லிங்கங்கள் கோயில் கொண்டிருந்த தாகவும், அதனால் இவ்வூரை நவலிங்கபுரம் என்ற பெயரால் சைவர்கள் வழங்கியதாகவும் கூறுவது உண்டு. அவை இடிந்து

போய்விட்டன ; பௌத்த, சமணப் பள்ளிகளும் இவ்வூரிலும் சுற்றுப் புறங்களிலும் ஒரு காலத்தில் இருந்தன என்பது தெரியவருகிறது. மதுரகவி யாழ்வார் தோன்றிய திருக்கோளூரில், 'சமணன் திடர்' ஒன்று இருந்தது. அதிலிருந்து சமண முனிவர் உருவம் ஒன்றைத் தோண்டி எடுத்திருக்கிறார்கள்.

திருப்புளிங்குடியில் வசித்த நூலாசிரியர் ஒருவர் - பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் - சமணராக இருந்தார் என்பதும் தெரியவருகிறது. எனவே. இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும் மற்றும் வலிந்து வாது செய்வீர்களும்' என்ற நம்மாழ்வார் வாக்கிலிருந்து, ஆழ்வார் திருநகரியில் ஆழ்வார் காலத்திலேயே சைவர்களோடு சமணரும் சாக்கியரும் காணப்பட்டனர் என்பதை ஊகிக்கலாம்.

## நம்மாழ்வார் காலநிலை

**மா**றன் என்ற நம்மாழ்வாரின் பெயர் பாண்டியர்களுக்குரிய பொதுப்பெயர் என்பதையும், கி. பி. 7-8-ஆம் நூற்றாண்டுகளிலிருந்த பாண்டிய மன்னர் சிலர், இந்தப் பெயரைத் தம் இயற் பெயராகவும் கொண்டிருந்தார்கள் என்பதையும் நாம் நமது கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பெரியாழ்வாரின் சீடனான மாறவர்மன் என்ற ராஜசிம்ம பாண்டியனின் மகனான மாறன் சடையன் 8-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் என்பது சரித்திரச் செய்தி. இந்தப் பெயரை மாறன் சடகோபன் என்ற பெயருடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

இந்த அரசனுடைய ஆட்சித் தொடக்கத்தில் மாறன்காரி என்ற ஒரு மந்திரி இருந்தான் என்று சரித்திர ரீதியில் ஊகஞ் செய்வோரும் உண்டு. மாறவர்மன், மாறன் சடையன், மாறன் காரி இம்மூவரும் பரம வைணவர்கள். இவர்கள் எல்லோரும் பெரியாழ்வாரால் வைணவர்கள் ஆகி இருக்கக் கூடும்.

மாறன்காரி, யானை மலையில் கற்கோயில் குடைந்து, நரசிம்ம மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தவன் என்பது சரித்திரச் செய்தி. இந்த மாறன் காரியின் பெயரைக் காரி மாறன் என்ற நம்மாழ்வாரின் பெயருடன் ஒப்பிடலா மல்லவா? பாண்டியர்களுக்குரிய பராங்குசன் என்ற பெயரும் நம்மாழ்வாருக்கு உண்டு.

இதனால் அந்தக் காலத்துப் பாண்டிய அரசர்களுக்கும் அமைச்சர்களுக்கும் அவர்களுக்கு உட்பட்டிருந்த குருகூர்க் குறுநில மன்னர்களான நம்மாழ்வார் மரபினருக்கும் உள்ள தொடர்பு ஊகிக்கப்படலாம். இனி நாம் நம்மாழ்வார் காலநிலை குறித்து ஆராய்ச்சியாளர்களின் கருத்துக்களைத் தெரிந்துகொள்ள முயல்வோம்.

ஆழ்வார்களின் வரலாறுகளைக் கூறும் நூல்களில் இராமானுஜர் காலத்தவரான கருடவாகன பண்டிதர், வடமொழியில் எழுதியிருக்கும் திவ்யசூரி சரிதமும், பின்பழகிய பெருமாள் சீயர் இயற்றிய குருபரம்பரையும், இவற்றின் தொன்மை பற்றி முக்கியமானவை என்று ஆராய்ச்சியாளர்களால் மதிக்கப்படுகின்றன. இந்த நூல்கள் இரண்டிலும் நம்மாழ்வார் ஒருவருக்கன்றி ஏனைய ஆழ்வார்களுக்குப் பிறந்த மாதங்களும் நட்சத்திரங்களுமே கூறப்படுகின்றன. ஆனால் நம்மாழ்வாருக்கு மட்டும் அவதார காலம் விவரமாகக் கூறப்பட் டிருக்கிறது. அதாவது, நம்மாழ்வார் கலியுகம் பிறந்த 43-ஆவது நாளில் தோன்றினராம்.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் நம்மாழ்வார் தோன்றினர் என்பதைத் தமிழறிஞர் எவரும் ஒப்புக்கொள்ள முடியாது. 'தொன்று தோன்றிய யாவையும் தூயன' என்று கருதுவோரின் மனநிலைதான் சிறிதும் நம்புதற்கு முடியாத காலத்தை நம்மாழ்வார் விஷயத்தில் கற்பனை செய்திருக்க வேண்டும்.

நம்மாழ்வாரை வைணவர்கள், 'குலபதி' என்றும், 'கூடஸ்தர்' என்றும் மதித்துப் போற்றுவதால் இத்தகைய முதன்மை கருதி, இவரது அவதார காலமும் மிகவும் முற்பட்டதாக இருக்க வேண்டும் என்று பக்தர்கள் தீர்மானித்திருக்கலாம். 'ஆதி குருவாய் அம்புவியில் அவதரித்தான் வாழியே' என்று வாழ்த்தப் பெறும் பெரியார் பிற்காலத்தவராக இருக்க முடியுமா?' என்பது பக்தர் மனோபாவம்.

தங்கள் காலத்தில் வழங்கி வந்த செவிவழிச் செய்தியை அடிப்படையாகக் கொண்டே ஆழ்வார்களின் வாழ்க்கை வரலாறுகளைக் குரு பரம்பரைக்காரர் எழுதி வைத்திருக்க வேண்டும். பிற்காலத்தவர்களான ஆசாரியர்களின் வரலாறுகளை அறிந்திருப்பதுபோல் ஆழ்வார்களின் வரலாறுகளையும் குருபரம்பரை ஆசிரியர்கள் தெளிவாக அறிந்திருக்கக் கூடும் என்று எப்படிச் சொல்ல முடியும்?

ஆழ்வார்களின் பிறப்பு முறை பற்றியும், கருத்து வேற்றுமைகள் ஆசாரியர்களுக்கிடையே காணப்பட்டன. முதலாழ்வார்களுக்கும் திருமழிசை ஆழ்வாருக்கும் நம்மாழ்வார் காலத்தால் பிற்பட்டவர் என்றும், குலசேகரர், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடி ஆழ்வார், திருப்பாணர், திருமங்கை மன்னன் இவர்களுக்கு முற்பட்டவர் என்றும் மணவாள மாமுனி அபிப்பிராயப்படுகிறார். இதற்கும் வேதாந்த தேசிகரின் அபிப்பிராயத்திற்கும் இடையே வேற்றுமை உண்டு. இன்றைய ஆராய்ச்சியாளர்களோ நம்மாழ்வாரையே கடைசி ஆழ்வார் என்று கருதுகிறார்கள்.

ஸ்ரீமான் கோபிநாத ராயர் பிரசித்தி பெற்ற ஆராய்ச்சியாளர்களில் ஒருவர். இவர் தமது, 'ஸ்ரீவைஷ்ணவர்களின் சரித்திரம்' என்ற ஆங்கில நூலில் கி. பி. 9-ஆவது நூற்றாண்டின் முற்பகுதியில் நம்மாழ்வார் வாழ்ந்திருக்கக் கூடும் என்று கூறியுள்ளார். தமிழிலக்கிய சரிதத்தைத் தகுந்த முறையில் ஆராய்ச்சி செய்து வருவோர் கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டளவில் சைவ வைணவப் புதுமலர்ச்சி ஏற்பட்டது என்று கூறுகிறார்கள். இந்தப் பொதுக்கருத்திற்கு இசைவாகவே இருக்கிறது ஸ்ரீகோபிநாத ராயரின் அபிப்பிராயம். எனினும், இந்த அபிப்பிராயத்தை இன்றைய ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொள்ள வில்லை.

தேவாரமும் திருவாசகமும், ஆழ்வார்களின் பிரபந்தங்களும் மொழி நடையிலும் கருத்துக்களிலும் ஒத்திருப்பதைத் தமிழிலக்கிய மாணவர்களும் எளிதில் உணர்ந்துகொள்வர். இவ்விரண்டு சமய, மறுமலர்ச்சிகளும் ஏறக்குறைய ஒரே காலப் பகுதியில்தான் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று கோவை ஆராய்ச்சி அறிஞர் திரு. சி. எம். ராமசந்திரன் செட்டியார் கூறுவது உண்மைதான்.

இந்தச் சமய மலர்ச்சி சங்க காலத்திற்குப் பிந்தி ஏற்பட்டது என்பதிலும் கருத்து வேற்றுமை இருக்கவே முடியாது. எனவே, நம்மாழ்வார் கலியுகத் தொடக்கத்தில்—அதாவது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்தி - வாழ்ந்தார் என்ற குருபரம்பரைக் கருத்தை எவரும் இந்நாளில் ஒப்புக்கொள்வ தில்லை.

சங்க இலக்கியத்தின் தொடர்ச்சியாகவே சமய இலக்கியங்களும் வளர்ந்து வந்தபோதிலும், சங்கத் தமிழ்நடைக்கும் ஆழ்வார், நாயன்மார்களின் மொழிநடைக்கும் வேற்றுமை அதிகம் என்பது

வெளிப்படை. ஆழ்வார் - நாயன்மார் காலத்தில் வடமொழிக் கலப்பு அதிகரித்துத் தமிழும், இன்றைய தமிழுக்கு இசைந்தவாறு மாறத் தொடங்கிவிட்டதைக் காண்கிறோம். சங்க காலத்திற்குச் சில நூற்றாண்டுகளுக்குப் பின்பே ஆழ்வார்களும் நாயன்மார்களும் பொதுஜன ரஞ்சகமான தங்கள் பாடல்களைப் பாடியிருக்க வேண்டும் என்பதற்கு இப் பாசுரங்களின் நடையே ஒரு பெருஞ் சான்றாகும். ஆழ்வார் - நாயன்மார்களில் நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் காலத்தால் பிற்பட்டவர்கள் என்பதே இன்றைய ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

சங்கத் தமிழையும் தனித்தமிழ் என்று சொல்ல முடியாது. சங்கத் தமிழிலும் வடமொழிக் கலப்பு உண்டு. சங்க காலத்திலும் சமய உணர்ச்சி உண்டு; சைவ வைணவக் கருத்துக்களும் நிலவி வந்தன. சங்க காலத்திலேயே வடநாட்டுக் கொள்கைகளும் தமிழர் கொள்கைகளும் கலக்கத் தொடங்கிவிட்டன. தமிழகத்தின் வட எல்லை வேங்கடமாக இருந்தபோதிலும் இமயமே நமது சமயத்திற்கும் பண்பாடுகளுக்கும் வட எல்லையாகும் என்ற கருத்து, சங்க காலத் தமிழறிஞர்களின் உள்ளத்திலேயே உதயமாகிவிட்டது.

அந்த நிலையில் சமண பௌத்தக் கொள்கைகளும் தெற்கே வந்து ஆதிக்கம் செலுத்தத் தொடங்கின. அதன் விளைவாகப் புது நூல்களும் தோன்றலாயின. சமணக் கருத்துக்களைத் தொல்காப்பியத்திலும் திருக்குறளிலும் தெளிவாகக் காண்கிறோம். இக் கருத்துக்களும் கொள்கைகளும் சைவ வைணவக் கொள்கைகளைத் தாக்கின. இந்த மோதுதலின் விளைவாக, சைவ வைணவ சமயங்களும் ஜைன பௌத்த சாரமான சில கொள்கைகளை ஏற்றுக் கொள்ளும் நிலைமையும் ஏற்பட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் தோன்றியவர்கள் சைவ சமயாசாரியர்களும் ஆழ்வார்களும்.

இவர்களுடைய கொள்கைகளுக்கிடையே அதிக வேற்றுமை இல்லை. இவர்கள் இஷ்ட தெய்வம் குறித்துத் தங்களுக்கிடையே கருத்து வேற்றுமை யுடையவர்களாக இருந்தபோதிலும், சமண பௌத்த சமயங்களை எதிர்ப்பதில் கருத்தொருமித்து ஈடுபடலாயினர். இவர்கள் தோற்றுவித்த பக்தியுகத்தின் இறுதியில் வாழ்ந்தவர்கள் நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் என்பது இன்றைய ஆராய்ச்சியின் போக்கு.

கி. பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முன்பே சைவ வைணவக் கொள்கைகள் சமண பௌத்தக் கொள்கைகளின் சாரத்தைக் கவர்ந்துகொண்டு, வீழ்ச்சி நிலையிலிருந்த அந்தச் சமயங்களுடன் போராடவும் தொடங்கிவிட்டன. சமண பௌத்தர்கள் முழுமுதற் கடவுள் - உண்மையைக் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், புத்தர் முதலானவர்களின் உருவங்களை வழிபட்டு வந்தனர்; சைவ வைண வர்களும் உருவ வழிபாட்டைக் கைக்கொண்டு இதன்வாயிலாகக் கடவுளுண்மையையும் வற்புறுத்தி வந்தனர். இதனால் கோவில் வழிபாடு, சைவ வைணவ சமயங்களுக்குப் பேர் அரணாக அமைந்தது. கோவில் நாகரிகமாக வளர்ந்தது பண்டைத் தமிழ் நாகரிகம். இந்த நாகரிகத்தின் கொம்பிலே கனிந்த இருபெருங் கனிகளாகக் கருதத் தக்கன நம்மாழ்வாரின் திருவாய் மொழியும் மணிவாசகரின் திருவாசகமும்.

கொல்லாமை என்ற அஹிம்ஸா தர்மம், சமண சமயத்தின் உயிர் நிலையாகும். இதைத் 'தயா மூல தர்மம்' என்பர். இத் தர்மத்தைச் சைவமும் வைணவமும் தங்கள் சாரமான கொள்கைகளில் ஒன்றாக மேற்கொண்டன. அறங்களுக் கெல்லாம் ஆணிவேர் அருள் அல்லது அஹிம்ஸைதான் என்ற கொள்கையை இறைவன் அருளால் இறைவன் தாளை வணங்கவேண்டும் என்ற கொள்கை யினரான சைவ வைணவர்கள் எளிதில் ஒப்புக்கொண்டு, ஒரு புதிய உணர்ச்சி - வேகத்துடன் முன்னேறி வந்தனர். இந்த நிலையில் சமணர்களாக இருந்த அரசர்களையும் மக்களையும் வைதிக மதங்களான சைவ வைஷ்ணவ சமயங்களுக்குத் திருப்பிக் கொண்டுவருவது எளிதாயிற்று. இத்தகைய பெருந்தொண்டு புரிந்த ஆழ்வார் - நாயன்மார்களில் நம்மாழ்வாருக்கும் மாணிக்க வாசகருக்கும் ஒரு சிறப்பான ஸ்தானம் உரியதாகும்.

ஆறாவது நூற்றாண்டை நாம் பக்தி யுகத்தின் அருணோதய காலம் என்று கருதலாம். ஒரு நூற்றாண்டில் பக்தி மதம் அதிசய வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும். ஏழாவது நூற்றாண்டில்,

நாம் ஆர்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்

என்று வெற்றிச் சங்கு ஊதியது பக்தி மதம், அப்பர் சுவாமி வாயிலாக.

யாதும் ஊரே ;
யாவரும கேளிர்
[கேளிர் - உறவினர்]

என்ற பெருங்கொள்கைமீது எழுப்பப்பெற்ற தமிழ் நாகரிகம் என்ற அரண்மனே, ஆழ்வார் நாயன்மார்களின் திருப்பணிகளால் ஒரு பக்திப் பெருங்கோயிலாகத் தோற்றமளித்தது. இந்தக் கோயிலுக்கு ஞான கோபுரம் அமைத்தவர்கள் நம்மாழ்வாரும் மாணிக்க வாசகரும் ஆவர்.

வைணவர்கள், நம்மாழ்வாருக்கு அளித்திருக்கும் ஸ்தானத்தைச் சைவர்கள் திருஞானசம்பந்தருக்கே அளித்திருக்கிருர்கள். ஸ்ரீ வைஷ்ணவத்தின் பரமாசாரியர் நம்மாழ்வார் என்று கூறுவது போல் சைவ உலகின் தனிநாயகம் திருஞான சம்பந்தர் என்பர். எனினும், உணர்ச்சி - வேகத்திலும் கருத்துக்களின் முதிர்ச்சியிலும் தத்துவச் சிறப்பிலும் மாணிக்கவாசகரையே நம்மாழ்வாருடன் ஒப்பிட்டுப் பேசுவது பொருந்தும்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழியை நினேவூட்டுவது திருவாசகம். 'வாசகம்' என்ற வடசொல்லே 'வாய்மொழி' என்று தமிழில் மொழி பெயர்க்கலாம். நம்மாழ்வார் இயற்றிய திருவிருத்தம் மாணிக்கவாசகர் இயற்றிய திருக்கோவையாரை நினேவூட்டுகிறது. இந்த இருவர் பாசுரங்களில் வெளியிடப்பெறும் கருத்துக்களுக்கும் தத்துவக்கொள்கைகளுக்கும் விசேஷ ஒற்றுமை உண்டு.

திருக்கோவையாரில் மணிவாசகப் பெருமான் வரகுண பாண்டியனேக் குறித்துப் பிரஸ்தாபிக்கிருர். இந்த வரகுணன் கி. பி. 862 முதல் 880 வரை ஆண்ட இரண்டாம் வரகுண பாண்டியன் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. ஆகவே மணிவாசகப் பெருமான் ஒன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பர். இவர் சிவபக்தி இயக்கத்தின் சிகரஜோதி என்று கருதத் தக்கவர். விஷ்ணு பக்தியின் சிகர ஜோதியான நம்மாழ்வாரின் காலத்தை ஆராயும்போதும் இந்த வரகுண பாண்டியனேக் குறித்துப் பிரஸ்தாபிக்கிருர்கள் ஆராய்ச்சியாளர்கள்.

சீவரமங்கையையும் வரகுண மங்கையையும் நம்மாழ்வார் பாடியிருக்கிருர். வரகுண பாண்டியனேடு தொடர்புடையன இவ்வூர்களின் பெயர்கள் என்பதை எளிதில் ஊகித்துக்கொள்ளலாம்.

'மங்கை என்பது இயற்பெயர் அல்ல, மங்கலம் என்பதன் மரூஉ என்பர். உத்தரகோச மங்கை என்ற ஊர்ப் பெயரும் இப்படியே மருவியிருக்க வேண்டும். ஜடிலவர்மன் என்ற பாண்டியன் வேலங்குடி என்ற ஊரைச் சீவரமங்கலம் என்று மாற்றித் தானம் கொடுத்த தாகக் கல்வெட்டிலிருந்து தெரியவருகிறது. வேலங்குடி ஸ்ரீவர மங்கலாகி ஸ்ரீவரம்ங்கை என்றும் மருவி, வழங்கி வந்த காலத்தில் நம்மாழ்வார் இவ்வூரைப் பாடியிருக்க வேண்டும்.

வரகுண மங்கையையும் இவர் பாடியிருப்பதால் இந்த வரகுண பாண்டியனுக்கும் இவர் பிற்பட்டவரே யாவர். இவ்வூர்ப் பெயருடன் தொடர்புடைய வரகுணன் கி. பி. 780 முதல் 820 வரை ஆண்ட முதலாவது வரகுணனே யாவன். எனினும், நம்மாழ்வாரை ஒன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராகக் கருதமுடியாது.

பெரியாழ்வாருக்கும் ஆண்டாளுக்கும் திருமங்கை மன்னனுக்கும் காலத்தால் பிற்பட்டவர் நம்மாழ்வார் என்பதே இன்றைய ஆராய்ச்சியின் போக்கு. ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் மாணிக்க வாசகர் காலத்தை ஒட்டி நம்மாழ்வார் வாழ்ந்திருக்கக் கூடும்.

## இருள் கிழித்த ஜோதி

இவர் காலத்திலே பல அரசர்கள் - ஏகாதிபத்தியம் நடத்தினவர்கள் - தங்கள் பதவியை இழந்து பிச்சையெடுத்து வயிறு வளர்க்கும் நிலையை அடைந்தது உண்டு என்ற குறிப்பை இவர் வாக்கிலே காண்கிறோம்.

ஒருநா யகமாய் ஓட
உலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காலர்,
சிதைகிய பானையர்.

[ஓட - நெடுங்காலம் ஓடும்படி. உலகுடன் - தன்னுடன் உலகம் பொருந்தும்படி. கருநாய் - கறுப்பு நிறமுள்ள நாய். கவர்ந்த - கவ்விய. காலர் - காலையுடையவர். சிதைகிய பானையர் - ஓட்டைப் பானைகளை யுடையவர்.]

பிச்சை ஒழியப் பிழைப்பிற்கு வழியில்லாமல், (தொழில் செய்யத் தெரியாதல்லவா ?) இவர்கள் குடியானவர்கள் வீட்டிலே பிச்சைக்

குப் போகிறார்களாம். அதாவது, பதவி இழந்த தேர்வேந்தர்கள் கால் நடையாக ஏர் வேந்தர்களான குடியானவர்கள் வீட்டிலேதான் சோறு கிடைக்குமென்று போகிறார்களாம்.

'பகல் புறப்பட லஜ்ஜித்து, இருளிலே புறப்பட்டதால் இருட் செறிவு போலே கிடந்த நாய்களின் வாயிலே காலையிடுகையாலே அவற்றாலே கவ்வப்பட்ட காலையுடையவர்' என்பது பெரியவாச் சான் பிள்ளையின் வியாக்கியானம். ஒரு நாயகமாய் உலகம் ஆண்ட வர் என்ற பட்டம் போய்க் 'கருநாய் கவர்ந்த காலர்' என்று சொல்லப்படுகிறார்களாம்.

கண்ட இடங்களில் கழித்துப் போட்ட ஓட்டைப் பானைகளை எடுத்துக்கொள்கிறார்களாம், கூழோ கஞ்சியோ வாங்குவதற்கு. அதிர்ஷ்ட காலத்திலே பொற்கலத்தில் போஜனம் செய்தவர்கள், முன்பு ராஜாக்களும் தங்களைக் காண முடியாமல் சமயம் பார்த்திருக் கும்படி ராஜாதிராஜராக இருந்தவர்கள், இப்போது தங்களால் ஆளப்பட்ட குடிகள் காணப் பிச்சை கொள்கிறார்களாம். முன்பு இவர்கள், ராஜாக்களுக்கு ராஜ்யங்களைப் பிச்சையாக வழங்கக்கூடிய வர்கள்; ரராஜாக்கள் இரத்தினங்களைக் காணிக்கையாகக் கொண்டு வந்தாலும் அநாதரித்து வேலையாளைக் கண்காட்டி வாங்கி வைத்துக்கொள்ளச் சொன்னவர்கள்.

எவ்வளவு மதிப்போடு இருந்தவர்கள் எவ்வளவு எளிமைப் பட்டுப் பசியின் எமபாசத்திற்குப் பயந்து, பிச்சை யெடுக்கிறார்கள்! பகலில் மட்டுமல்ல, இரவில் நிலவு இருந்தாலும் பிச்சையெடுக்கப் புறப்பட மாட்டார்களாம். வெள்ளை நாயானால் இருட்டிலும் கண்டு கொள்ளலாம். இருளிடையே இருள் திரண்டாற்போல் கறுத்த நாய் கிடப்பதை அறியாமல் வீரக் கழல் இட்ட காலை அந்த நாய் கவ்வப் பிச்சைக்குப் புறப்படுகிறார்களாம். இப்படி யெல்லாம் வியாக்கியானம் செய்வதுண்டு, மேலே காட்டிய நம்மாழ்வார் வாக்கிற்கு.

பல்லவப் பேரரசு வீழ்ந்துவிட்டது. சோழர் பேரரசு இன்னும் ஓங்கவில்லை. முடிகள் உருண்டன. சிங்காதனங்கள் புரண்டன. இத்தகைய இருண்ட காலத்தில் இருள் கிழித்து உதயம் செய்த ஜோதி நம்மாழ்வார். இத்தகைய நெருக்கடியான நிலையில் மக்களுக்கு ஒரு பெருநெறி, ஒளி நெறி - காட்டுகிறார் இப்பெரியார்.

கவி வாணர்களால் நாட்டின் குணாதிசயங்களை ஆக்குவதும் மாற்றுவதும் சாத்தியமாகும் என்று கூறுவது உண்டு. அண்மையில் தேசபக்தி - ஆவேசத்தை எழுப்பி நம் மக்களுக்குச் சுதந்தர விருப்பத்தை உண்டாக்கிய பாரதியாரின் கவிதைப் பணியை நாடு அறியும். பக்தி - உணர்ச்சியைத் தீவிரமாக்கி, நம் மக்களின் குணாதிசயத்தை மேம்படச் செய்து, சரித்திரப் போக்கையும் நாகரிகப் போக்கையும் மாற்றியமைத்த பக்த கவிஞர்களில் நம்மாழ்வாரின் ஸ்தானம் ஒரு தனிச்சிறப்பு வாய்ந்ததாகும்.

## வாழ்வுக் கதை

இவரது உண்மைச் சரிதம் இவரது பாசுரங்களிலேயே காணப்படுவதாகும். குருபரம்பரைக் கதைகளில் காணப்படும் செவி வழிச் செய்திகளையும் ஆராய்ச்சி வாயிலாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். எனினும் அதிக அளவில், நம்மாழ்வார் அருளிய கருத்துக்கள், கொள்கைகள் ; அவை மக்களை எவ்வாறு சீர்ப்படுத்தியிருக்க வேண்டும் என்பவை போன்ற உண்மைச் சரித அம்சங்களைப் பெரும்பாலும் இவர் வாக்காகிய பாசுரங்களிலேயே கண்டு கொள்ளக் கூடும்.

மேலை நாட்டினர் தம் கவிஞர்களைப்பற்றி வாழ்க்கைக் குறிப்புகள் எழுதி வைத்திருப்பதுபோல் நம் முன்னோர் எழுதி வைக்கவில்லை என்பதை நாம் நன்கறிவோம். அதற்காக நாம் வருந்திக் கொண்டிருப்பதில் பயன் இல்லை. அவ்வித வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புக்களைக் காட்டிலும் அகவாழ்வு வரலாறு அல்லது கருத்துச் சரிதமே மேலானது என்பது இன்றைய ஆராய்ச்சியாளர்களின் அபிப்பிராயம். எனவே நம்மாழ்வார் பாசுரங்களில் காணும் கருத்துக்களையும் கோட்பாடுகளையும் வைத்துக்கொண்டு, ஆராய்ச்சி செய்து உண்மைச் சரிதத்தை ஒருவாறு கண்டுகொள்ளலாம்,

குருபரம்பரைக் கதைகளைப் பாசுரங்களில் காணும் குறிப்புக்களைக் கொண்டே சோதித்துப் பார்க்க வேண்டும். கவி வழிச் செய்திகளுடன் செவி வழிச் செய்திகளை ஒப்பிட்டு ஆராயும்போது நம்மாழ்வாரை உண்மையாகத் தரிசனம் செய்வது இயலாததன்று. பக்தியும் யுக்தியும் உருவாக்கிய கதைகளின் உட்பொருள் காண்

பதற்கும், பாசுரங்களில் காணும் கருத்துக்களைக் கோவைப்படுத்தி ஆராய்ந்து பார்ப்பது துணைபுரிவ தாகும். இந்த வழியில் நம்மாழ் வாரின் கழுத்துச் சரிதமாகிய உண்மைச் சரிதத்தைக் கண்டு கொள்வது அரிதன்று.

குரு பரம்பரைக் கதைகள் நம்மாழ்வாரை ஓதாது உணர்ந்த உயர் ஞானியாகவே குறிப்பிடுகின்றன, அல்லவா? ஆழ்வாரின் பாசுரங்களோ, இவர் கல்வி கற்று, திருக்குறளையும் சங்க நூல்களை யும் நன்கறிந்து, பாடும் வன்மையும் பெற்றிருந்ததாகக் காட்டு கின்றன. உயர்ந்த கவிகளை அருட்கவிகளாகக் காட்டவேண்டும் என்ற நம்மவர் மனநிலையே ஆழ்வார் புலமை பெருது தெய்வ அருளாலேயே பாடினர் என்ற கற்பனைக்குக் காரணமாகும்.

செயற்கருஞ் செயல்களுக்குத் தெய்வ அருள் வேண்டும்; மனித வல்லமை போதாது என்ற நம்பிக்கையைத்தான் நம்மாழ்வாரைப் பற்றிப் படர்ந்திருக்கும் கதைகளிலும் காண்கிறோம். மாமல்லபுரத் துச் சிற்பங்களைப் பார்த்துப் பிரமித்தவர்கள், 'அவை அரசர் பணி' என்பதை மறந்து, மாமல்லபுரத்தையும் மஹாபலிபுரம் ஆக்கி விட்டார்க ளல்லவா ? இதே மனப்பான்மை, பக்தர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் அற்புத வரலாறுக ளாக்கி அவர்களுடைய அரும் பெருங் கவிதைகளைத் தெய்வ மாக் கவிதையாகவும் தெய்வ வாக்காக வும் காட்டுகிறது.

நம்மாழ்வார், சாதாரண மனித உணர்ச்சிகள் இல்லாமலே வளர்ந்து வந்ததாகவும், குருகூரில் புளியமரப் பொந்தில் இருந்து கொண்டே திருமால் கோயில் கொண்டிருக்கும் திருப்பதிகளைப் பாடியதாகவும் சொல்வது பக்திதான்; இவர்மீதுள்ள பரம விசுவாசம்தான். பாசுரங்களிலோ இவர் போய்வந்த இடங்களின் இயற்கை யழகுகளும் செயற்கை யழகுகளும் வருணிக்கப்படுவதைக் காண்கிறோம்.

வயல், மரம், குளம், ஆறு, பூ, பறவை, விலங்கு முதலியன வருணிக்கப்படுகின்றன. வீடுகளும் மாடங்களும் கோபுரங்களும் நிமிர்கின்றன. கொடி ஆடுகிறது, யாழ் ஒலிக்கிறது. முழவுகளும் முரசுகளும் முழங்குகின்றன. விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றன. இவற்றை யெல்லாம் நம்மாழ்வர் பார்த்துத்தானே பாடி யிருக்கவேண்டும்.

இவருடைய தாயான உடையநங்கையார் பிறந்த ஊர் நாஞ்சி நாட்டைச் சார்ந்த திருவண்பரிசாரம். அவ்வூருக்கு வழியிலுள்ள திருக்குறுங்குடி, வானமாமலை, என்ற ஊர்களையும் அருகேயுள்ள திருவாட்டாறு, திருவனந்தபுரம் முதலிய ஊர்களையும் இவர் பாடியிருக்கிறார். திருக்குடந்தை என்ற கும்பகோணத்தைப் பாடியிருக்கும் பாசுரங்களிலே அந்தக் காவேரி தீரத்தின் வளமும் வனப்பும் எவ்வளவு இயற்கையாகப் புலனாகின்றன.

'ஆழ்வார் போய்ப் பார்த்த ஊர்களை அங்கங்கே சென்றபோது பாடவில்லை. தம் ஊரில் வந்திருந்து, பாடும்போது நினைவிலிருந்து அவ்வவ் வூர்களைக் குறிப்பிடுகிறார். திருவாய்மொழிப் பாசுரங்கள் அந்தாதியாக அமைந்தவை யாதலால் அவை ஒரேகாலத்தில் செய்யப் பட்டிருக்கலாம்; ஆனால் ஊர்களின் முறை வைப்பு அவர் சென்று வந்தவாறு இல்லை; மாறிக் கிடக்கின்றன. பொதுவாக எல்லா ஊர் களையும் தொகுத்துப் பார்த்தால் அவை திருப்பதிவரை அக் காலத்துப் பாதையில் உள்ளவை என்பதும், தம் நாட்டிலும் தம் தாய் பிறந்த இடம்வரை செல்லும் வழியிலும் உள்ளவை என்பதும் விளங்கும்' என்று ஓர் அன்பர் கூறியிருப்பது பொருந்துவதே.

மதுரகவி யாழ்வார், அயோத்தியில் இருக்கும்போது தெற்கே ஆகாயத்தில் ஒரு ஜோதி கண்டு, அதைப் பின்பற்றி வந்து, புளிய மரத்தடியில் நம்மாழ்வாரைத் தரிசித்த கதை, கிறிஸ்து சரித்திரத்தின் ஒரு பகுதியை நினைவூட்டுகிறது. தேவகுமாரன் அவதரித்தபோது ஆகாயத்தில் ஜோதி தோன்றியதாகவும், அதைக் குறியாக வைத்துக் கொண்டு, கிழக்கேயிருந்து ஞானிகள் வந்து தெய்வக்குழந்தையைத் தரிசித்துக் காணிக்கை செலுத்தியதாகவும் ஒரு பிரசித்தமான கதை வழங்குகிற தல்லவா?

பேசாக்குழந்தை பேசத் தொடங்கியபின் அருட்கவிதை வெளிப் படுகிறது. பதினாறு வயதுவரை உலகம் தெரியாத பெரியார், செந் தமிழ் நடையில் பாடுகிறார்; காதல்-துறையிலும் பக்தியை வெள்ள மாகக் கொட்டுகிறார். இயற்கையழகைப் பாடுகிறார்; உலக அநுப வங்களைப் பாடுகிறார். சமயஞானம், தத்துவஞானம் எல்லாம் அநுபவஞானமாகக் கனிந்து வருகின்றன. எல்லாம் இறையருள், ஆழ்வாரின் அவதாரச் சிறப்பு என்பது குருபரம்பரைக் கதைகளின் போக்கு. உண்மையான ஆராய்ச்சியாளரோ, 'கல்வி-மனமும் உலக

அநுபவமும் பெற்று ஞானக்குழந்தையாக மாறிப் பிறந்த பெரியார், அநுபூதி - ஞானம் பெற்றுப் பாடியிருக்க வேண்டும்' என்று கூறுவார்கள்.

புலவர்கள் செருக்கொழிந்து போற்றிய கதையில் உண்மை இருக்கவேண்டும்; ஆனால் அந்தப் புலவர்களைச் சங்கப்புலவர்கள் ஆக்கி, ஆழ்வார்-காலத்துக்கும் சங்க காலத்துக்கும் தொடர்பு கற்பித்திருப்பதைத் தமிழ்-ஆராய்ச்சியில் சொற்பஞானம் உள்ளவர்களும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இப்படிப்பட்ட கதைகள் திருவள்ளுவரைக் குறித்தும் வழங்குகின்றன.

மதுரைச் சங்கம்போல் அக்காலத்துக்குப் பின்னரும் சங்கங்கள் தோன்றின என்றும், வேம்பத்தூர்ச் சங்கம் முதலான சங்கங்களிலும் நூல்கள் அரங்கேறின என்றும், குருகூரிலும் அவ்விதத் தமிழ்ச் சங்கம் மதுரகவி யாழ்வார் காலத்தில் இருந்தது என்றும், அந்த உள்ளூர்ச் சங்கத்தினரே செருக்குற்றிருந்து, பின் செருக்கொழிந்து, நம்மாழ்வாரைப் போற்றினர் என்றும் சில பண்டிதர்கள் கூறுவது உண்டு. ஆனால் தடாகம், சங்கப்பலகை முதலான அம்சங்களையும் இந்தக் கதையில் காண்கிறோம்.

இந்தக் கதையிலும் ஓர் அழகான உட்பொருளைக் காணலாம். இலக்கியத் துறையிலும் சமயத் துறையிலும் புதிதாக ஏற்படும் சீர்திருத்தங்களை யெல்லாம் பழமை விரும்பிகளான பண்டிதர்கள் எதிர்த்துப் பார்ப்பார்கள் என்பதும், உண்மையான இயக்கங்களின் ஜீவசக்தியே அவர்களைப் பணியச் செய்துவிடும் என்பதும் இத்தகைய கதைகளால் நாம் அறிந்துகொள்ள வேண்டிய விஷயம்.

மேலும், மதுரகவி யாழ்வார் தமது பிற்கால வாழ்க்கையில் நம்மாழ்வாரின் புனித நினைவுடன் பொழுதுபோக்கி வந்தார் என்பதையும், சீடர், குருவின் புகழையும் கொள்கைகளையும் பரப்புவதில் கண்ணும் கருத்துமாக இருந்தார் என்பதையும் இந்தக் கதை வற்புறுத்துகிறது.

## குருபக்தி சூட்டிய மகுடம்

வடநாடெங்கும் அலைந்து திரிந்து, உண்மை காணாது திரும்பி வந்து, தென்திசையிலே சூரியோதயம் கண்டதுபோல நம்மாழ்வாரைக் கண்டு, அந்தத் தெய்விக ஒளியை மக்களுக்காக நிலை

பெறச் செய்யவேண்டும் என்ற பரம கருணையுடன் அந்தப் பரம கைங்கரியத்தில் தம்மை முழுக்க இழந்த மதுரகவிகள், குருவுக்கு முன்னரே தோன்றியவர் ஆதலால் இவர் தோற்றத்தைச் சூரியோ தயத்தை அறிவிக்கும் அருணோதயத்தோடு ஒப்பிடுகிறார்கள்.

'குருவைத் தவிர நான் வேறு தெய்வமும் வேண்டேன்' என்ற மனநிலையுடன் வாழ்ந்த சீடரிடம் குருவைத் தெய்வமாக்கிய பக்தி காணப்பட்டது. இத்தகைய பக்திதான் திருக்குறுங்குடியில் கோயில் கொண்டிருக்கும் பகவானே நம்மாழ்வாராக அவரித்தான் என்ற கதையாகவும் பரிணமித்திருக்கக் கூடும்.

'அவர் அற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன்' இளமையில் சமானியரைப்போல் இருந்திருக்கலாமா? எனவே இவர் உலக இயற்கைக்கு மாறியிருந்து, 'மாறன்' என்ற பெயரும் பெற்றார் என்ற கதை எழுந்தது.

இந்தத் திவ்யஞான சம்பன்னரின் கதையில் திருஞானசம்பந்தர் ஞானப்பால் உண்ட கதையை நினைவூட்டும் ஓர் அம்சமும் கலந்திருக்கிறது. திருவருள் என்ற ஞானப்பால் ஊட்டப்பெற்ற இந்த ஆழ்வாருக்குத் தாயின்பால் எதற்கு? எனவே, இவர் தாய்ப்பால் பருகாமலும் அழாமலும் அதிசய வளர்ச்சி பெற்றுவந்தார் என்ற கதை எழுந்தது.

பரம்பொருள் என்ற உண்மையையே பார்த்துக்கொண் டிருந்த வருக்கு ஜடப்பொருள்களைக் காணக் கண் ஏது? எனவே, பதினறு வருஷம் சமாதியில் ஆழ்ந்து, ஒரே இடத்தில் அசையாமல் இருந்து, தம்மைச் சுற்றிலும் உள்ள பிரபஞ்சத்தை முற்றும் மறந்தார் என்ற கதை பிறந்தது.

தம்மையும் தாம் கண்ட உண்மையையும் அறிந்துகொள்ளும் பக்குவம் இல்லாதவர்களோடு பேசித்தான் என்ன பயன்? எனவே மதுரகவி யாழ்வாரைச் சந்திக்கும் வரை நம்மாழ்வார் மௌனியா யிருந்தார் என்ற கதை தோன்றியது.

எனினும், பகவதநுபவத்தால் கிடைத்த ஆனந்தத்தை இப் பெரியார் தாம் மட்டும் அநுபவிக்க விரும்பவில்லையாம். அந்த ஆனந்த நிலையிலும் உலகத்தின் துன்பம் நெஞ்சிலே பட்டதாம்; உலகத்தின் அழுகுரல் காதிலே விழுந்ததாம். தாம் தர்மகர்த்தராக இருந்து, பரிபாலித்து வந்த ஞானசம்பத்தை நம்மாழ்வார் மதுர

கவிகள் மூலமாகத் தாயில்லாப் பிள்ளைபோல் இருந்த மனிதவர்க்கத் திற்கே உரிமை ஆக்கினாராம்.

நம்மாழ்வார் வீற்றிருந்து தியானம் செய்துகொண் டிருந்த புளியமரத்தடியிலே அவரை அடக்கம் செய்த மதுரகவிகள் அங்கே கோயில்கட்டி உருவ வழிபாடும் விழாக்களும் ஏற்படுத்தினர். அந்த உறங்காப் புளி (இரவில் இலை மூடிக்கொள்ளாத புளிய மரம்) தன் முதிர்ந்த பருவத்தில் இன்றும் ஆழ்வார் திருநகரியில் ஆழ்வார் கோவிலில் காணப்படுகிறது என்று பக்தர்கள் அதிசயமாய்த் தரிசித்து வருகிறார்கள்.

மற்ற ஆழ்வார்கள் இவ்வுலக உணர்ச்சியோடு இருந்து பிறகு தத்துவஞானம் பெற்றவர்களென்றும், நம்மாழ்வாரோ பரிமளத் தோடு பிறக்கும் துளசிபோலப் பிறந்து, இயற்கையிலேயே ஞான பக்தியுடையவராக இருந்தாரென்றும் வைஷ்ணவர்கள் நம்புகிறார் கள். எனவே இவரை உயிர் அல்லது ஆத்மாவாகவும் மற்ற ஆழ்வார்களை உடம்பாகவும் சொல்வது உண்டு.

ஆழ்வார் கோஷ்டியில் நம்மாழ்வார், காலத்தால் பிற்பட்டவரே. முற்பட்டவர்களான முதலாழ்வார்களும் திருமழிசை யாழ்வாரும் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர்கள். வடக்கே அந்தப் பல்லவ ராஜ்யத்தில் தோன்றிய இயக்கம் வரவரப் பெரிதாகித் தெற்கேயுள்ள பாண்டிய நாட்டில் உச்சநிலையை அடைந்துவிட்டது. கடைசி ஆழ்வார், வைஷ்ணவர்களின் ஆதிகுருவாகக் கருதப்படுகிறார். இவருடைய பாடல்களும் விசேஷ குலதனமாகக் கருதப்படுகின்றன.

இதுவரை 'வகுள பூஷண பாஸ்கரன்' - அதாவது மகிழம்பூ மாலையணிந்த ஞானசூரியன் - என்று வைஷ்ணவ உலகம் போற்று கிறது. இந்தச் சூரியனைக் கண்டு, 'நீங்காத உள்ளிருள் நீங்கி, வற்றாத பிறவிக்கடல் வற்றி, மலராத தாமரைகளும் மலர்ந்தன' என்று குதூகலப்படுகிறார்கள், பாகவதர்கள்.

'நான் சடகோபன் என்ற என் பக்தனாக அவதரித்து, ஜாதி மதம் முதலான வித்தியாச மில்லாமல் பொதுஜனங்களுக்கு அவர்கள் பேசும் பாஷையிலேயே வேத ரகசியங்களை வெளி யிட்டு, மோட்ச வாசலைப் பகிரங்கமாகத் திறந்து வைக்கப் போகிறேன்; கேளுங்கள் ரிஷிகளே?' என்று பகவானே சொன்ன தாக வடமொழியிலுள்ள பிரமாண்ட புராணம் சொல்லுகிறது.

பவிஷ்யத் புராணம், பார்க்கவ புராணம், மார்க்கண்டேய புராணம் முதலான நூல்களிலும் நம்மாழ்வாரைக் குறித்த பிரஸ்தாபம் வருகிறது. இப்படியெல்லாம் பகீரதப் பிரயத்தனம் செய்து, நம்மாழ் வாரைத் தெய்வமாக்கிய குருபக்தி எவ்வளவு விசேஷமானதாக இருக்கவேண்டும்!

ஏழு தலைமுறையாகச் சிற்றரசர்களாயிருந்த பரம்பரையில் தோன்றியவர் நம்மாழ்வார். இவரும் பூர்வாசிரமத்தில் சிற்றரசராக இருந்தாரென்று ஊகிப்பவர் உண்டு. இவரே தம்மைக் 'குருகைக் கோன்' என்று சொல்லிக்கொள்கிறார், 'குருகை மன்னன்' என்று வைஷ்ணவ ஆசாரியர்களும் குறிப்பிடுகிறார்கள். ஆனால் இவ ருடைய ராஜ்யம் அந்த நாளில் ஆழ்வார் திருநகரியைத் தலை நகராகக் கொண்டு, சுமார் ஐம்பது சதுரமைல் பரப்புள்ளதாக இருந்த வழுதி வளநாடு என்ற சிறு பிரதேசந்தானா? எத்தனையோ தலைமுறைகளாக எண்ணிறந்த பக்த கோடிகளின் இதயம் என்ற மகாராஜ்யத்தைச் சக்கரவர்த்தியாக ஆண்டுவருகிறா ரல்லவா?

இவர் பெற்றோர், 'எங்கள் குடியரசே!' என்றும், 'எங்கள் குலதெய்வமே!' என்றும் இவரைக் கெஞ்சி அழைத்ததாகக் கதை சொல்லுகிறது. இன்றும் இவரை அப்படியே அழைத்து அன்பு பூண்டு வழிபடுகிறது வைஷ்ணவ சமூகம்.

பெற்றோர் அளித்த சிற்றரசை ஏற்றுக்கொள்ளாதவர், பக்தர்கள் சூட்டிய மணிமாமகுடம் புனைந்து, பரமாசாரிய சிம்மாசனம் பொலிய வீற்றிருக்கிறார்.

# 12. வேதம் தமிழ் செய்த மெய்யன்

ராமாநுஜர் முதல் முதல் ஆழ்வார் திருநகரியை அணுகியபோது 'சாரல் – காலமா'னதால் தாம்பிரபருணியில் வெள்ளம் தெளிந்து சுழித்து ஓடிக்கொண் டிருந்தது. அந்த நீர்வளத்தையும், சோலை சூழ்ந்த திவ்ய தேசத்தின் நிலவளத்தையும் பக்தி வளத்தையும் ஆழ்வார் அவதரித்த அந்தப் பழம் பெருஞ் சிறப்புடன் புறக்கண்ணு லும் அகக் கண்ணுலும் கண்ணுற்றுக் களித்த ராமாநுஜர்,

'இதுவோ திருநகரி ஈதோ பொருநல் ;
இதுவோ பரமபதத் தெல்லை !—இதுவோதான்
வேதம் தமிழ்செய்து மெய்ப்பொருட்கு முப்பொருளாய்
ஓதும் சடகோபன் ஊர் !'

[பொருநல் - தாமிரபருணி.]

என்று பாடினாராம்.

பக்தர்சூட்டிய தெய்வமணி மகுடத்துடன் இருந்த நம் மாழ்வாரைத் தெய்வ சமானமாக மதித்து வழிபட்டார் ராமாநுஜரும் என்பது பாட்டின் உட்பொருள்.

ராமாநுஜர் தொண்டர் குழாத்துடன் திருநகரியில் சங்கணித் துறையில் நீராடிக் கொண் டிருந்தார். அப்போது ஒரு வண்ணுன் அங்கே வந்து, அவர் திருவடிகளில் தலை சாய்த்துத் தொழுதபின், தன் பிள்ளைகளையும் கூப்பிட்டு அவர்களையும் ராமாநுஜர் அடிகளில் தொழுமாறு பணித்தான். அந்தப் பிள்ளைகளை அழைக்கும்போது, 'சடகோபா ; காரிமாறு ! வகுளாபரணு ! குருகூர் நம்பியே !' என்று கூவியது ராமாநுஜருக்கு அதிசயமாகத் தோன்றியது. 'தம் மக் களுக்கு இப்படிப் பெயர்களை இட்டிருக்கிருனே, என்ன ஆழ்வார் பக்தி ! என்ற வியப்பில் ராமாநுஜர் சிறிது நேரம் தம்மை மறந்து நின்ருர்.

## தமிழ்வேதம் அருளிய கீர்த்தி

அருகிலிருந்த வைணவர் ஒருவர், ' 'இத் திகைப்பிற்குக் காரணம் யாதோ?' என்று விசாரித்தார். அதற்கு ராமாநுஜர்,

'இல்லறத்தைத் தழுவி இந்த ஈரங் கொல்லியை (வண்ணனை)ப்போல் ஆழ்வார் திருப்பெயர்களைக் குழந்தைகளுக்கு இட்டு ஆர்வத்துடன் அழைக்கும் பேறு பெற்றேன் இல்லையே! இத்தகைய நல்லறத்தைப் பின்பற்ருது அறிவின்மையால் இக் காவியைத் தாங்கி நின்றேனே!' என்று விடையிறுத்தார்.

வேதம் தமிழ் செய்த தெய்வப் புலவர் என்று ஆழ்வாரிடம் கொண்ட பக்திக் காதலே, 'அறம் கிடந்த சிந்தையராய் ஆசையெல்லாம் துறந்த அதிவீர'ரான இராமானுஜரின் இந்த மன நிலைக்கு இப்போது காரணமாயிற்று.

நம்மாழ்வார் தோன்றிய வைகாசி விசாகத்தின் பெருமையை மணவாள மாமுனிகள் உபதேச ரத்தின மாலையில் பின் வருமாறு வெளியிடுகிருர்:

ஏரார் வைகாசி விசாகத்தின் ஏற்றத்தைப்
பாரோர் அறியப் பகர்கின்றேன்—சீராரும்
வேதம் தமிழ்செய்த மெய்யன், எழில்குருகை
நாதன் அவதரித்த நாள்.

[பாரோர் - உலகத்தார்.]

இறைவன் தம்முடைய நெஞ்சிலிருந்து தன்னைத் தானே பாடிக் கொண்டதாக நம்மாழ்வாரே கூறியுள்ளார், 'தானே யான் என் பானுகித் தன்னைத்தான் துதித்து' என்று இவர் கூறுவதைக் கேளுங்கள்.

நண்ணு அசுரர் நலிவெய்த,
நல்ல அமரர் பொலிவெய்த,
எண்ணு தனகள் எண்ணும்நன்
முனிவர் இன்பம் தலைசிறப்ப,
பண்ணுர் பாடல் இன்கவிகள்
யானுய்த் தன்னைத் தான்பாடி
தென்ன என்னும் என்அம்மான்
திருமா லிருஞ்சோ லையானே

[நண்ணு - தன்னைச் சரணமாக அடையாத. நலிவு - துன்பம். அமரர் - தேவர். பண் ஆர் - பண்கள் நிறைந்த.]

என்றும் பாடி, இறைவனுடைய விசேஷ அருள் தம்மிடம் இருப்பதைத் தாமே அருளிச் செய்கிருர். அதனுல்தான் பிள்ளைப்பெரு

மாள் ஐயங்காரும். 'நாராயணு! அடியேன் நாடும் தமிழ் வேத பாராய்ணு! சடகோபா!' என்று இந்த ஆழ்வாரைத் தோத்திரம் செய்கிருர்.

நாராயணன் வியாசர் முதலானவர்களிடம் ஆவேசித்து, வேதங் களை வகுத்தல் முதலிய காரியங்களைச் செய்தாற்போல நம்மாழ் வாரிடம் ஆவேசித்துத் தமிழ்வேதங்களை வெளியிட் டருளினன் என்பது வைணவர் நம்பிக்கை. வங்கிபுரத்து நம்பி, 'எம்பெரு மான்தான் இப்படி வந்து அவதரித்தான்' என்பர். 'இப்படிச் சொல்லுகைக்கு-அடி (மூலம்), ஆழ்வாருடைய ப்ரபாவமே (கீர்த்தியே) என்பது பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான வாக்கியம். தமிழ் வேதம் அருளிய கீர்த்தியே ஆழ்வாரை அவதார புருஷர் ஆக்கியிருக்கவும் கூடும்.

உள்ளுறையும் அழகனுகிய பெருமான் இவரது ஞானக் கண்ணுக்குப் புலனுகவே அந்தத் திருமேனி அழகைச் சேவித்து ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தாராம் இந்த ஆழ்வார். பகவானுடைய திவ்ய குணங்களை இவர் அநுபவிக்கும்போது அந்த அநுபவத்தால் உண்டான பிரீதி உள்ளடங்காமல் பிரபந்த ரூப மாகத் தன்னை வெளியிட்டுக்கொண்டதாம். இந்தப் பிரபந்தங் களில் திருவிருத்தம் ரிக்வேதத்தின் சாரமாகுமென்றும், திரு வாசிரியம் யஜுர்வேதத்தின் உட்பொருளைத் தழுவியது என்றும் பெரிய திருவந்தாதி அதர்வண வேதத்தின் உட்பொருளையே அனுசரித்தது என்றும் சொல்லுகிருர்கள். நம்மாழ்வாரின் அதிமுக்கி யமான பிரபந்தமாகிய திருவாய்மொழி, சாமவேதத்தின் சாரமான தத்துவப் பொருளைத் தழுவியது என்பர்.

இந்தப் பிரபந்தங்களை யெல்லாம் மதுரகவிகளுக்கு நம்மாழ்வார் உபதேசித்தார். வேதத்திலுள்ள பரம ரகசியங்கள் எல்லாம் இப் பிரபந்தங்களில் அடங்கியுள்ளன என்று கருதிய மதுரகவி யாழ்வார்,

மிக்க வேதியர்
வேதத்தின் உட்பொருள்
நிற்கப் பாடிஎன்
நெஞ்சுள் நிறுத்திஞன்.

என்று பாடியிருக்கிருர்.

இந்த ஆழ்வாரின் வைபவத்தைக் கூறும்போது திவ்ய சூரி சரிதம் ஏனைய குருபரம்பரைகளில் காணப்படாத செய்திகளையும் தெரிவிக்கிறது. ஆண்டாளின் கல்யாண விஷயமாகப் பெரியாழ்வார், நம்மாழ்வாரின் அனுமதி பெற்று, இவர் திருமுன்பே அந்தத் திருமணத்தை நடத்த வேண்டுமென்று தீர்மானித்தாராம். 'பெரியவரான ஸ்ரீசடகோபரின் அனுமதியின்படி அவர் திருமுன்பே ஸ்ரீகோதையின் பாணிக்கிரகண விழாவை நடத்தவேண்டும் என்ற திருவுள்ளம் உடையவராய்' என்பது திவ்யசூரி சரித ஆசிரியரின் வாக்கு.

வல்லபதேவ பாண்டியன் என்ற தமது சீடனுடனும் புதல்வி கோதையுடனும் பெரியாழ்வார் குருகூரை அடைந்து, இம் மூவரும் நம்மாழ்வார் திருவடிகளில் மகிழ்ச்சியுடன் தண்டனிட்டு நின்றார்களாம். 'உடனே வகுளாபரணரும் கருணைக்கடலாகிய தமது கண்களால் ஸ்ரீகோதையைக் கடாட்சித்து அருளினர்' என்பது திவ்யசூரி சரித வாக்கு,

அப்பால் சடகோபர் சுயம்வரம் அமைத்து, கோதை, திருவரங்கச் செல்வரான அழகிய மணவாளனையே தன் நாயகனாக வரித்துத் திருமணம் புரிந்துகொள்ள உதவினாராம். இப்படியெல்லாம் காவிய முறைக்கு ஏற்பச் செய்திருக்கும் கற்பனைகளைத் திவ்யசூரி சரிதத்தில் காண்கிறோம். இத்தகைய வேறு கற்பனைகளை ஏனைய குருபரம்பரைகளிலும் காணலாம்.

வேதத்தைச் செந்தமிழால்
விரித்துரைத்தான் வாழியே

என்று வாழ்த்தப் பெறும் நம்மாழ்வாரைப்பற்றியும் இவர் தமிழ் வேதம் குறித்தும் பக்தர் உள்ளம் எத்தனையோ கற்பனைகளைச் செய்து பார்த்திருக்கிறது !

## தமிழ்வேதக் கடல்

'**தி**ருவாய்மொழி' என்பது சிறந்த மாறுபாடு இல்லாத சொல் என்றும் பொருள்படும். 'வாய்மொழி' என்னும் சொல் வேதம் என்னும் பொருளிலும் வருவதைப் பரிபாடலிலும் காணலாம். பகவான் தன் வாய்மொழியால் இவர் மூலமாகத் தன்னைத்தானே

பாடிக்கொண்டதாலும், 'திருவாய்மொழி' என்னும் பெயர் பொருத்த மானது என்பர்.

'திராவிட வேத சாகரம்' (தமிழ்வேதக் கடல்) என்று ஆசாரி யருள் முதல்வராகிய நாதமுனிகள் திருவாய்மொழியைக் குறிப்பிடு கிறார். நம்மாழ்வார் பாசுரங்களும் வேதோப நிஷதங்களைப்போல் இராமானுஜருக்கு வழிகாட்டின; மற்றவர்களைத் திருத்துவதற்கும் மிகவும் உபயோகமாக இருந்தன என்பது திருவரங்கத்து அமுதனார் கருத்து.

உறுபெருஞ் செல்வமும் தந்தையும்
தாயும் உயர்குருவும்
வெறிதரு பூமகள் நாதனும்
மாறன் விளங்கியசீர்
நெறிதரும் செந்தமிழ் ஆரண
மேஎன்(று) இந்நீ ணிலத்தோர்
அறிதர நின்ற இராமா
நுஜன்எனக்(கு) ஆரமுதே

[உறு - பொருந்திய, மிக்க. வெறி - மணம். பூமகள் நாதன் - லட்சிமியோடு கூடிய திருமால். மாறன் - நம்மாழ்வார். செந்தமிழ் ஆரணம் - செந்தமிழ் வேதம். நீணிலத்தோர் - நீண்ட பூமியில் உள்ளவர்கள். அறிதர - அறிந்துகொள்ளும்படி.]

என்பது அமுதனாரின் இராமனுச நூற்றந்தாதிப் பாசுரம்.

இந்தச் செந்தமிழ் ஆரணத்தைத் 'தமிழ் மறைகள் ஆயிரம்' என்பர் பட்டர். இந்த மறைகளை ஈன்ற தாய், நம்மாழ்வார் என்றால், இவற்றை வளர்த்த தாய் இராமானுஜர் என்பது பட்டர் கருத்து;

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைகள் ஆயிரமும்—ஈன்ற
முதல்தாய் சடகோபன்; மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமா நுசன்

[மொய்ம்பால் - தன் சக்தியால். இதத் தாய் - வளர்ப்புத் தாய், செவிலித் தாய்.]

நம்மாழ்வார் பெற்றெடுத்தார், இராமானுஜர் போஷித்தார் தமிழ் வேதத்தை என்று பட்டர் கூறுவது கவனிக்கத் தக்கது. கண்ண னுக்குத் தேவகியும் யசோதையும்போலத் தமிழ் வேதத்திற்கு நம்

மாழ்வாரும் இராமானுஜரும் என்று கூறுவது உண்டு. 'பாஷ்யகாரர் (இராமானுஜர்) இது (தமிழ்வேதம்) கொண்டு சூத்திர வாக்யங்களை ஒருங்கவிடுவர்' என்று ஆசாரிய ஹ்ருதயம் கூறுவதும் கூர்ந்து நோக்கத் தக்கது.

ஸ்ரீ பாஷ்யம் இயற்றும்போது பிரமசூத்திரங்களை ஒன்று சேர்த்துப் பொருள் காண்பதற்கு இராமானுஜர் திருவாய்மொழியைப் பயன்படுத்திக் கொண்டார் என்பது கருத்து. திருவாய்மொழியை அடியொற்றியே இராமானுசர் தமது ஸ்ரீ வைஷ்ணவக் கொள்கைகளை உருவாக்கினர் என்பது அவர் காலத்திலும் அவருக்குப் பிற்காலத்திலும் வாழ்ந்த ஆசாரியர்களின் அபிப்பிராயம்.

'அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும், தொல்வழியே நல்வழிகள் துணிவார் கட்கே' என்ற வேதாந்ததேசிகரின் வாக்கிலே இராமானுஜர் முதலான ஆசாரியர்களின் உள்ளத்தையும் காண்கிறோம் என்பதில் ஐயமில்லை.

வேதமாகிய பாற்கடலைத் தமது நாவினல் கடைந்து, 'தமிழாயிரத்தின் சுவை - அமுதமாகத் திருமாலின் அடியார்களுக் கெல்லாம் தந்தவர் நம்மாழ்வார்' என்று பொருள்படப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் பாடியிருப்பதும் ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களின் உள்ளக் கருத்தைத் தழுவியதே ஆகும்.

'ஓர் ஆத்மாவுக்கு ஹிதாம்சத்துக்கு ஒரு பாட்டே அமையும் படியிறே இவர் பாடிற்று' என்பர் பெரியவாச்சான்பிள்ளை. திருவாய்மொழியிலுள்ள எந்த ஒரு பாட்டை ஓதி உணர்ந்து ஒழுகினலும் ஒருவனுக்கு வேண்டிய நன்மைக ளெல்லாம் கிடைக்கும் என்பது கருத்து. தமிழ்மறை ஆயிரத்தையும் (திருவாய்மொழிப் பாசுரங்கள் 1102) ஆயிரம் கறவைப் பசுக்கள் என்றும், தர்மப் பசுக்கள் என்றும் கூறுவது உண்டு. திருவாய்மொழி தோன்றப் பண்ணும் தமிழும் தவம் செய்தன என்றும் சடகோபர் அந்தாதி தெரிவிக்கிறது.

திருவாய்மொழியைத் திராவிட உபநிஷதம் என்றும் கூறுவது உண்டு. வேதாந்தம் என்ற பெருங் கடலின் ஆழத்திலே கிடந்த ஜீவரத்தினங்களைப் பாசுரங்க ளாக்கிப் பாமாலைகள் ஆக்கி அன்புருவான அழகனை அலங்கரிப்பது திருவாய்மொழி என்றும் சொல்வது உண்டு.

கௌரங்கர் என்ற ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் ஆழ்வார் திருநகரிக்கு வந்திருந்து திருவாய்மொழிப் பிரதி ஒன்றை எடுத்துச் சென்றதாக ஸ்ரீ டி. என். கங்குலி என்னும் வங்காள சரித்திர அறிஞர் தாம் எழுதிய சைதந்யர் சரித்திரத்தில் தெரிவிக்கிறார். இதனால் வட இந்தியாவில் ஸ்ரீ வைஷ்ணவக் கொள்கைகள் பரவுவதற்கும் திருவாய்மொழி பயன்பட்டது என்று தெரியவருகிறது. கங்குலி, திருவாய்மொழியைத் திராவிட ப்ரம்ம சம்ஹிதை என்ற பெயராலும் குறிப்பிடுகிறார். இதே பெயரால் பட்டரும் தமது குணரத்தின கோசத்தில் திருவாய்மொழியைக் குறித்திருப்பது கவனிக்கத்தக்கது.

## அறியாத கடல்

ஆழ்வார்களில் வேதம் தமிழ்செய்த நம்மாழ்வாரை ஒப்புயர்வற்றவர் என்று கருதுவதுபோல், ஆழ்வார்களின் அருளிச் செயல்களான திவ்யப் பிரபந்தங்களிலெல்லாம் தனிப்பெருஞ் சிறப்புடையது திருவாய்மொழி என்பர். இத் திருவாய்மொழிக்கு அருமையான வியாக்கியானங்கள் உண்டு.

இராமானுஜரே திவ்யப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானம் செய்ய விரும்பினாராம் ஒரு சமயம். பிறகு அந்த விருப்பத்தை அடக்கிக் கொண்டு, தமது அபிமானத்திற்கு உரியவர்களில் ஒருவரான திருக்குருகைப்பிரானுன பிள்ளான் என்பவரைக் கொண்டு ஒரு வியாக்கியானம் இடுவித்தாராம், காரணம் என்ன?

ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை எங்கும் பரவச்செய்துகொண்டிருந்த தாமே வியாக்கியானம் இட்டால் அதற்கு மேல் வேறு ஒருவரும் வியாக்கியானம் செய்யாமல் அவ்வளவோடு நின்றுவிடுமே, திருவாய்மொழியின் சிறப்பு என்று அஞ்சியே இராமானுஜர் வியாக்கியானம் எழுதவில்லையாம். தமிழ்வேதத்தின் பொருளே எந்த ஒரு வியாக்கியானத்துக்குள்ளும் அடங்காமல் மேன்மேலும் கிளைத்துச் செழித்து வளர்ந்துகொண்டிருக்கும் தனிச்சிறப்பு வாய்ந்தது என்பதே இராமானுஜரின் கருத்தாகும் என்பர்.

இராமானுஜர் ஆணைக்கிணங்கத் திருவாய்மொழிக்கு முதல் முதல் செய்யப்பெற்ற வியாக்கியானத்திற்கு ஆறாயிரப்படி வியாக்கியானம் என்று பெயர். பிறகு பட்டர் அருளால் வேதாந்தியான

நஞ்சீயர் ஒன்பதினுயிரப்படி வியாக்கியானம் செய்தார். இராமானுஜர் எதிர்பார்த்தபடியே தமிழ் வேதத்தின் பொருள் வளரலாயிற்று.

அப்பால் பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானத்தில் திருவாய்மொழியின் பொருள் மேலும் கிளைத்துச் செழித்து வளர்ந்தோங்கியது. இந்த வியாக்கியான சக்கரவர்த்தி, 'நம்பிள்ளை கோஷ்டியோ; நம்பெருமாள் கோஷ்டியோ?' என்று சொல்லத்தக்க நிலையில் காலக்ஷேபம் நடத்தி வந்த நம்பிள்ளை என்ற பேரறிஞரிடம் அர்த்த விசேஷங்களைக் கேட்டறிந்தவர். நஞ்சீயரது சீடர் நம்பிள்ளை.

## பகவத் விஷயம்

நம்பிள்ளையிடம் பொருள் விசேஷங்களைத் தெரிந்துகொண்டவர்களில் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் ஒருவராவர். பெரியவாச்சான்பிள்ளை தாம் கேட்ட திருவாய்மொழியின் அர்த்த விசேஷங்களைத் தமது மேதா விலாசத்திற்கு ஏற்பப் பக்குவம் செய்து தருகிருர். வடக்குத் திருவீதிப் பிள்ளையோ கேட்டது கேட்டபடியே எழுதி வைத்திருக்கிருர். இந்த வியாக்கியானத்தைத்தான் ஈடு முப்பத்தாறுயிரப்படி என்பர். இதைச் சுருக்கமாக ஈடு என்றும் கூறுவது உண்டு.

திருவாய்மொழி, பகவத் பிரபந்தம் என்று கூறப்படுகிறது. எனவே, இந்த வியாக்கியானங்கள் பகவத் விஷயமென்று கூறப்படுகின்றன. ஈட்டின் தமிழாக்கம், பகுதி பகுதியாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் வெளிவருகிறது. இந்தத் தமிழாக்கத்தைத் துணையாகக்கொண்டு பகவத்விஷயம் கற்கத் தமிழர்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறதென்றே சொல்ல வேண்டும். பகவத் விஷயத்திலே, 'வேதம் தமிழ்செய்த மெய்யன் என்று போற்றப்பெறும் நம்மாழ்வாரின் உள்ளத்தை ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்களின் அளவுக் கண்ணுல் பார்த்துக்கொள்ளலாம்.

பகவத் விஷயத்தின் அருமை பெருமைகளை உள்ளபடி உணர்ந்துகொள்வதற்குத் திருவாய்மொழிப் பாசுரங்களின் அருமை பெருமைகளைக் குறித்தும், பொதுவாக வியாக்கியானங்களைக்

குறித்தும் இன்னும் சில விஷயங்களைத் தெரிந்துகொள்வது நலமாகும்.

கடற்கரையில் உலாவுகிறவன், 'கடல் கண்டோம்' என்று சொல்வதுபோலத்தான் நாம் திருவாய்மொழியின் பெருமையை இங்கே கண்டுகொள்ள முயல்வதும். அப்பால் பகவத் விஷயம் முதலான வியாக்கியானங்களை ஒரு பொதுநோக்காகப் பார்த்துக் கடலின் ஆழத்திலுள்ள ஜீவரத்தினங்களைக் கண்டு, காட்டும் உரையாசிரியர்களைக் குறித்தும் ஒருவாறு தெரிந்துகொள்வோம்.

# 13. திருவாய்மொழியும் வியாக்கியானங்களும்

ஆழ்வார்களில் மிகச் சிறந்தவர் நம்மாழ்வார். இவருடைய பிரபந்தங்களில் திருவாய்மொழி மிகச் சிறந்தது. திருவாய் மொழியைப் பாராட்டும் நூல்கள் வடமொழியிலும் உண்டு.

## ‘ தமிழ் சிறப்புற்றது ’

திருவாவடுதுறை ஆதீனத்துச் சுவாமிநாத தேசிகர்,

பல்கால் பழகினும் தெரியா உளவேல்,
தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவை
மூன்றினும் முழங்கும்; ஆண்டினும் இலேயேல்
வடநூல் வெளிபெற வழங்கும் என்ப.

—(இலக்கணக் கொத்து)

என்று கூறியுள்ளார்.

தமிழ் நூல்களில் ஐயம் திரிபுகள் ஏற்பட்டால் எப்படித் தெளிந்துகொள்வது என்பது குறித்த சுவாமிநாத தேசிகரின் அபிப்பிராயம் இது. குறித்த நூல்களுடன் பல்கால் பழகித் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது முதலாவது ஆலோசனை. அப்படியும் தெரிந்துகொள்ள முடியாத விஷயங்களைத் தொல்காப்பியம், திருக் குறள், திருக்கோவையார் என்ற முப்பெருந் தமிழ் நூல்கள் வாயி லாகத் தெரிந்துகொள்ளலாம்; இது இரண்டாவது ஆலோசனை. இம்மூன்று பெருநூல்களாலும் ஐயம் திரிபுகள் நீங்கவில்லை யென்ருல் வடமொழி நூல்களின் உதவியால் தெளிந்துகொள்ள வேண்டும் என்கிருர் கடைசியாக.

இந்த மூன்ருவது ஆலோசனையிலிருந்து, தமிழ் நூல்களில் தோன்றும் ஐயம் திரிபுகளை வடமொழி நூல்களால் தெளிந்து கொள்ளலாம் என்பது சுவாமிநாத தேசிகரின் கொள்கை எனலாம். வேதாந்த தேசிகரோ வடமொழி வேத வேதாந்தங்களின் தெளி வில்லாத பகுதிகளைத் திருவாய்மொழியின் உதவியால் தெளிந்து கொண்டதாகக் கூறியுள்ளார்.

இதனல் தமிழ்மொழிக்கே ஒரு தனிப்பெருஞ் சிறப்பு ஏற்பட்டிருக்கிறதாம். நம்மாழ்வாரின் தோற்றத்தால், திருவாய்மொழியின் பெருமையால், 'மொழி பலவாயும் தமிழ் சிறப்புற்றது' என்பர்.

'ஆரா அமுதக் கவி ஆயிரம்' என்று திருவாய்மொழியைப் போற்றிப் புகழ்கிறது சடகோபர் அந்தாதி. திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகக் கருத்தையும் தொகுத்து, ஒவ்வொரு வெண்பாவில் அடக்கிக் கூறுகிறது திருவாய்மொழி நூற்றந்தாதி. திருவாய்மொழியின் சிறப்பையும் நம்மாழ்வாரின் சிறப்பையும் ஆழ்வார் திருநகரியில், ஆழ்வார் பரம்பரையிலே தோன்றிய சில புலவர்கள் பல நூல்களில் பாராட்டியிருக்கிருர்கள். மாறன் கோவை, மாறன் அலங்காரம், மாறன் அகப்பொருள் முதலிய நூல்கள் ஆழ்வாரைச் சிறப்பித்துத் தமிழை வளமுறச் செய்திருக்கின்றன.

ஏதாவது ஒரு தமிழ் நூலைப் பாராட்டி, வடமொழி நூல்கள் தோன்றியுள்ளன என்ருல் அந்தத் தனிப்பெருஞ் சிறப்பு நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கே உரியதாகும் என்பர். 'ஆரா அமுத கவி ஆயிர'த்தின் அருமை பெருமைகளைத் தமிழ்மொழியை அறியாதவர்களும் அறிந்துகொள்ளும்படி ஆயிரம் சுலோகங்கள் வடமொழியில் இயற்றப்பட்டுள்ளன. திருவாய்மொழி, தெலுங்குச் செய்யுளாகவும் மொழிபெயர்க்கப்பெற்றிருக்கிறது. கன்னட மொழியிலும் இத்தகைய நூல் ஒன்று உண்டு என்று தெரியவருகிறது.

## தமிழ் உரையாசிரியர்களும் நம்மாழ்வாரும்

திருவாய் மொழியிலிருந்து சிறந்த தமிழ் உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டியிருக்கிருர்கள். திருக்குறளின் உரையாசிரியர்களில் மிகச் சிறந்தவரான பரிமேலழகர்,

அற்றது பற்(று)எனில்
உற்றது வீடு

என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் பகுதியை ஒரு குறளின் உரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டுகிருர்.

திருவாய்மொழியில் அத்வைத வேதாந்திகளும் சிறப்பாகக் கொண்டாடும் ஒரு பாட்டு உண்டு. 'அன்றே அப்போதே வீடு' என்பது விஷயம். 'முக்தி எது?' என்ற வினுவுக்கு விடைபோல் அமைந்திருக்கிறது இப்பாசுரம்;

நன்ருய் ஞானம் கடந்துபோய்,
நல்இந் திரியம் எல்லாம்ஈர்த்(து)
ஒன்ருய்க் கிடந்த அரும்பெரும்பாழ்
உலப்பில் அதனை உணர்ந்து உணர்ந்து
சென்ருங்(கு) இன்ப துன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்ருல்
அன்றே அப்போ தேவீடு
அதுவே வீடு வீடாமே.

[நன்ருய் - நன்மை உடையவராய். நல் இந்திரியம் - (இங்கே) வலிமையுடைய இந்திரியங்கள். ஈர்த்து - இழுத்து. உலப்பில் - அழிவில்லாத, குறைவில்லாத. செற்றுக் களைந்து - முற்றும் கழித்து.]

இந்தப் பாசுரத்தையும் ஒரு குறளின் உரையில் பரிமேலழகர் மேற்கோளாகக் காட்டியிருக்கிருர்.

'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்' என்ற நம்மாழ்வார் வாக்கையும் பரிமேலழகர் மேற்கோளாகக் காட்டியிருக்கிருர். வேருெரு பாசுரப் பகுதியை உரை நடையாகவும் அமைத்துக்கொண் டிருக்கிருர். பரிமேலழகரின் திருக்குறள் உரைநடையிலும் கருத்து வளத்திலும் திருவாய்மொழி யின் சாயை படிந்துகிடப்பதைக் காணலாம்.

நச்சினுர்க்கினியரும் தமது தொல்காப்பியச் சூத்திர உரையில் திருவாய்மொழியை எடுத்துக் காட்டுகிருர். சேனுவரையர் என்ற உரையாசிரியரும் நம்மாழ்வாரின் பாசுரப்பகுதி ஒன்றை ஓர் இலக்கணக் குறிப்புக்கு உதாரணமாகக் காட்டியுள்ளார்.

பல இலக்கணக் குறிப்புக்களுக்கும் திருவாய்மொழியிலிருந்து மேற்கோள் காட்டுகிருர் பிரயோக விவேக நூலார். காரி மாறன் என்ற ஆழ்வாரின் பெயரையும் இவர் பிரஸ்தாபிக்கிருர். சுவாமி நாத தேசிகரும் தமது இலக்கணக்கொத்தில், 'கருநாய் கவர்ந்த காலர், சிதைகிய பானையர்' என்ற திருவாய்மொழிப் பாசுரப்பகுதியை மேற்கோளாகக் காட்டியிருக்கிருர்.

நம்மாழ்வாரும் திருவாய்மொழியும் தமிழகத்தில் சிறப்புற்று விளங்கியதற்குப் பிரசித்தமான தமிழ் உரையாசிரியர்களும் இலக்கணப் புலவர்களும் சான்று தருவதுபோல், திருவாய்மொழியின்

அகச் சான்றுகள் நம்மாழ்வாரின் தனிப்பெருஞ் சிறப்பை வற்புறுத்து கின்றன என்பதை இப்பிரபந்தத்தை ஓதி உணர்ந்தவர்கள் நன்கு உணர்வர்.

## ஸ்ரீ வைஷ்ணவ சிகரஜோதி

**தி**ருவாய்மொழியும் நம்மாழ்வாரின் மற்ற நூல்களும் அந்தாதி யாக அமைந்திருக்கின்றன. இறைவனை எண்ணி எண்ணி இன்ப உணர்ச்சி பெற்ற ஆழ்வார் அந்த உணர்ச்சியைக் கவிதை வாயிலாக வெளியிடாமல் இருக்க முடியாது என்ற நிலையை அடைந்தவராய்ப் பாடும்போது அப் பாடல்கள் எல்லாம் அந்தாதியாகவே அமைந்து விட்டனவாம்.

தொண்டர்க்(கு) அமு(து)உண்ணச்
சொல்மாலை கள்சொன்னேன்

என்று இவர் கூறுவதையும் கேளுங்கள். 'திருவாசிரியம் நீங்கலாக ஏனைய மூன்றும் முதற்பாவின் முதற்சொல் ஈற்றுப்பாவின் ஈற்றுச் சொல்லாகப் பெற்று'ச் சொல்மாலைகளாக அமைந்திருப்பதைக் காணலாம்.

ஆழ்வார் பாசுரங்களில் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மலர், ஒவ்வொரு பாசுரமும் ஒவ்வொரு மாலை என்று சொல்வதும் உண்டு. இவர், தாம் ஞானக்கண்ணால் கண்ட அழகனுக்கு அணிந் திருக்கும் மாலையின் மணமும் தேனுமாகிய பொருள் தொண்டர்க்கு அமுது என்று கருதலாம்.

இந்தப் பொருளின் சாரம் எது? அன்பு செலுத்துவது அடிய வர் கடமை; 'பண்டை வினை ஆயின் பற்றோடு ஒழிந்தது' என்று கருதும்படி அவற்றை ஒழிப்பது உள்ளுறையும் புருஷோத்தமன் கடமை.

வண்டமிழ் நூற்க நோற்றேன்,
அடியார்க்கு இன்ப மாரியே

என்றும் நம்மாழ்வாரே வற்புறுத்திக் கூறியிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

தொண்டர்க்கு அமுதமாக, இன்பமாரியாக அமைந்திருப்பது இவர் தொடுத்த சொல்மாலையாகிய பாசுரங்களின் மணமாகிய பொருளும் நறுந்தேனாகிய உட்பொருளும் எனலாம்.

உள்ளுறை அழகனே தம் உள்ளத்திலிருந்து அமுதகவியாக இன்ப மாரியாகத் தன்னை வெளியிட்டுக்கொண்டான் என்பதே நம்மாழ்வாரின் நினைவும் நம்பிக்கையும் ஆகும். தமக்கு இன்பம் அளித்த பாசுரங்கள் பகவானிடம் அன்பு பூண்ட பிறருக்கும் இன்பம் அளிக்கும், துன்பம் துடைக்கும் என்பதும் இவரது உறுதியான நம்பிக்கை யாகும்.

சீடரான மதுரகவி, 'இப் பாசுரங்களை நாவினால் ஓதி ஓதி இன்பம் எய்தினேன்' என்ற பொருள்படப் பாடியுள்ளார். இப்படி மதுரகவிகளுக்கு இன்பம் அளித்துத் துன்பம் துடைத்த பாசுரங் களையே இந்தச் சீடர் பிறருக்கும் துன்பம் துடைக்கும் வழியாகக் காட்டியிருக்கிறார். 'இதுவே நல்வழி; தொல்வழியும் இதுவே' என்பர் வேதாந்த தேசிகர்.

'தொல்வழி' என்பது வேத வேதாந்தங்கள் காட்டும் வழி. ஸாராம்சத்தில், 'அருமறைகள் தமிழ் செய்த' ஆழ்வார் காட்டும் நல் வழியும் அதுதான் என்பது தேசிகர் கருத்து. ஆழ்வார் காட்டிய வழிதான் மதுரகவி மூலமாக நமக்குக் கிடைத்திருக்கிறது என்கிறார். துணிவுடன் அந்தத் தொல்வழியும் இந்த நல்வழியும் ஒன்றே என நம்பித் துன்பம் தொடராத பேரின்ப வாழ்வை இம்மையிலேயே பெற்று வாழும் முறையே ஸ்ரீ வைஷ்ணவம் என்பது வேதாந்த தேசிகர் முதலான ஸ்ரீ வைஷ்ணவ ஞான தேசிகர்களின் திரு வுள்ளம்.

ஞானதேசிகர்களுக் கெல்லாம் ஞானதேசிகர் நம்மாழ்வாரே. 'மயர்வற மதிநலம் அருள'ப்பெற்ற 'பகவர்' என்ற மகாத்மாக்களுக் கெல்லாம் மகாத்மா இவரே! - இது ஸ்ரீ வைஷ்ணவர் கொள்கை.

முக்கோல் - பகவர்களைக் குறித்த பிரஸ்தாபத்தைப் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் காண்கிறோம். இவர்களை வைஷ்ணவ சமயத் துறவிகளான மகாத்மாக்கள் எனலாம். இவர்களைக் கலித்தொகை, 'அந்தணர்' என்று குறிப்பிடக் காண்கிறோம். 'அருளாளரான முனிவர்' என்ற பொருளிலேயே அந்தணர் என்ற சொல் இங்கே உபயோகிக்கப்படுகிறது.

பார்ப்பார் வேறு, அறிவர், அந்தணர் வேறு. அறிவர், அந் தணர் இவர் முற்றத் துறந்தவராக, மனத்தை அடக்கி இறை வனையே எண்ணும் இயல்பினராக, மூன்று கால நிகழ்ச்சிகளையும்

அறிபவராக உள்ளனர். பார்ப்பார் வேதம் ஓதுதல் மட்டும் உடையவராக (இந்நிலைகட்கு வராதவராகக்) காணப்படு கின்றனர் என்று வித்துவான் ஸ்ரீ புருஷோத்தம நாயுடு திருவாய் மொழி ஈட்டின் தமிழாக்கம் முதற்பகுதியில் (பக்கம் 20 முன்னுரைப் பகுதியில்) கூறியிருப்பது பொருத்தமே. எவ்வுயிர்க்கும் அருளைப் பூண்டு ஒழுகுவோரே அந்தணர் என்ற திருவள்ளுவர் கருத்தும் ஊன்றி நோக்கத் தக்கது.

உள்ளம் இறைவனைத் தவிர வேறொன்றையும் விரும்பாத இயல் பினர் அந்தணர் என்ற குறிப்பைக் கலித்தொகைச் செய்யுளில் காண் கிறோம். இவர்கள் ஏந்திய முக்கோலை, 'உரைசான்ற முக்கோல்' என்று கலித்தொகை புகழ்ந்து பாராட்டுகிறது. இந்த முக்கோலின் உட்பொருள் என்ன ?

சித்து, அசித்து, ஈசன் - அதாவது உயிர், உடம்பு, இறைவன்— என்ற தத்துவக் கொள்கையைக் குறிப்பது முக்கோல் என்பது வைஷ்ணவ அறிஞர் கருத்து. வேத மெய்ப்பொருளை முப்பொருளாக வெளியிடுவோர் பகவர் என்றால், வேதம் தமிழ்செய்து மெய்ப்பொருளை முப்பொருளாக ஓதிய சடகோபர், பகவருள் தலைவர் என்பர்.

இம்முக்கோல்—பகவர், இறைவனிடம் அன்புள்ள பக்தர்களாக இருப்பதுடன் தத்துவ ஞானிகளாகவும் இருப்பர். தத்துவ ஞானத்தில் உள்ளம் அதிகமாக ஊன்றிய துறவிகளைப் 'பகவர்' என்றும், பக்தியில் உள்ளம் அதிகமாக ஊன்றிய இல்லறத்தாரை அடியவர் என்றும் கூறுவது உண்டு.

மேவித் தொழும்அடி யாரும்
பகவரும் மிக்க(து) உலகே

என்ற வாக்கில் நம்மாழ்வார் பகவர், அடியார் என்ற இருதரத்தை யும் குறிப்பிடக் காண்கிறோம்.

'பகவர், அடியார்' உலகில் சிகர ஜோதியாகக் காண்பவர் நம்மாழ்வார் என்பது வைஷ்ணவர் கொள்கை. இந்த ஆழ்வாரை இத்தகைய சிகர ஜோதியாக்க் காட்டுவது திருவாய்மொழி.

உண்டோ வைகாசி விசாகத்துக்(கு) ஒப்பொருநாள் ?
உண்டோ சடகோபர்க்(கு) ஒப்பொருவர் ?—உண்டோ
திருவாய் மொழிக்(கு) ஒப்பு? தென் குருகைக்(கு) உண்டோ
ஒருபார் தனில் ஒக்கும் ஊர்?

என்ற ஆசாரியரின் வாக்கிலே நம்மாழ்வாருக்கும் திருவாய் மொழிக்கும் வைஷ்ணவ உலகம் அளித்திருக்கும் சிறப்பான ஸ்தானத்தைக் காணலாம்.

## திருவாய்மொழியின் வியாக்கியானங்கள்

திருவாய்மொழிக்கு ஐந்து வியாக்கியானங்கள் உண்டு. இவற்றை ஆறுயிரப்படி. ஒன்பதினுயிரப்படி, பன்னிராயிரப்படி. இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி என்று குறிப்பிடுவர். திருவாய்மொழிக்கு ஆளவந்தாரே முதல் உரையாசிரியர் என்ற குறிப்பை முப்பத்தாறுயிரப்படி என்ற ஈட்டு வியாக்கியானத்தில் காண்கிறேம். திருவாய்மொழி முதலான பிரபந்தங்களைப் பரவச் செய்த முதலாவது ஆசாரியர் நாதமுனிகள் ஆதலின், இவரையே முதலாவது உரையாசிரியராகக் குறிப்பிடுவதும் உண்டு.

நாதமுனிகள் காலம் தொட்டு ராமாநுஜர் காலம் வரையிலும் திருவாய்மொழி உரை, செவி வழியாகவே வழங்கிவந்தது. ராமாநுஜர் காலத்திலேதான் வியாக்கியானம் நூல் வடிவாயிற்று. ராமாநு ஜரின் கட்டளைக்கு இணங்க முதல் முதலில் ஆறுயிரப்படி என்னும் வியாக்கியானம் திருக்குருகைப்பிரானுன பிள்ளான் என்பவரால் செய்யப்பட்டது.

'படி' என்ருல் அளவு. ஆறுயிரம் கிரந்தங்களை உடையது ஆறுயிரப்படி. ஒரு கிரந்தம் என்பது உயிரும் உயிர்மெய்யுமான முப்பத்திரண்டு எழுத்துக்களை உடையது; ஒற்று இந்தக் கணக்கில் எண்ணப்படுவதில்லை.

ஒன்பதினுயிரப்படி வியாக்கியானம் நஞ்சீயரால் செய்யப் பட்டது. இவரது ஆசாரியரான பட்டர் இவருக்கு ஆறுயிரப்படி வியாக்கியானத்தைக் கற்பித்தார். அந்த வியாக்கியானம் நஞ்சீயர் உள்ளத்தில் ஊறிப் பெருகியது. எனவே தாம் கற்றுக் கொண்டதைச் சிறிது விரிவாக்கிப் பட்டரின் அனுமதி பெற்று இந்த வியாக்கியானத்தைச் செய்தார்.

பன்னீராயிரப்படி வியாக்கியானத்தைச் செய்தவர் வாதிகேசரி அழகிய மணவாளசீயர் என்பவர். இந்த வியாக்கியானம் இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி வியாக்கியானங்களுக்கும் காலத்தால் பிற்பட்டது. தமக்கு முன்புள்ள வியாக்கியானங்களை

யெல்லாம் நன்கு கற்று, அந்த நயங்களை யெல்லாம் சுருங்கக் கூறி விளங்க வைத்திருக்கிறார் இவர்.

வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளை இயற்றிய வியாக்கியானம்தான் இருபத்து நலாயிரப்படி. நம்பிள்ளையின் உத்தரவு பெற்று, இவர் இவ்வியாக்கியானத்தைச் செய்தார். இந்த வியாக்கியானம் ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது.

நந்தினம் முத்தெறி
நம்பூர் வரதர்தம் மாளிகையில்
சிந்தின சொற்கள்கொண்
டே,சில நாடு திறைகொள்வரே !

[நந்தினம் - சங்குக் கூட்டம். முத்து எறி - முத்துக்களை எறிகின்ற. நம்பூர் வரதர்தம் - நம்பூரில் தோன்றிய நம்பிள்ளையின்.]

என்ற செய்யுளில் நம்பிள்ளையின் ஞானவளம் குறிக்கப்படுகின்றது, இந்த ஞானவளத்தைத் தமது மதி நலத்தால் புதியதானதோர் அழகும் ஒளியும் பெறச் செய்து பயன்படுத்திக் கொண்டவர், வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளை.

## சிந்தின சொற்களும் சொற்பொழிவுகளும்

நம்பிள்ளையின் காலக்ஷேபத்தைக் கேட்டுக்கொண் டிருந்தவர்களில் ஒருவரைக் 'கொஞ்ச காலமாக நம்பிள்ளை மாளிகையைச் சார்ந்த காலக்ஷேப கூடத்திலே காணவில்லை. தேசயாத்திரையாகப் போயிருக்கிறார் என்பது மெள்ள மெள்ளத் தெரிய வந்தது. இவர் ஒரு சமயம் பொன்னும் மணியும் ஆபரணங்களும் மூட்டை மூட்டையாகக் கொண்டு திரும்பி வந்தாராம்,

இவருடைய சில நண்பர்கள் அதிசயித்து, 'சிற்றரசர்களிடம் ஒரு சக்கரவர்த்தி கப்பம் வாங்கி வருவதுபோல் வருகிறீரே! என்ன செய்தி?' என்று கேட்டார்கள். வேறு சிலர், 'உம்முடைய நாவன்மையால், சொற் செல்வத்தின் மகிமையால் இவ்வளவு, செல்வம் பெற்றுவிட்டீரோ ?' என்று வியந்தார்களாம்.

இந்த இரு வகையினரின் கேள்விகளுக்கும் ஒரு விடையாகத் தான் அவர், 'நம்பூர் வரதர்தம் மாளிகையில் சிந்தின சொற்கள் கொண்டே சிலநாடு திறை கொள்வரே' என்று பதில் சொன்னாராம். 'நாடுகளில் கப்பம் கொள்வதற்குப் படைகளும் வேண்டுமோ ?

சொற்களே போதும்!' என்றார் முதல் முதல். ஆனால் தம் சொற்களுக்கு அத்தகைய சக்தி இல்லை என்பதையும் ஒப்புக்கொண்டார். 'நம்பிள்ளை மாளிகையில் சிந்தின சொற்கள் கொண்டே, கப்பம் கொள்ள முடியும்; சில நாடுகளையே கப்பமாகவும் கொள்ள முடியும்!' என்றாராம்.

காலக்ஷேபத்தில் சிந்தின சொற்கள் என்றுகூடச் சொல்லவில்லை; 'அவர் மாளிகையில் சாதாரண உரையாடலில் சிந்தின சொற்களை நினைவில் வைத்துக்கொண்டேன்; அந்தச் சில சொற்களைக் கேட்டவர்களே பிரமித்துப்போய் இப்படிச் சம்மானித்து என்னைக் கௌரவப்படுத்தினார்கள்' என்பது குறிப்பு.

சிந்தின சொற்களின் சக்தி இப்படி இருக்க, நம்பிள்ளை காலக்ஷேபத்தில் நாள்தோறும் சொன்ன சொற்களை வடக்குத் திருவீதிப் பிள்ளை என்பவர் முறையாக எழுதி வைத்தார். சொற்பொழிவுகளைக் கேட்டுக் குறிப்பு எடுத்துத் தனியே ஏடுகளில் எழுதி வந்தார். திருவாய்மொழி விஷயமாக நம்பிள்ளை செய்து வந்த அந்தச் சொற்பொழிவுகளின் குறிப்பே, ஈடு முப்பத்தாறாயிரப்படி என்ற வியாக்கியான மாகும்.

இந்த வியாக்கியானத்தை ஒரு நாள் வடக்குத் திருவீதிப்பிள்ளை எடுத்துச் சென்று நம்பிள்ளை திருமுன் வைத்தார். 'இது என்ன?' என்று கேட்டார் நம்பிள்ளை; பிறகு ஏட்டையும் பார்வையிட்டார். தமது சொற்பொழிவுகளை மிக விரிவாகவும் அங்கே காணவில்லை; மிகச் சுருக்கமாகவும் காணவில்லை. நடையழகைத்தான் என்னென்பது? யானையைக் கோலம் செய்துவிட அது கம்பீரமாகப் புறப்பட்டு வருவது போன்ற தமது நடை யழகையும் இந்த வியாக்கியானத்திலே கண்டுகொண்டார் நம்பிள்ளை.

உள்ளுக்குள்ளே மகிழ்ச்சிதான். ஆனால் வடக்குத் திருவீதிப் பிள்ளையை நோக்கி, 'நன்றாக எழுதி யிருக்கிறீர்; ஆனால் அனுமதியின்றி எழுதியிருக்கிறீரே; அதை இங்கே கொடும்' என்று வாங்கி அதை அப்படியே கட்டி வைத்துவிட்டார். வியாக்கியான ஏடு நம்பிள்ளையின் மாளிகைக்குள்ளே அடைக்கலம் புகுந்தது. அதைக் குறித்து நம்பிள்ளை கொஞ்ச காலமாக ஒன்றுமே சொல்லவில்லை.

இந்த நிலையில் நம்பிள்ளையின் வேறொரு மாணாக்கரான மாதவப்பெருமாள் இந்த முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானத்தைப்

பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். அவர் ஒவ்வொரு நாளும் ஸ்ரீ ரங்கநாதனுடைய சன்னிதிக்குப் போய், 'இறைவனே! அந்த அழகான, கம்பீரமான, வியாக்கியானம் உலகத்திற்குப் பயன்படாமல் போய்விட லாகாதே!' என்று முறையிட்டுக் கொண்டார்.

ஒரு நாள் நம்பிள்ளை ஸ்ரீரங்கநாதனைச் சேவிக்க வந்தபோது அர்ச்சகர் நம்பிள்ளையை நோக்கி, 'ஈடு முப்பத்தாறுயிரப்படியை நீர் மாதவப்பெருமாள் என்ற அன்பரிடம் கொடுக்க வேணும்; இது நம்பெருமாள் கட்டளை!' என்றார். நம்பிள்ளையும் அக்கட்டளையைத் தலைமேற் கொண்டு அப்படியே செய்தார்.

மாதவப் பெருமாள் நம்பிள்ளையை நோக்கி, 'அடியேனுக்கு முப்பத்தாறுயிரம் கொடுத்தீர்; அடியேனை வாழ்வித்தீர்; செல்வ ராக்கினீர்' என்று அடிகளில் விழுந்து, நன்றி தெரிவித்துக்கொண் டார். 'பெருமாள் உமது விஷயத்தில் கிருபை செய்தார்!" என்று பதில் சொன்னார் நம்பிள்ளை.

மாதவப்பெருமாள், 'பெருமாளின் கிருபையும் ஆசாரிய மூர்த்தியான உமது சொற்பொழிவுகளும் உலகத்தை உய்விக்க வேணும். இதுவே என் ஆசை' என்று சொன்னார். நம்பிள்ளை இளநகை அரும்பியவண்ணம், 'பகவான் உம்மை வாழ்வித்து, உலகத்தையும் வாழ்விக்கும் கிருபை உள்ளவர்' என்றார்.

'ஈடு' என்பது உடலில் இட்டுக்கொள்ளும் கவசத்தை உணர்த்துவ தாகும். கவசம் உடலைக் குளிர் முதலியவற்றால் வருந் தாமலும், போர்க்களத்தில் தன் நிலைகெட்டு வேறுபடாமலும் காப் பாற்றுகிறது. அப்படியே இந்த வியாக்கியானம் திருவாய்மொழிக் குக் கவசமாக அமைந்திருக்கிறது என்பர்.

திருவாய்மொழியில் இடைச் செருகல் முதலான குற்றங்கள் ஏற்படாதபடி காப்பதும் ஈட்டு வியாக்கியானம். அன்னிய மக்களால் திருவாய்மொழி தன்நிலை திரிந்து, மாறுபடாதவாறு காத்து நிற்ப துடன் அன்பர் கூட்டத்திலேயே கற்போரும் எழுதுவோரும் தங்கள் குறைகளினால் திருவாய்மொழியைக் கெடுத்துவிடாமலும் இந்த வியாக்கியானம் காப்பாக இருக்கிறது என்பர்.

நம்பிள்ளை, காலக்ஷேபத்தில் சொன்னதை வடக்குத் திருவீதிப் பிள்ளை ஏட்டில் இட்டு வைத்ததால் ஈடு என்று இந்த வியாக்கி

யானத்தைக் கூறுவதும் உண்டு. கற்பவரை இது இறைவனிடத்தும் ஆழ்வாரிடத்தும் திருவாய்மொழியிடத்தும் ஈடுபடச் செய்வதால் ஈடு என்று பெயர் பெற்றதாகச் சொல்வதும் உண்டு.

தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை
வள்ளல் வடக்குத் திருவீதிப்—பிள்ளைஇந்த
நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்த(து)
ஈடுமுப்பத் தாறு யிரம்

என்பது மணவாள மாமுனிகள் வாக்கு.

'திருவாய்மொழியால் வியாக்கியானங்களுக்கு ஏற்றமா? ஈடு முதலான வியாக்கியானங்களால் திருவாய்மொழிக்கு ஏற்றமா?' என்று அதிசயிக்கும்படி அமைந்துவிட்டன வியாக்கியானங்கள். இவற்றில், ஈட்டின் நடையழகும் பொருள் அழகும் தனிச் சிறப்பு வாய்ந்தன. 'பதசாரம் கூறுவதில் இவ் ஈட்டின் ஆசிரியருக்கு ஒப்பாரும் மிக்காரும் இத்தமிழ் நாட்டில் இலர்' என்பது ஈட்டின் தமிழாக்கம் என்ற சென்னைப் பல்கலைக் கழக வெளியீட்டின் முன்னுரைப் பகுதியில் காணப்படும் ஒரு குறிப்பாகும்.

# 14. சில அடிப்படைக் கொள்கைகள்

**வ**ட இந்தியாவில் தோன்றிய சமயக் கொள்கைகளும் அவற்றின் அடிப்படைத் தத்துவ ஞானமும் தென் இந்தியாவில் - சிறப்பாக நம் தமிழகத்திலே - மாறிப் பிறந்து கலையுருவம் பெற்றுத் தமிழ்ப் பெருமக்களின் உரிமைச் செல்வ மாயின. இச் செல்வம் பிறகு வட நாட்டினருக்கும் பயன்பட்டது என்பது இந்திய சரித்திரத்தில் கலை வளர்ச்சி குறித்து வற்புறுத்தப்படவேண்டிய ஒரு நற்பெருஞ் செய்தியாகும்.

## யாழின் இசைவேதம் (ஐந்து - உண்மைகள்)

**த**மிழகத்திலே, 'வடகலை தென்கலை பலகலை யும்பொதி மதுரை வளம்பதியோ ?' என்று குமரகுருபரர் கொண்டாடும் மதுரைமா நகரைத் தலைநகரமாகக் கொண்ட பாண்டிநாட்டிலும் தென்பாண்டி நாடு, காரிமாறப் பிரானை (நம்மாழ்வாரை)த் தோற்றுவித்து, அவர் வாயிலாக ஹிந்து சமயத்துக்கே புதிய உயிரும் புதிய ஒளியும் புதிய அழகும் அளித்திருக்கிறது. இந்த மகா புருஷரின் சமயக் கொள்கைகளையே ஸ்ரீ வைஷ்ணவ தரிசனம் என்று சிறப்பித்துப் பேசுகிறார்கள்.

நம்மாழ்வார் காலத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே நம் தமிழகத்தில் வைஷ்ணவக் கொள்கைகள் நிலவி வந்தன என்பதற்குப் பண்டைத் தமிழ்நூல்கள் சான்று தருகின்றன.

அங்கண் முல்லையின்
தெய்வம்என்(று) அருந்தமிழ்
உரைக்கும்
செங்கண்மால்

என்று சிவநேசச் செல்வரான சேக்கிழார்பெருமான் கூறுவது போல் முல்லை என்ற காட்டுப்புறங்களில் வசித்த ஆதித் தமிழர்கள் கண்ணனைத் தெய்வமாக வணங்கி வந்தார்கள். காடு சார்ந்த முல்லை நிலத்திற்குரிய இத்தெய்வம், 'மாயோன்' என்று தொல்காப்பியத்தில் சிறப்பாகக் குறிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம்.

சங்க காலத்திலே கண்ணனை முழுமுதற் கடவுளாகக் கருதி வழி பட்ட மக்களும் உண்டு; புலவர்களும் உண்டு. இந்த வழிபாடே தீதில் நன்னெறியாகப் பெருகி நம்மாழ்வார் வாக்கில் ஞானவெள்ள மாகி நிரம்பியது என்று சொல்லலாம்.

தமது இஷ்டமூர்த்தியான கண்ணபிரானை, 'இன்தமிழ் ஈசன்' என்று குறிப்பிடுகிறார் தலைசிறந்த தமிழரான நம்மாழ்வார். கண்ண னுக்குத் தமிழ் - உருவமும் கலையுருவமும் தந்தவர்களில் நம்மாழ் வாரே மிகவும் சிறந்தவர் என்பர்.

கண்ணன் தம் மனத்துள் வலியவந்து புகுந்து நின்று, தனக்கே பணிசெய்யுமாறு இடைவிடாது உணர்த்தி வந்ததாக நம்மாழ்வார் கூறுகிறார். தமது இளகிய நெஞ்சிலிருந்து தமிழ்ப் பாசுரங்களை அவனே வெளியிட்டதாகவும் கூறியுள்ளார். இவர் வாக்கிலே உபநிஷதப் பொருள் கலையாகிக் கவிதையாகித் தெளிவு பெற்றுப் பொலிவுபெற்று அனைவருக்கும் பயன்படுகிறது என்பதும், உபநிஷதப் பொருளைத் தெளிவாக உணர்ந்துகொண்டவர்களும் ஆழ்வார் என்ற சாட்சியைக் கொண்டு, கண்ணனுடைய பரம கருணையை நன்கு உணர்ந்துகொள்ளலாம் என்பதும் ஸ்ரீவைஷ்ணவ அறிஞர்களின் கருத்து.

நம்மாழ்வார் வாக்கிலே இவர் கண்ட கண்ணனுடைய நிலை, உயிர்களின் நிலை ஆகிய இரண்டு நிலைகளையும் தெளிவாக உணர்ந்துகொள்வதுடன், உயிர் இறைவனை அடையவேண்டிய நெறியையும் தெரிந்துகொள்கிறோம். எல்லாவற்றுக்கும் மேலாகப் பிரபன்னனாகி (பிரபத்தி என்ற சரணாகதி நிலையில் நின்றவனாகி)ப் பணிபுரிந்து வாழும் முறையையும் தெரிந்துகொள்கிறோம்.

இந்த ஐந்து விஷயங்களையும் இவர் வாக்கில் நாம் தெளிவாகத் தெரிந்துகொள்வதால் இந்த நம்மாழ்வாரை,

மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்.

என்று போற்றுகிறது வைஷ்ணவ உலகம்.

இத்தகைய உண்மைகளை மற்றை ஆழ்வார்களின் வாக்கிலும் காண்கிறோம். அவர்களும் 'மயர்வற' (மயக்கம் அல்லது அறியாமை அற்றுப்போகும்படி) மதிநலம் அருளப் பெற்றவர்களே.' எனினும்

இத்தகைய மதிநலத்தை இறைவனது பரமகருணை நம்மாழ்வாருக்குச் சிறப்பாக அருளியது என்பர்.

பன்னிரண்டு ஆழ்வார்களின் இன் தமிழ்ப் பாசுரங்களும் சேர்ந்தே நாலாயிர திவ்யப் பிரபந்தமாகும், எனினும் நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கே தனிப்பெருஞ் சிறப்பு உரியதாகும். 'யாழின் இசை வேதம்' (யாழில் அமைத்துப் பாடத்தக்க வேதம்) என்று இத்தமிழ் மறையைச் சிறப்பித்துப் பேசுகின்றார்கள்.

நம்மாழ்வார் இயற்றிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு தமிழ் வேதங்களுக்கும் திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி முதலான ஆறு பிரபந்தங்களையும் ஆறு அங்கங்கள் என்று கூறுவது உண்டு. வடமொழி வேதங்களுக்கு ஆறு அங்கங்கள் இருப்பதுபோல் தமிழ் வேதங்களுக்கும் ஆறு அங்கங்கள் அமைந்திருக்கின்றன என்பது வைஷ்ணவர்களின் கொள்கை. மற்றைய ஆழ்வார்களின் பதினான்கு பிரபந்தங்களையும் பதினான்கு உப அங்கங்கள் என்று கூறுவர்.

'அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்து உரைத்த ஆழ்வார்களி'ன் திவ்யப்பிரபந்தங்கள் இருபத்து நான்கு. இவற்றில் சிறப்பால் பெயர் பெற்றது திருவாய்மொழி. 'வாய்மொழி' என்பது 'வேதம்' என்ற பொருளில் பரிபாடலிலும் வழங்குகிறது; வேறு எந்தத் திவ்யப் பிரபுந்தத்திற்கும் இல்லாத தனிச்சிறப்பு இத் திருவாய்மொழிக்கு உண்டு என்பதும், இதன் ஆசிரியர் ஏனையோரினும் சிறந்து,'நம் ஆழ்வார்' என்று போற்றத்தக்க பெருஞ் சிறப்பு வாய்ந்தவர் என்பதும் பலரும் அறிந்த விஷயங்களே.

## நம்மாழ்வாரின் பாகவத தர்மம்

ஆழ்வார்கள் அருளிச்செய்த பிரபந்தங்களை விசேஷ ஆதாரமாகக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்கள், 'உயர்வற உயர்நலம் உடையவனே பகவான்' - அதாவது மிக உயர்ந்த நற்குணங்களை உடையவனே புருஷோத்தமன் என்று சித்தாந்தம் செய்தார்கள். இக்கடவுளை, 'ஆதியம் பகவன்' என்பர் நம்மாழ்வார். 'ஆதி பகவன்' என்று திருவள்ளுவர் கூறுவதும் ஒப்பிடத்தக்கது. பகவானை வழிபடும் சமயம் பாகவத சமயம்.

ஸ்ரீ சங்கரரும் பாகவத சமயத்தைக் குறிப்பிடுகிருர். சங்கரர் காலத்திற்கு முன்பே இம்மதம் பிரசித்தமாக இருந்திருக்க வேண்டும். சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தென்னிந்தியா விலும் இச்சமயம் காணப்பட்டது; தமிழகத்திலும் சிறப்புற்று ஓங்கியது.

'பகவத் பிரபந்தம்' என்று திருவாய்மொழியைச் சிறப்பித்துப் பேசுவதால் திருவாய்மொழியின் வியாக்கியானங்கள் பகவத் விஷயம் என்று சொல்லப்படுகின்றன. வியாக்கியான சகிதமான திருவாய்மொழியே பகவத் விஷயம் என்று கூறுவதும் உண்டு.

தாமிரபருணி ஆறு, 'மண் ஆடின நீரோடு புரண்டு வந்து ஆழ்வார் திருநகரியில் தோதவத்திச் சங்கணித்துறையில் விழுந்த உடன் ஸ்படிக மயமான தெள்ளிய தீர்த்தமாகும். அதுபோல் சுருதி முதலானவைகள் ஆழ்வார் மனத்தில் ஆனவுடன் ஆழ் பொருளை அறிவிக்கும்' என்பர். இந்த வாக்கை, 'யாழின் இசை வேதம்' என்று கூறுவதில், வேதத்தின் உண்மைகளை அழகாக நெஞ்சுருகச் சித்தாந்தப்படுத்தி உரைப்பதில் திருவாய்மொழிக்கு மேற்பட்ட நூல் இல்லை என்ற குறிப்பையும் காண்கிரோம்.

உடலில் உள்ள உயிர்போல் பரமாத்மா எங்கும் வியாபித்திருக் கிருன் என்பதும், உலகங்களுக் கெல்லாம் வித்தாக, முதற்காரண மாக உள்ள பரம்பொருள் எல்லாப் பொருள்களிலும் வேருகி அவற் றுள் மறைந்து கிடக்கிறது என்பதும், இந்தப் பரம்பொருள் அல்லது பரமாத்மா பரம கருணையுடன் உதவி செய்துகொண்டே இருக்கிறது என்பதும் நம்மாழ்வாரின் மூலதாரக் கொள்கைகள்.

திருவாய்மொழி ஆரம்பிக்கும்போதே, பகவான் எல்லாக் கல்யாண குணங்களையும் உடையவன் என்று குறிப்பிடுகிருர் நம் மாழ்வார். இயற்கையினின்றும் இறைவன் வேருனவன், ஜீவாத் மாக்களைக் காட்டிலும் வேருனவன் என்ற குறிப்பையும் திருவாய் மொழியின் ஆரம்பத்திலேயே வற்புறுத்தியுள்ளார்.

உடலுக்கு உயிர்போல் எங்கும் வியாபித்து, இந்த 'உலக வியாபார'த்தை அன்பினுல். பரம கருணையால், தன் இச்சையால் நடத்தி வருகிருன்—அன்புருவாகிய அழகன். நமது உடம்பில் எப் பகுதியில் காயம் பட்டாலும் அந்தக் காயத்தை ஆற்ற வேண்டிய உபாயத்தை மேற்கொள்வது ஆத்மா. அப்படியே நமது கஷ்டங்

களைப் பார்த்துச் சகிக்காமல் இறைவன் மருந்து செய்த வண்ணமாய் இருக்கிறான். இத்தகைய அடிப்படைக் கருத்துக்களையும் திருவாய்மொழியில் காண்கிறோம்.

இந்த நிலையில் நாம் செய்ய வேண்டியது என்ன? இதையும் நம்மாழ்வார் தெளிவுபடுத்துகிறார். உடலில் உள்ள ஒவ்வோர் உறுப்பும் அன்புடன் ஒத்துழைத்து உயிருக்குப் பணி செய்து வருகிற தல்லவா? இப்படி இறைவனுக்குப் பணிபுரிவது ஜீவாத்மாக்களின் கடமையாகும்.

உலகத்திற்குச் செய்யும் பணியும் உயிர்க்குயிராகிய இறைவனுக்குச் செய்ய வேண்டிய பணிதான். அன்பர்களாகிய அடியவர்களுக்குச் செய்யும் பணியையே, தனக்குச் செய்யும் பணியைக் காட்டிலும் உகந்து பாராட்டுகிறான் இறைவன்.

இவ்வாறு பணிபுரிந்த வண்ணம் இறைவனைச் சரணமாக அடைந்து, இப்பிறவியில் சுகமாக வாழ்ந்து, மோட்சமும் அடையலாம் என்பது ஆழ்வார் கொள்கை.

'காமம் யாவையும் தருவதும் அப்பதம் கடந்தால் சேமவீடு (மோட்சம்) உறச் செய்வதும் இறைவனுடைய பரம கிருபைக்கு அறிகுறியான ஓர் திருப்பெய ராகும்'என்ற கம்பன் கருத்து நம்மாழ்வார் கருத்தே யாகும். அன்பு செய்வதும் பணிபுரிவதுமே பக்தன் கடமை, பிரபன்னன் கடமை. நமக்கு வேண்டியவற்றை உதவி, இம்மையிலும் மறுமையிலும் பாதுகாப்பது ஈசுவர கிருபை.

நாம் இறைவன்மீது செலுத்தும் அன்புக்குப் பக்தி என்று பெயர்! அவனுக்கு நம்மீதுள்ள அன்பிற்குக் கிருபை என்று பெயர், மெய்யன்பனாகிய பிரபன்னன் மோட்சத்தையும் விரும்புவதில்லை; இவனுக்குப் பரம புருஷார்த்தம் கைங்கரியந்தான். இது நம்மாழ்வாரின் பாகவத தர்ம ஸாரம்,

## சரணாகதியும் கைங்கரியமும்

மக்களுக்கிடையே பரஸ்பர அன்பும் கைங்கரிய உணர்ச்சியும் நிலவிவந்தால் போதுமே. கடவுள் - அன்பு என்ற பக்தி எதற்காக? அவனைச் சரணமாக அடைவது எதற்காக? இப்படி இந்நாளில் சிலர் கேட்கிறார்கள். 'நாம் கஷ்டப்படுகிறோம்; பகவான் ஒரு கஷ்ட

மும் இல்லாமல் சும்மா இருந்து. உறங்கிக் கிடந்து, நமது வழி பாட்டை பெற்றுக்கொள்கிருனே!' என்றும் இவர்கள் நினைக்கக் கூடும்.

ஒரு சமயம் கைகால் முதலான உறுப்புக்கள் எல்லாம், 'சும்மா இருந்து சுகம் பெறுகின்ற வயிற்றுக்கு உணவு அளிக்க மாட்டோம்!' என்று ஒத்துழையாமை செய்தன என்ற கதையைப் படித்திருக்கிறீர் கள். அந்தக் கதையின் முடிவுதான் உங்களுக்குத் தெரியுமே! வயிற்றுப் பெருமான்மீது பொருமை கொண்டு ஒத்துழையாமையை மேற்கொண்ட உறுப்புக்களெல்லாம் சோர்ந்துபோய், 'மரண நிலையை' நெருங்கிவிட்டன அல்லவா? புருஷோத்தமனைச் சரணு கதி அடையாத வாழ்வு வாழ்வாகாது; ஒரு வகை. 'மரண நிலை' தான் என்று திருவாய்மொழி கற்பவர் சொல்லக்கூடும்.

மேலே சொன்ன கதையின் உட்பொருள் என்ன? வயிற்றுக்கு அளிக்கும் உணவு அவயங்களுக் கெல்லாம் அளிக்கப்படும் உணவு தான். உணவு, முதல் முதல் வயிற்றுக்குப் போகிறது. பிறகு ரத்த ரூபமாக அவயங்களை யெல்லாம் ஊட்டி வளர்க்கிறது. அன்பர்களுக்கு, 'உண்ணும் சோறு பருகும் நீர், தின்னும் வெற்றிலை யும் எல்லாம்' என்று நம்மாழ்வார் காட்டும் இறைவனைச் சரணமாக அடைந்து, அடியவர் பணியும் உலகப் பணியும் செய்துகொண்டே இருந்தால், இந்தப் பணிகளே இறைவன் பணியுமாகி உலகத்தை ஊட்டி வளர்க்கும் என்பது திருவாய்மொழியின் புதைபொருள் களில் ஒன்று.

பகவத் கைங்கரியம் பாகவத கைங்கரியத்தால் அன்றி ஏற்படுவ தில்லை என்றுகூடத் துணிந்து கூறிவிடலாம். பகவானுடைய தொடர்பு உள்ளவர்களே பாகவதர்கள். உண்மையில் இத்தொடர்பு உலகமெங்கும் வியாபித்திருப்பதால் உலக கைங்கரியம் பாகவத கைங்கரியம் ஆகிவிடும் என்றும் துணியலாம். இக்கருத்துடன்தான் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' என்பர் நம்மாழ்வார்.

ஏட்டுச் சுரைக்காய் அன்று ஆழ்வார் உபதேசம். தம் அநு பவத்திற்கு வந்த உண்மைகளை ஒட்டிப் பிறரும் அனுஷ்டித்துப் பார்க்கவேண்டும் என்ற பெருநோக்குடன் இவர் தமது உபதேசங் களைப் பாடி வைத்திருக்கிருர்.

இவர் காட்டும் பிரபத்திப் பெருவழியிலே, 'நான், எனது' என்ற அகப்பற்று, புறப்பற்றுகள் ஒழிந்து போகும்; புலனடக்கம் தானே வந்தடையும்; ஆத்ம சமர்ப்பணம் கைகூடும். கர்ம ஞான பக்திகள் அனைத்தும் இவ்வழியிலே பணிசெய்து கிடக்கும்.

## நெடுந் தருமநெறி இது

இப் பெருவழியிலே இன்னாருக்குத்தான் அதிகாரம் உண்டு என்ற நியமம் இல்லை; கால தேச நியமங்களும் இல்லை. 'பாகவத மதத்தில் வர்ணாச்ரம பேதங்கள் அன்றிப் பாகவதர்கள் எவரே யாயினும் அவரே நாம் வணங்கும் அடிகளாவார்' என்றும், 'பகவத் பக்தர் அல்லாதார் எக்குலத்தினரே யாயினும் அவர்கள் சண்டாளர் ஆவார்கள்' என்றும் ஸ்ரீ வைஷ்ணவம் என்ற நூலில் 'பகவத் விஷயம்' என்ற தம் கட்டுரையில் ஸ்ரீமான் சி. நரஸிம்மாசாரிய சுவாமி நம்மாழ்வாரின், 'குலம் தாங்கு சாதிகள்......' என்ற பாசுரத்தின் கருத்தைச் சுருங்கக் கூறி விளங்கவைத்திருக்கிறார்.

இறைவனை வணங்கும் துறைகள் பல பலவாக இருப்பதால், இறைவனை வணங்கி வழிபடுவதற்குரிய நூல்கள் எம்மொழியில் இருந்தாலும் எந்த நாட்டில் எழுதப்பெற்றிருந்தாலும் அவையெல்லாம் நல்ல நூல்களாகவே மதிக்கத்தக்கன. நம்மாழ்வாரின் ஸ்ரீ வைஷ்ணவம் எந்த மதத்தையும் விரோதிப்பதில்லை; நாஸ்திகத்துடனும் இதற்கு விரோதமில்லை!

'உற்றார்கள் எனக்(கு) இல்லை
யாரும்'

என்றும்,

'உற்றார்கள் எனக்(கு) இங்(கு)
எல்லாரும்'

என்பதும் ஆழ்வார் திருவாக்கு.

எனவே, இது கம்பன் கூறுவதுபோன்ற, 'நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறி.' இதில் சாதி, இனம், நிறம் முதலான சிறு நெறிகளுக்கு இடமில்லை.

# 15. ஞான வீரரின் காதல்

காதலும் வீரமும் சங்ககாலத் தமிழர்களின் குணதிசயத்தை உரு வாக்கியுள்ளன. 'அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே' என்று அக்காலத்துப் புலவர் ஒருவர் பாடியிருக்கிறர்.

காதலால் நெஞ்சம்
அன்பு கலந்திலேன்

என்பது தொண்டரடிப்பொடி ஆழ்வார் வாக்கு.

காதலியும் காதலனும் தங்கள் அன்புள்ள நெஞ்சங்கள் கலக்க மணம் புரிந்துகொள்வதுபோல், அழகிய மணவாளனுன இறைவ னுடன் காதலால் நெஞ்சு கலந்து வாழ விரும்புகிறர் தொண்டரடிப் பொடி ஆழ்வார்.

இந்த ஆழ்வார்கள் வீரத்தை ஞானவீரம் ஆக்கிக்கொள்வதை யும் காண்கிறேம். ஞானப் பெருவீரரான நம்மாழ்வாரும் காதல் - துறையில் அரிய பெரிய தத்துவப் பொருள்களை வெளியிட் டிருக்கிறர்,

'அருளிச் செயலிலும் அகப்பொருளா?' என்று சிலர் கேட்க லாம். 'அகப்பொருள்' என்பது அகத்தைச் சார்ந்துவரும் பொருள்; அகத்தில் (மனத்தில்) உண்டாகும் உணர்ச்சி. ஒருவனும் ஒருத்தி யும் தம்முள் ஒத்த அன்பினராய்ப் பெறுகின்ற இன்பத்தைக் குறிப் பது. இந்த இன்பம், உணர்வே அநுபவிப்பதாய் அகத்தே நிகழ் வதால் அகம் எனக் குறிக்கப் பெறுகின்றது. பக்தியையும் இத் தகைய காமமாகக் கூறுவது பொருந்துமா?'

## வானினும் உயர்ந்த காதல்

காதலை வருணிக்கும் சங்கப் புலவர் ஒருவர் அது நிலத்தினும் பெரியது என்றும், கடலிலும் ஆழமானது என்றும், வானினும் உயர்ந்தது என்றும் சிறப்பித்துப் பேசுகிறர். பக்தர்களுக்கோ புரு ஷோத்தமன் ஒருவனே புருஷன். அவன்மீது இவர்கள் பெண் தன்மையுற்றுக் கொள்ளும் காதலே பக்தி; பக்திக் காதலே வானினும் உயர்ந்தது.

இத்தகைய காதல்துறையில் தத்துவ ஞானியும் பரம பக்தரு மான நம்மாழ்வாரும் தம் அரும்பெருங் கருத்துக்களை வெளியிட் டிருக்கிறார். நோயுற்ற குழந்தை மருந்தை விரும்பாத நிலையில் தாய் அம்மருந்தைச் சர்க்கரைக் கட்டியில் பொதிந்து மறைத்துக் கொடுப்பதுபோல் ஈசுவர ஞானத்தைக் காதலி பேச்சாகப் பேசிச் சிற்றின்ப விருப்பமுள்ள மக்களையும் பேரின்ப நெறியில் திருப்ப முயன்றார் ஆழ்வார் என்று கூறுவதும் உண்டு.

பெண் பேச்சான அகப்பொருள் - பாசுரங்களில் தம் அகத்தி லுள்ள பரம பக்தியைக் கொட்டி வைத்திருக்கிறார். கடலை ஒரு குடத்துக்குள் அடைத்துக் காட்டுவதுபோல் ஒரு காதற் பாட்டில் கடல் போன்ற அநுபவ ஞானத்தை அல்லது உணர்ச்சிப் பெருங் கடலை அமைத்துக் காட்டும் அற்புதத்தை நம்மாழ்வார் வாக்கிலே காண்கிறோம். இதை அறியாதவர்களே, 'அருளிச் செயலிலும் அகப்பொருளா ?' என்று திகைப்பார்கள் ; அஞ்சிப்போவார்கள்.

நம்பிள்ளையின் காலட்சேப கோஷ்டியில் ஒரு புலவன் கலந்து கொண்டு, திருவாய்மொழியின் பொருளைக் கேட்டு வந்தான், 'அஞ் சிறைய மட நாராய் !' என்று தொடங்கும் பாசுரத்திற்கு வந்ததும், பயந்தே போய்விட்டான். 'அற்றது பற்றெனின் உற்றது வீடு...' என்பது போன்ற பாசுரங்களைக் கேட்டு, ஆழ்வாரின் தத்துவ ஞானத்தை வியந்துகொண் டிருந்தவன், 'நாரைவிடு, தூது' என்ற துறையில் அமைந்த பாசுரத்திற்கு வந்ததும் இது காமுக வாக்கியமா யிருக்கிறதே !' என்று கலங்கிக் கைகழுவிப் போய்விட்டானும்.

'பகவத் காமம் என்று அறிந்திலன் பாக்ய ஹாநியாலே (பாக்கியக் குறைவாலே)' என்ற குறிப்புடன் இந்த ஐதிகம் ஈடு வியாக்கியானத்தில் பதிவு செய்யப்படுகிறது. காமத்தைப் பக்தி யாகிய சீரிய நற்காம மாக்கி உய்ய வழிகாட்டுகின்றன ஆழ்வார் அருளிய காதற் பாசுரங்கள்.

நம்மாழ்வார் எடுத்தாளும் அகப்பொருள் துறை ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. தமது நாரைவிடு தூதில் நம்மாழ்வார் தம்மைத் தலைவியாகக் கொண்டு ஒரு பெண் - நாரையைத் தம் தலைவனாகிய புருஷோத்தமனிடம் தூது அனுப்புகிறார். 'அஞ்சிறைய மட நாராய்!' என்று தொடங்கும் திருவாய்மொழிப் பதிகம் மிகவும் பிரசித்த மானது.

எப்பொழுதும் தலைவனைப்பற்றிய நினைவாகி, வேறென்றிலும் நினைவின்றி, 'அவனை எப்போது அடைவோம், எப்படியாவது அவனை அடைய வேண்டும் என்ற இதயத் துடிப்புடன் காதலி தன் முன்னே தோன்றும் பறவையையோ வண்டையோ விண்ணில் தோன்றும் மேகத்தையோ தலைவனிடம் சென்று தன் நிலை கூறி அவனை விரைந்து வருமாறு சொல்ல வேண்டும் என்று தூது அனுப்புவது அநாதியான ஒரு மரபு. அந்த மரபை ஒட்டி ஆழ்வார் பாடியிருக்கும் பாடல்களில் வானினும் உயர்ந்த கருத்துக்களைக் காணலாம்.

## எங்கும் அவன்தான்

**கா**தலிக்கு எதைக் கண்டாலும் அப்பொருள் அவன் உருவத்தையே நினைவூட்டுவதும் இயல்பு. 'காடும் செடியும் அவளாகத் தோன்றும் என் கண்களுக்கே!' என்பது காதலன் நிலை : இப்படியே காதலியின் நிலையும் அமையக் கூடுமல்லவா ? இத்தகைய காதலியின் மன நிலையைப் பற்று அறுத்து, வீடு பெற்ற நாம்மாழ்வாரிடமும் காண்கிறோம்.

சந்திரோதயம் காண்கிறார் : அந்த நிலவொளியில் மணி வண்ணனுடைய குளிர்ந்த ஒளியைத்தான் காண்கிறார். நின்ற குன்றும் நெடுமாலையே நினைவூட்டுகிறது. மழை பெய்கிறது; முகில் வண்ணனின் நினைவுதான், அந்தக் கருணை மழைதான், தியாகப் பொழிவுதான்.

இத்தகைய பக்திக்காதலைக் காதல் துறையில் அமைத்திருக்கும் பாசுரம் ஒன்றைப் பார்க்கலாம் :

ஒன்றிய திங்களைக் காட்டி,
'ஒளிமணி வண்ணனே !'

என்னும் ;

நின்றகுன் றத்தினை நோக்கி,
'நெடுமாலே ? வா'

என்று கூவும் ;

நன்றுபெய் யும்மழை காணில்,
'நாரணன் வந்தான்' என்(று) ஆலும் ;

என்(று) இன மையல்கள் செய்தார்
என்னுடைக் கோமளத் தையே !

[திங்களைச் - சந்திரனை. ஆலும் - ஆடும். இன - இன்ன; இத்தன்மையான. கோமளம் - (இங்கே) இளமையும் மென்மையும் அழகும் வாய்ந்த புதல்வி; அருமைப் பெண்.]

தாய் பேச்சாக அமைந்திருக்கும் பாசுரம் இது. இத்தகைய பாசுரங்களைத் திருவாய்மொழியின் ஏழு பதிகங்களில் காணலாம். தோழியின் பேச்சாக வரும் பாசுரங்களும் உண்டு. பதினேழு பதிகங்கள் தலைவியின் பேச்சாகவே அமைந்திருக்கின்றன.

மேலை நாட்டார் இயற்கைப் பொருள் - அழகுகளில் வெறும் அழகையே காண்கிறார்கள் ; பாடுகிறார்கள். நம்மாழ்வாரோ இயற்கை யழகுகளிலும் தமது அழகுத் தெய்வத்தையே கண்டு காதலிக்கிறார். அவன் திருவருளில் மூழ்கி, 'தான் என்னை முற்றப் பருகினான்' என்று தம் அநுபவத்தை வெளியிட்டிருப்பவர் வேறு எவ்விதமாக இயற்கை யழகுகளை அநுபவித்திருக்க முடியும் ?

அக அழகில் வேரூன்றி வளரும் அழகே அழகு என்று கம்பன் கூறியுள்ளான். நம்மாழ்வாரோ அழகின் ஆழத்திலே தெய்விக அழகையே காண்கிறார்.

திருமாலிருஞ்சோலை என்ற அழகர் மலை நம்மாழ்வார் காலத்தில் தமிழகத்தின் அழகு நிலையங்களில் ஒன்றாக இருந்தது. அந்த மலை யழகையும் சோலையழகையும் ஆழ்வார் நேரில் கண்டு மகிழ்ந்திருக்க வேண்டும். மேகம், குன்றின் உச்சியிலும் சரிவுகளிலும் படர்வதைப் பார்த்து, 'மலை தவழும் மாலிருஞ்சோலை'யைப் பாடியிருக்கிறார்.

சிலம்பாறு என்ற நூபுர கங்கை முதலிய சுனைகள் அருவிக ளாய்ப் பொங்குவது கண்டு, 'மறுவில் வண்சுனைசூழ் மாலிருஞ் சோலை' என்று பாடுகிறார். இயற்கை யழகோடு மயில்கள் இசைந்து ஆடுவதையும் கண்டு மகிழ்ந்து, 'மயில்சேர் மாலிருஞ்சோலையைப் பாடியுள்ளார்.

ஆனால் இந்த அழகுகளி லெல்லாம் தம் உள்ளம் கவர்ந்த அழகனது சாயை படிந்திருப்பதையே காண்கிறார்.

வளர் இளம் பொழில்சூழ்
மாலிருஞ் சோலை

இவருக்கு,

வளர்ஒளி மாயோன்
மருவிய கோயில்

ஆகவே காட்சி வழங்குகிறது.

இயற்கையெல்லாம் ஈசுவர மயமாகவே காட்சி வழங்க நம்மாழ்வார் பாடுகிறார்,

புக(ழு)ம்நல் ஒருவன் என்கோ ?
பொருவில்சீர்ப் பூமி என்கோ ?
திகழும்தண் பரவை என்கோ ?
தீஎன்கோ? வாயு என்கோ ?
நிகழும்ஆ காசம் என்கோ?
நீள்சுடர் இரண்டும் என்கோ ?
இகழ்வில்இவ் வனைத்தும் என்கோ ?
கண்ணனைக் கூவு மாறே ?

[ஒருவன் - ஒப்பற்றவன். என்கோ - என்பேனோ? பொருவில் - ஒப்பில்லாத. சீர் - பொறுமை முதலிய சிறப்புக்களை யுடைய. தண் பரவை - குளிர்ச்சியுள்ள கடல். நீள்சுடர் - சந்திர சூரியர்கள்.]

நிலம், கடல், காற்று, ஆகாசம், சந்திர சூரியர்கள் ஆகிய இயற்கைப் பொருள்களில் தம் இஷ்டமூர்த்தியைக் காண்பவர், 'ஒன்றும் ஒழியாமல் இவையெல்லாம் என்பேனோ என் கண்ணனை என்று கூறி முடிப்பதைக் கேளுங்கள்.

## தானும் அவனே !

இதுபோன்ற வேறொரு வகை உணர்ச்சியை, இதய அநுபவத்தைக் காதல் - துறையிலும் காண்கிறோம்?

கடல்ஞாலம் செய்தேனும் யானே யென்னும்;
கடல்ஞாலம் ஆவேனும் யானே யென்னும்
கடல்ஞாலம் கொண்டேனும் யானே யென்னும்
கடல்ஞாலம் கீண்டேனும் யானே யென்னும்;
கடல்ஞாலம் உண்டேனும் யானே யென்னும்;
கடல்ஞாலத்(து) ஈசன்வந் தேறக் கொலோ?
கடல்ஞாலத் தீர்க்குஇவை என்சொல்லு கேன்
கடல்ஞாலத்து என்மகள் கற்கின் றவே?

[கடல் ஞாலம் - கடல் சூழ்ந்த உலகம். கொண்டேனும் - வாங்கிக்கொண்ட நானும். கீண்டேனும் - தோண்டி எடுத்த நானும். கடல் ஞாலத்து ஈசன் - உலகம் அனைத்துக்கும் இறைவன். ஏறக் கொலோ - இவள்மீது ஆவேசித்தானோ? கடல் ஞாலத்தீர்க்கு – கடல் சூழ்ந்த உலகத்தில் வசிக்கும் உங்களுக்கு. சொல்லுகேன் - சொல்லுவேன். கற்கின்றவே - சொல்லக் கற்றுள்ள சொற்களை.]

நம்மாழ்வார் ஆகிய காதலி தன் ஆற்றாமையைப் போக்கிக் கொள்ளும் பொருட்டு, இறைவனது செயல்களைத் தானே நடத்திப் பொழுது போக்குகிறாள். இப்படி நடக்கத் தொடங்கவே, ஆழ்வார் - நாயகியின் பேச்சும் அபிநயமும் இஷ்ட தெய்வத்தின் பேச்சும் அபிநயமும் ஆகின்றன.

இதை நடிப்புத் திறன் அல்லது தியானத்தின் பலன் என்று அறிந்துகொள்ளாத தாய், இறைவனது ஆவேசம் என்று மயங்கிப் பிறரிடம் கூறுவதாக அமைந்திருக்கிறது இப் பாசுரம். தியானிப்பவன் தன்னை இறைவனாக உணர்ந்துகொள்ளும் நிலையை உயர்ந்த சமாதிநிலை என்று யோகநூலார் கூறுவர்.

பக்திக் காதலாலும் இத்தகைய நிலை ஏற்படுவது உண்டு. நம்மாழ்வார்மீது தாம் கொண்ட பக்திக் காதலால் சீடரான மதுரகவிகளும் தம்மையே நம்மாழ்வாராக உணர்ந்துகொண்டு, தம்மைப் புகழ்ந்து தம்மைத் தாமே பூசித்துப் பின்னைத் தெளிந்தார் என்று தெரிந்துகொண் டிருக்கிறோமல்லவா?

## காதல் நாடகத்தில் பிரபன்னன் இதயம்

**தா**ய் சொல்லும் பாசுரமாக அமைந்திருக்கும் வேறொரு காதற் பாசுரத்தையும் பார்க்கலாம்:

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்;
கண்ணநீர் கைகளால் இறைக்கும்;
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும்;
தாமரைக் கண்என்றே தளரும்;
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு' என்னும்;
இருநிலம் கைதுழா விருக்கும்:
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத்து என்செய்கின் றாயே!

[கங்குலும் - இரவிலும். கண்ண நீர் - கண்ணீர். இறைக்கும் - இறைக்கின்ருள். எங்ஙனே தரிக்கேன் - எவ்வாறு பொறுத்திருக்க முடியும். என்னும் - என்று சொல்லுகிருர். இரு நிலம் - பெரிய பூமியை, கைதுழாவிருக்கும் - கையால் தடவிச் சும்மா இருக்கிருள். செங்கயல் பாய்நீர் - சிவந்த கயல் மீன்கள் பாய்கின்ற நீரையுடைய. திருவரங்கத்தாய் - திருவரங்கத்தில் கோயில் கொண்டிருக்கும் பெருமானே. இவள் திறத்து - இவள் விஷயமாக. என் செய்கின்ருய் - என்ன செய்யப்போகிருய் ?]

சிவந்த கயல்மீன்கள் பாயும் நீர்வளமும் அதற்கிசைந்த சோலைவளம் முதலியனவும் கண்டு, அந்த வளங்களிலும் அழகுகளிலும் அழகிய மணவாளப் பெருமானின் மேனியழகையும் குணவளத்தையும் காண்கிருர் நம்மாழ்வார். இந்த அழகுக் காதலிலே பக்தர் காதலியின் நிலையை அடைந்துவிடுகிருர்! இவரது உள் மனம் காதலியாகப் புறமனம் தாயாகிக் காதலியின் அநுபவங்களைப் பாடி வைத்திருக்கிறது.

'உலகத்தார் உறங்கும் இரவிலும் என் மகள் உறங்கவில்லை; காதலிகள் களைத்து உறங்கும் பகலிலும் உறக்கத்தை அறியாதவளாக இருக்கிருளே!' என்கிருள் தாய். எனவே, துயரத்தை உறக்கத்தாலும் மறக்க முடியாதவளாக இருக்கிருளாம்.

பிரிவுத் துயரைப் பொறுக்க முடியாத நிலையில் கண்ணீர் பொங்குகிறது. உள்ளத்திலே வெள்ளமிடும் சோகத்திற்கு அறிகுறியான இந்தக் கண்ணீரையும், 'அவன் வரும்போது இடையூருகக் கூடாது' என்று மறைத்துக்கொள்ளப் பார்க்கிருளாம். கடலைக் கையால் இறைப்பதுபோல் சோகத்தையும் இறைத்துவிடப் பார்க்கிருள் என்பது தாயின் வாக்கு.

இந்த நிலையில், 'சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பும்' என்பது ஆழ்வார் அருள்மொழி. தன் கண்ணீருக்கு இரங்கி அவன் வருவான் என்று கருதியவள், 'சங்கு சக்கரங்கள் ஏந்தி வருவாய்' என்று சொல்ல எண்ணி அதை முடியச் சொல்ல இயலாமையால், 'சங்குசக்கரங்கள்' என்று மட்டும் சொல்லிக் கைகூப்பித் தன் மீதிக் கருத்தை வெளியிடுகிருளாம்.

அவன் வந்தால் தன்னைக் குளிர நோக்குவா னல்லவா? அந்தப் பார்வையின் குளிர்ச்சியையும் அழகையும் நினைத்து, 'தாமரைக் கண்'

என்கிறாள். அந்தக் கண்களைக் காணாததால், 'தாமரைக் கண்' என்றே தளர்கிறாள்.

'ஏன் இந்தத் தளர்ச்சி? நான் வரும்வரை நீ ஆறியிருக்க லாகாதோ?' என்று காதலன் கேட்பதுபோல் பாவித்துக் கொண்டு,

'எங்ஙனே தரிக்கேன்
உன்னைவிட்டு?'

என்று சொல்லுகிறாளாம்.

பிரிந்த துயரை உறக்கத்தாலோ அல்லது வேறொரு உபாயத்தாலோ மாற்றவும் முடியாது. அப்படி மாற்றிக்கொள்ளவும் விரும்பவில்லை என்பது காதலியின் நிலை. இந் நிலையிலும் காதலன் வரக் காணாமையால் பூமியைக் கையால் தடவுகிறாளாம்; அதற்கும் சக்தியற்றபோது சும்மா இருக்கிறாளாம்.

இந்த நிலையைத் தலைவனிடம் தெரிவித்துக்கொண் டிருக்கும் தாய், 'இது வாயால் சொல்லவொண்ணாத நிலை; பார்த்தே தெரிந்து கொள்ள வேண்டிய நிலை' என்ற குறிப்புடன். 'இந்த என் பெண் விஷயமாக நீ என்னதான் செய்யப் போகிறாய், அப்பா? துயரத்தைத் தீர்க்க நினைக்கிறாயோ? அல்லது அதிகப்படுத்தப் பார்க்கிறாயோ?' என்று கேட்கிறாள்.

இக்காதல் நாடகத்திலே, 'இறைவா நீ துயரம் களைந்தாலும் சரி; களையாது ஒழிந்தாலும் சரி; உன்னைத் தவிர எனக்கு வேறு கதியில்லை' என்ற பரம பக்தனுடைய—பிரபன்னனுடைய—இதயத் துடிப்பைக் காண்கிறோம்.

தூதுசெய் கண்கள்கொண்(டு) ஒன்றுபேசித்
தூமொழி இசைகள்கொண்(டு) ஒன்றுநோக்கி,
பேதுறு முகம்செய்து நொந்துநொந்து
பேதைநெஞ்(சு) அறஅறப் பாடும்பாட்டை
யாதும்ஒன்(று) அறிகிலம், அம்ம! அம்ம!
மாலையும் வந்தது; மாயன்வாரான்!

என்ற பாட்டிலே காணும் இதயத் துடிப்பிலும் பிரபன்னனுடைய பரம பக்திநிலையைக் காண்கிறோம்,

'மாலையும் வந்தது; மாயன் வாரான்!' என்ற இந்தப் பாட்டில் விரிந்துகொண்டே போகின்ற ஒரு சிந்தனைப் பாதையைப் பார்க்கின்றோம். ஓசை நயத்திற்கோ குறைவில்லை. ஒவ்வொரு சொல்லி

லும் சோகம் கலந்த இன்பம் தோன்றுகின்றது. ''மாலையும் வந்தது; மாயன் வரான்!'' என்ற சொற்றொடரில் ஒரு தொலையாத ஏக்கம் எழுகின்றது. 'அந்தத் துன்ப ஓலம் காலக்கூடத்தில் எப்பொழுதும் ஒலிக்கும்' என்று ஒரு நவீன ரசிகர் கூறியுள்ளார்.

## 'இன்தமிழ் பாடிய ஈசன்'

இதே மாயன் முதல் முறை செய்த அருளே எக்காலத்துக்கும் போதிய தாகும்படி என்னை உய்விக்கச் செய்தான்' என்கிறார் நம் மாழ்வார். அப்படியும் அவன் திருப்தியடையாமல் கழிகின்ற கால மெல்லாம் நாள்தோறும் மேலும் மேலும் அருள் புரிந்த வண்ணமா யிருக்கிறானும். என்னைத் தன்னாக்கி (தன்னோடு ஒத்த ஞான சக்திகளை உடையவன் ஆக்கி) என்னால் தன்னை இன்தமிழ் பாடி'னான் என் கிறார்.

'அவன் மூலமாகச் சக்திபெற்ற என்னால் மனம் வாக்குகளுக்கு எட்டாத தன்னை இனிய தமிழால் பாடிக்கொண்டான்; அதுதான் என் பாசுரம்' என்பது நம்மாழ்வார் வாக்கு. இப்படி, 'இன்தமிழ் பாடிய ஈசன்' என்று தம் இஷ்ட மூர்த்தியை இவர் குறிப்பிடுகிறார்.

ஆழ்வாரின் இந்தத் தமிழ்ப் பாசுரங்களில் இவரது வாழ்க்கைக் காதலைக் காண்கிறோம்: வாழ்க்கைச் சித்திரத்தையும் காண்கிறோம். இவரது வாழ்க்கையின் அம்சங்க ளெல்லாம் ஒன்றுபட்டு இசைந்து ஒரே லட்சியத்தை நோக்கிச் செல்லுகின்றன. வாழ்க்கையை இப்படி நடத்தும் கலை இவருக்குக் 'கல்லாக் கலை'யாகவே—ஓதாது உணர்ந்த உயர் ஞானமாகவே—இறையருளால் கிடைத்திருக்க வேண்டும் என்பதற்கு இவர் பாசுரங்களே சான்று தருகின்றன.

இந்த ஆழ்வாரும் மக்களுள் ஒருவரே என்றும் இறைவனால் மெய்யுணர்வும் பக்தியும் அருளப்பெற்றவர் என்றும் வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளை கூறியுள்ளார். ஆழ்வாரை அவதாரபுருஷராகப் பிறர் கூறியிருப்பன வெல்லாம் இவர்தம் பெருமை நோக்கிக் கூறப்பட்டன என்பது பெரியவாச்சான்பிள்ளை யின் கருத்து.

இவருக்கு இறைவன் அருள் செய்தது எப்படித் தோன்று கிறது என்பதையும் வியாக்கியான சக்கரவர்த்தி குறிப்பிடுகிறார். 'அராஜகமான தேசத்திலே ஆனையைக் கண்ணைக் கட்டி விட்டால்

ஆனை எடுத்தவன் ராஜாவாமாப் போலே, எம்பெருமான் கடாட்சித் தார் ஒருவராம் இத்தனை.'

இறைவன் திருவருளாலேயே நம்மாழ்வார் அவனிடத்து அன்பும் மெய்யுணர்வும் (மயர்வறு மதிநலம்) பெற்றூர்; மிக்க இளம் பருவத்திலேயே பெற்றூர் என்பதற்கு,

அறியாக் காலத்துள்ளே
அடிமைக்கண் அன்புசெய்வித்(து)
அறியா மாமாயத்(து)
அடியேனை வைத்தாயால்

[அடிமைக்கண் - கைங்கரியத்தினிடம்]

என்ற ஆழ்வார் வாக்கும் தக்க சான்று தருகிறது.

இந்த ஆழ்வாரின் பாசுரங்களில் பாகவத தர்மம் என்ற ஸ்ரீ வைஷ்ணவத்தின் மூலக்கருத்து, மூலகீதம் இசைக்கக் கேட் கிரோம். வியாக்கியானங்களைத் துணையாகக் கொண்டு ஒவ்வொரு பக்தனும் இந்த மூலத் தொனியைத் தானுகவே கண்டுபிடித்துக் கொள்வது நலமாகும்.

ஹிந்துமதத்திற்கு மூல புருஷர்கள் வேதரிஷிகள் என்ருல், நம்மாழ்வாரையே ஸ்ரீ வைஷ்ணவத்தின் மூலபுருஷர் என்று கூறுவது உண்டு. காலத்தால் பிற்பட்டவரை இப்படிச் சிறப்பித்துப் பேசுவ தற்கு இவர்தம் உண்மைச் சிறப்பே காரணமாகும். 'இன்தமிழ் பாடிய ஈசன்' தலைசிறந்த இத்தமிழர் பெருமானுக்குச் செய்த சிறப்பே இவரது உண்மைச் சிறப்பின் உயிர்நிலை.

# 16. சீடரின் காதல் - முரசு

நம்மாழ்வாரின் வாழ்க்கை - இசை அகில சிருஷ்டியின் அடிப் படை - இசையுடன் ஒத்து ஒலித்திருக்க வேண்டும். அந்த இசையை இவரது பாடல்களிலும் நாம் லயித்திருக்கும்போது கேட்க முடிகிறது. இந்த இசையை இவரது அருமைச் சீடரான மதுரகவி ஆழ்வார் மிகவும் தெளிவாக உணர்ந்து அநுபவித்திருக்க வேண்டு மல்லவா ?

'நம்மாழ்வாரைத் தவிர வேருெரு விஷயத்தையும் அறியேன் !' என்ற நிலையில் வாழ்க்கையைக் குருவுக்கே அர்ப்பணித்தவர் மதுர கவிகள்.

எல்லாரும் இன்புற்
　　றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறென்(று)
　　அறியேன் பராபரமே

என்று கூறிய சிவநேசரைப்போல், ஆழ்வாரின் பிரபந்தங்களை இசைப்பது ஒன்றையே பேரின்பமாகக் கொண்டிருந்தார் மதுர கவிகள்.

குருவையே தெய்வமாகக் கொண்டவர் மதுரகவிகள்;

தேவுமற்(று) அறியேன் குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே

[தேவு - தெய்வம். குருகூர்நம்பி - நம்மாழ்வார்.]

என்பது மதுரகவியாழ்வார் வாக்கு.

வைதிகர்கள் தமது செயலைப் புன்மையாகக் கருதுவர் என்பது காரணமாகவே நம்மாழ்வார் தமக்குத் தலைவர் என்கிறுர் மதுர கவிகள்.

நன்மையால் மிக்க நான்மறை யாளர்கள்
புன்மை யாகக் கருதுவர் ஆதலின்
அன்னையாய் அத்தனுய், என்னை ஆண்டிடும்
தன்மை யான்சட கோபன்என் நம்பியே !

தமது ஞானபக்திக்குத் தாயும் தந்தையும் சடகோபரே என்று கூறும் மதுரகவிகள்,

எண்திசையும் அறிய இயம்புகேன்
ஒண்தமிழ்ச் சடகோபன் அருளையே

என்று, தமக்கு அருள் செய்த ஆழ்வாரின் வாக்கை எட்டுத் திக்கில் உள்ளவர்களும் கேட்டுப் பேரின்பம் அடைய வேண்டுமென்று ஆசைப்படுகிறார்.

பதினொரு பாசுரங்களாகிய, 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தம், மதுரகவிகள் தமது இதயப் பேராசையைக் கொட்டி முழக்கும் வீரமுரசு, காதல் - முரசு. இவரையும் சேர்த்து ஆழ்வார்கள் பன்னிருவர் என்பர். இவரது இந்தப் பதினொரு பாசுரங்களும் நாலாயிரப் பிரபந்தத்தில் ஓர் இன்றியமையாத பகுதியாகச் சேர்க்கப் பட்டுள்ளன.

# 17. முத்துக் குவியல்

## அருளே உபாயம்

உயர்(வு) அற உயர்நலம்
உடையவன் யவன்அவன்,
மயர்(வு) அற அமரர்கள்
அருளினன் யவன்அவன்,
அயர்(வு) அறும் அமரர்கள்
அதிபதி யவன்அவன்
துயர்அறு சுடர்அடி
தொழு(து)எழு,என் மனனே !

—(திருவாய்மொழி—முதலாவது பாசுரம்)

[உயர்வு அற - மற்றையோர் உயர்வு முழுவதும் இல்லையென்று சொல்லும்படி. உயர் நலம் - மேலே மேலே உயர்ந்துகொண்டே செல்லும் நற்குணங்கள். மயர்வு அற - அறிவின்மை யாவும் நீங்க. அயர்வு அறும் - மறதியென்பது சிறிதும் இல்லாத. அமரர்கள் - பரமபதத்திலுள்ள நித்திய சூரிகள். யவன் - யாவன் என்ற சொல்லின் விகாரம். துயர் அறு - எல்லாத் துயரங்களையும் நீக்குகிற. மனனே - மனமே.]

'சுடர் அடி தொழுது எழு': இறைவன் திருவடிகளிலே நித்தியமான பணிபுரிந்து உய்வு பெறுவதற்கு வாராய் என்பது பொருள். இறைவன் திருவடிகளில் தலைசாய்த்துப் பிழைக்கும் பிரபன்னர்கள் அவன் உகந்த பணிகளையே புரிந்துகொண் டிருப்பர். இந்தக் கைங்கரியம் என்ற பாதைக்கு, மரணமும் குறுக்குச் சுவரன்று. எனவே பாகவதர்களுக்குக் கைங்கரியம் நித்திய கைங்கரிய மாகும்.

நமக்கு விரோதி, 'மயர்வு' என்ற அஞ்ஞானம். இந்த மயர்வு இல்லாத மதிநலம் பெறுவதற்கு அவன் அருளே உபாயம். இறைவனது குணங்ளில் ஈடுபட்டு, அவன் உகந்த தொண்டு புரிவதே வாழ்க்கையின் பயன்.

### அகக் கோயிலும் புறக் கோயிலும்

கண்ணுள்நின்(று) அகலான்;
கருத்தின்கண் பெரியன்;
எண்ணில்நுண் பொருள்; ஏழ்
இசையின் சுவைதானே;
வண்ணநன் மணிமா
டங்கள்சூழ் திருப்பேரான்
திண்ணம்என் மனத்துப்
புகுந்தான், செறிந்(து)இன்றே

[அகலான்-நீங்கமாட்டான். கருத்தின்கண் - கருத்தினுள்ளே. எண்ணில் - எண்ணிப் பார்த்தால்; ஆராய்ந்து பார்த்தால். ஏழ் இசையின் சுவைதானே - அவனே ஏழு இசைகளின் சுவையாகவும் இருக்கிறான். வண்ண நன் மணி மாடங்கள் - அழகிய நல்ல ரத்தினங்கள் அழுத்திய மாளிகைகள். திருப்பேரான் - திருப்பேர் நகரில் கோயில்கொண்டிருப்பவன். திண்ணம் - திண்ணமாக; நிச்சயமாக. மனத்துப் புகுந்தான். செறிந்து - நெருங்கி.]

இறைவன் கருத்திலும் இருக்கிறான், கண்ணிலும் இருக்கிறான் என்கிறார் நம்மாழ்வார். கலையிலும் கடவுள் இருக்கிறான் என்பர்.

கண்ணில் இருக்கிறான்; எனினும் கண்ணால் பார்க்க முடியவதில்லை. கருத்தில் இருக்கிறான்; எனினும் கருத முடியவில்லை.

அவன் கண்ணைவிட்டுப் போவதே இல்லை. கருத்திலோ பெரியனாகவும் இருக்கிறான்; நுண்பொருளாகவும் இருக்கிறான். ஆராய்ந்து பார்க்கப் பார்க்க மேலும் மேலும் நுண்பொருளாகி மறைந்து உறைகின்றான். இது தத்துவ சாஸ்திர நிலை.

கடவுளே இசையின் சுவையாகவும் இருக்கிறான் என்பது கூர்ந்து நோக்கத் தக்கது. இப்படி அநுபவிப்பது பக்தர் நிலை.

### ஆஸ்திக நாஸ்திக சமரசம்

ஆண்அல்லன், பெண்அல்லன்,
அல்லா அலியும் அல்லன்;
காணலும் ஆகான்;
உளன்அல்லன், இல்லைஅல்லன்;

பேணுங்கால் பேணும்
உருவாகும், அல்லனுமாம் :
கோணை பெரிதுடைத்(து) எம்
பெம்மானைக் கூறுதலே!

[காணலும் ஆகான் - காணப்படாதவனாக இருக்கிறான். பேணுங்கால் - விரும்பி வேண்டும்போது. பேணும் உருவாகும் - அவரவர் விரும்பி வேண்டுகிற அந்த அந்த வடிவோடு வந்து தோன்றுவான். அல்லனும் ஆம் - அன்பில்லாதவருக்கு நெருங்க அரியவனாகவும் இருப்பான். கோணை பெரிது உடைத்து - மிகவும் கஷ்டமாயிருக்கிறது. எம் பெம்மானை - எம்பெருமானை.]

ஆணைப்போலும், பெண்ணைப்போலும் அலியைப்போலும் பகவான் இருப்பவன் அல்லன் என்று கூறும் நம்மாழ்வார் புருஷோத்தமனாகவே இறைவனை வழிபடுகிறார். உலகத்திலே நாம் காணும் ஆண்களைப்போல் இறைவன் இருப்பவன் அல்லன் என்பது குறிப்பு.

இந்தப் பாசுரத்திலே இறைவனை, 'உளன் அல்லன், இல்லை அல்லன்' என்பது முரண்படக் கூறுவதுபோலக் காண்கிறதல்லவா? உண்மையில் இங்கே முரண்பாடு இல்லை. தன்னை அடையாதவர்க்கு இறைவன் உள்ளவனாகான்; அன்புடன் அடைபவர்க்கு இல்லாதவனாகான் என்பது கருத்து,

'உளன், என உணர்ந்தார்க்கு உளையும் ஆயினை' என்று கூறியிருக்கும் ஒரு புலவரே 'இலன் என இகழ்ந்தார்க்கு இல்லையும் ஆயினை' என்று கூறியிருப்பதையும் காண்கிறோம்.

### சடகோபரின் சமரசம்

முனியே! நான்முகனே! முக்கண்
அப்பா! என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமா
ணிக்கமே! என்கள்வா!
தனியேன் ஆருயிரே! என்
தலைமிசையாய் வந்திட்டு
இனிநான்போ கல்ஒட்டேன்; ஒன்றும்
மாயம்செய் யேல்எனையே

[முனியே - முனிவனே; மனனத்தை உடையவனே. நான் முகனே - பிரமதேவனே. முக்கண் அப்பா - சிவபெருமானே. என் கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே- - எனக்கு உரிய கனி போன்ற வாயையும் தாமரை மலர்போன்ற கண்ணையும் உடைய கரிய மாணிக்கம்போன்ற வடிவுடையவனே. பொல்லாக் கரு மாணிக்கம் - துளையாத ஒரு கரிய மாணிக்கம். என் கள்வா - என் உள்ளம் கவர்ந்த கள்வனே. ஆருயிரே - அருமையான உயிர் போன்றவனே. என் தலைமிசையாய் வந்திட்டு - என் தலைமீது திரு வடிகளை வரும்படி நீட்டிவைத்து. இனி நான் போகல் ஒட்டேன் - முன்புபோல் நீ என்னை விட்டுப்போக இசையேன். ஒன்றும் மாயம் செய்யேல் - சிறிதும் மயக்கத்துக்கு உள்ளாக்காதே.]

முனியே !: உலகத்தைப் படைக்கும் சங்கற்பமான மனனத்தை உடையவன் இறைவன் என்பது குறிப்பு.

இந்தச் சங்கற்ப மனனத்திற்குப் பின் படைப்புக் கடவுளாகிப் படைக்கிறான். கண் சுமந்த நெற்றிக் கடவுளாக உலகத்தை அழிக் கிறான் - அதாவது விடுவிக்கிறானும்.

பக்தர்களை - முக்கியமாகப் பிரபந்நர்களை - இறைவன் தன் அழகாலே கவர்ந்து அவர்கள் உள்ளத்தைத் திருடிக்கொள்கிறானும். எனவே, 'என் கள்வா !' என்கிறார்.

### புலவர்களுக்கு ஓர் உபதேசம்

விம்மின் புலவீர்! நும் மெய்வருத்
திக்கைசெய்(து) உய்ம்மினோ!
இம்மன் உலகினில் செல்வர்இப்
போ(து)இல் லைநோக்கினோம்;
நும்இன் கவிகொண்டு நும்நும்இட்
டாதெய் வம்ஏத்தினால்,
செம்மின் சுடர்முடி என்திரு
மாலுக்குச் சேருமே

[வம்மின் - வாருங்கள். புலவீர் - புலவர்களே. நும் மெய் வருத்தி - உங்கள் உடம்பை வருத்தி. கைசெய்து - கைத்தொழில் செய்து. உய்ம்மின் - பிழையுங்கள். மன் உலகில் - நிலையான இந்த உலகத்தில். நும் இன் கவிகொண்டு - உமது இனிய கவி

களைக் கொண்டு. நும் நும் இட்டா தெய்வம் ஏத்தினல் - நீங்கள் விரும்பும் இஷ்டதெய்வங்களைப் புகழ்ந்து பாடினல். செம்மின் சுடர் முடி - செம்மையான பேரொளியை வீசும் திருமுடி.]

கடவுளுக்கு இதயமும் தொழிலுக்குக் கையுமாக வாழச் சொல்லுகிறர். புலவர்கள் செல்வர்களைப் பாடிப் பிழைப்பது தவறு என்பது கருத்து.

இஷ்ட தெய்வத்தைப் பாடிக்கொண் டிருந்தால், வயிறு பிழைக்க வழி வேண்டாமோ? இதற்கு விடையாகத்தான், 'நீங்கள் உடம்பை வருத்திக் கைத்தொழில் செய்து, மானமுடன் பிழையுங்கள்' என்கிறர் ஆழ்வார்.

'இந்த உலகில் இப்போது செல்வர் இல்லை. உங்கள் நன்மை கருதி ஆராய்ந்து பார்த்தோம்' என்கிறர். 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே' என்ற கொள்கையுடைய பக்தர்களுக்கு இறைவனே செல்வனுவான்.

'நுண்ணுணர்வு இன்மை வறுமை; அஃது உடைமை பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்' என்பது ஒரு ஜைன முனிவர் வாக்கு. நம்மாழ்வாரோ பக்தியின்மையே வறுமை என்கிறர். பக்திச் செல்வமே தனிப்பெருஞ் செல்வம் என்கிறர்.

## சமரச அநுபவம்

யானும் தானய் ஒழிந்தானை,
யாதும் எவர்க்கும் முன்னேனை,
தானும் சிவனும் பிரமனும்
ஆகிப் பணைத்த தனிமுதலை,
தேனும் பாலும் கன்னலும்
அமுதும் ஆகித் தித்தித்(து)என்
ஊனில் உயிரில் உணர்வினில்
நின்ற ஒன்றை உணர்ந்தேனே!

[யானும் தானய் - என்னையும் தானகக் கொண்டு. முன்னேனை - முன் தோன்றியவனை, தானும் - திருமாலாகிய தானும். பணைத்த தனிமுதலை - பருத்த ஒப்பற்ற முதல்வனை. கன்னலும் - கரும்பும். ஊனில் - உடம்பில்.]

நம்மாழ்வாரின் அநுபூதியில் ஒரு காட்சி இது. எல்லாவற்றுக்கும் எவர்க்கும் முன் தோன்றிய திருமாலே சிவனாகவும் பிரமனாகவும் காட்சி வழங்குகிறான். ஆழ்வாரையும் தானாகக் கொண்டு தரிசனம் அளிக்கிறான்.

இவர் உணர்விலே கலந்து, உயிரிலும் கலந்து உடம்பிலும் கலந்து தித்திக்கும் ஒரு பொருளாகப் பரம்பொருளை இவர் உணர்ந்து இன்புறுகின்றார்.

இந்த இன்ப அநுபவத்தைத்தான்; 'தேனும் பாலும் கன்னலும் ஆகித் தித்தித்து' என்று வெளியிடப் பார்க்கிறார்.

இந்தத் தெய்வக் காட்சியை, இந்தத் தெய்வ உணர்வை,

ஊனில் உயிரில் உணர்வினில்
நின்ற ஒன்றை உணர்ந்தேனே !

என்று வெளியிட்டு, 'நீங்களும் இந்த அநுபவத்தில் பங்குகொள்ள முன்வாருங்கள்' என்று பிறருக்கும் உபதேசம் செய்கிறார்.

### பக்தகுலமே பெருங்குலம்

குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழ்இழிந்(து) எத்தனை
நலந்தான் இலாதசண் டாளசண்
டாளர்கள் ஆகிலும்,
வலந்தாங்கு சக்கரத்(து) அண்ணல்
மணிவண்ணற்கு ஆள்என்றுஉள்
கலந்தார் அடியார் தம்அடி
யார்எம் அடிகளே !

[கீழ் இழிந்து - கீழாக இறங்கி. சண்டாள சண்டாளர்கள் ஆகிலும் - புலையருக்குள்ளே புலையராயினும். வலம் . வலிமை. சக்கரத்து அண்ணல் மணி வண்ணற்கு - சக்கரம் ஏந்திய பெரியோனாகிய மணிவண்ணனுக்கு; மணிவண்ணன் - நீல ரத்தின சோபையுள்ள அழகன். அடியார் தம் அடியார்-அடியார்க்கு அடியார். எம் அடிகளே - எமக்குத் தலைவ ராவார்,]

நாற்பாற் குலத்திற்கும் மேற்பட்டதொரு குலத்தைச் சார்ந்தவர்கள் பக்தர்கள் என்பது குறிப்பு. பக்தர்களிடையே ஏற்றத் தாழ்ச்சி

இல்லை. பக்தர்களுடைய சாதியைக் குறிப்பிடுவது பாகவத அபசார மாகும்.

நாராயண நாமம், 'குலம் தரும்' என்றார் திருமாங்கையாழ்வார். பிறப்பல்ல, பக்தி என்ற சிறப்பே உண்மையான குலத்தைத் தரும் என்பது கருத்து. எனவே தொண்டக்குலம் தொழுகுலமாகும்.

வேளிர் மரபினரான நம்மாழ்வாரைத் 'தத்துவத்தின் முடிவு கண்ட சதுமறைப் புரோகிதன்' என்றார் பாரதம் பாடிய வில்லி புத்தூரார், இந்த ஆழ்வாரோ, 'சண்டாள சண்டாளர்களாயினும் அடியவரே எனக்குத் தலைவர்!' என்கிறார்.

'தானே ஆகி நிறைந்தானே'

செஞ்சொற் கவிகாள்! உயிர்காத்(து) ஆட்
செய்ம்மின்! திருமா லிருஞ்சோலை
வஞ்சக் கள்வன் மாமாயன்
மாயக் கவியாய் வந்(து),என்
நெஞ்சும் உயிரும் உள்கலந்து,
நின்றார் அறியா வண்ணம்,என்
நெஞ்சும் உயிரும் அவைஉண்டு,
தானே ஆகி நிறைந்தானே!

[செஞ்சொற்கவிகாள் - செம்மையான சொற்களாலும் சொற்றொடர்களாலும் கவிபாட வல்லவர்களே. உயிர்காத்து - உங்கள் உயிரைக் காத்துக்கொண்டு. ஆட்செய்ம்மின் - தொண்டைச் செய்யுங்கள். வஞ்சக் கள்வன் - சிக்கிக் கொண்டவர்களுடைய உரிமைகளைப் பறிப்பதும் தெரியாதபடி வஞ்சகமாய்க் களவு செய்கிறவனாய். நின்றார் அறியா வண்ணம் - பக்கத்தில் நிற்பவர்களும் அறிந்து கொள்ளாதபடி.]

நம்மாழ்வாரின் விசேஷ பக்திதுயநுபவங்களில் ஒன்று இது. அநுபூதியின் சிகரங்களில் ஒன்று எனலாம்.

தம்முடைய உள்ளம், உணர்வு முதலியவற்றை யெல்லாம் பறிப்பதும் தெரியாமல் பறித்துக்கொண்டானும் இறைவன்.

அந்த வஞ்சக்களவுக்கு இசைய மயக்குவதற்காக மிக்க ஆச்சரியமான குணங்களும் செயல்களும் உடையவனாக வந்து சேர்ந்தானும். என்வே, 'மாமாயன்' என்கிறார்.

கவிபாடச் செய்வது என்னும் வெளிக்காரணத்தைக் கொண்டு, மாயமாக வந்து, இவர் நெஞ்சோடும் (உடம்போடும்) ஆத்மாவோடும் ஒன்ருகக் கலந்து நின்ருனும். பக்கத்தில் நிற்பாரும் அறியாதபடி இவர் நெஞ்சையும் உயிரையும் கவர்ந்து, தானே அநுபவிக்கத் தொடங்கிஞனும்.

'இப்படி நான் இருக்குமிடம் தேடிவந்து, இறைவன் என்னைப் பெற்ற பின்பு பரிபூரண ஞானன்' என்பது குறிப்பு. 'கவிகளே! அவன் வலையில் சிக்காதபடி பாடல் - தொண்டு புரியுங்கள்' என்று ஏதோ எச்சரிக்கை செய்வதுபோல் பேசுகிருர்.

### முடிச்சோதியும் அடிச்சோதியும்

முடிச்சோதி யாய்உனது
முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீநின்ற
தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச்சோதி ஆடையொடும்
பல்கலனுய் நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ?
திருமாலே கட்டுரையே

—(திருவாய்மொழி)

[படிச்சோதி - இயல்பாக வீசும் ஜோதி; நிலையாகவும் தகுதியாகவும் முறையாகவும் வீசும் ஒளி. ஆடை - (இங்கே) பீதாம்பரம் என்ற பொன்னுடை. பல கலனுய் - பல ஆபரணங்களாய். நின் - உன்னுடைய. பைம்பொன் கடிச்சோதி - பசும்பொன் போன்ற அழகிய திவ்ய அரையின் ஒளியழகு. கட்டுரையே - எடுத்துச் சொல்வாயாக; அருளிச் செய்வாயாக.]

'படி' என்பதற்குத் திருமேனி என்றும் பொருள் கொள்ளலாம்.

முடிச்சோதி யாய்உனது
முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீநின்ற
தாமரையாய் அலர்ந்ததுவோ?

என்பது அருமையான பொருள்புதைந்த கவிதைக்கு ஓர் உதாரணமாகும்.

முகமண்டலத்தின் ஜோதியே மேலே கிளர்ந்து, படர்ந்து, கிரீட ஜோதியாகத் தோன்றுகிறதோ என்பது ஒரு கேள்வி. ஸர்வலோக ஆட்சிக்கு அறிகுறியான கிரீடம் என்று ஒன்று தனியே வேண்டுமோ? முகச்சோதியே ஆட்சி செலுத்தாதோ ? - என்பது குறிப்பு.

திருவடியில் கண்வைத்ததும், 'பத்மபீடம்' என்று தனியே ஒன்று வேண்டுமோ?' என்று கேட்கிருர். 'கீழ் நோக்கிக் கிளர்ந்த திருவடியின் தேஜஸே போதும்; கீழே கீழே இறங்கி வந்து நம்மை ஆட்கொள்வதற்கு' என்பது குறிப்பு.

### பெண்ணின் பெருமயல்

(பித்தேறிய பக்தி மனம்)

மண்ணை இருந்து துழாவி,
'வாமனன் மண் இது' என்னும் ;
விண்ணைத் தொழு(து), அவன் மேவு
வைகுந்தம் என்றுகை காட்டும் ;
கண்ணைஉள் நீர்மல்க நின்று,
கடல்வண்ணன் என்னும் அன்னே ! என்
பெண்ணைப் பெருமயல் செய்தார்க்(கு)
என்செய்கேன் ? பெய்வளை யீரே !

[துழாவி - தடவிக்கொண்டு. அவன் மேவும் - அவன் பொருந்தி வசிக்கும். கண்ணை உள்நீர் மல்க - கண்ணைக் கண்ணீர் நிறைக்க. கடல் வண்ணன் - கடல்போல் தாபத்தைப் போக்கும் நிறத்தையுடைய திருமால். அன்னே - அம்மே : துக்கக் குறிப்பு. பெருமயல் - பெரும் பித்து. செய்தார்க்கு - செய்த காத லருக்கு. என் செய்கேன் - நான் என்ன செய்வேன். பெய்வளை யீரே - இடப்பெற்ற வளையையுடைய பெண்களே.]

காதலியின் நிலை குறித்துத் தாய் சொல்லும் பாசுரம் இது: பித்தேறிய பக்திமனம்தான் பெண் ; லௌகிக மனம் தாய்.

பெண்ணின் பெருமயல் கண்டு, தாய் பிற மாதர்களை நோக்கி, 'இப்படிப் பெருமயல் செய்தவர் விஷயமாக நான் என்ன செய்வது? அவனை வரச்செய்வேனு? இவளை ஆறியிருக்கச் செய்வேனு? நான் பொறுத்திருப்பேனு' ? என்று கேட்கிருள்.

மண்ணைப் பார்த்தாலும் அவன் நினைவுதான்; விண்ணைப் பார்த்தாலும் அவன் நினைவுதான். கடல் வண்ணனின் நினைவால் கண்ணீர் பெருகுகிறது. காதலியின் இந்த நிலை கண்டு தாய் இன்னது செய்வதென்று தெரியாமல் கண்ணீர் வடிக்கிறாள்.

'பெய்வளையீர்!' என்று அழைப்பதில், 'என் வளைபோல் அன்றிக் கழலாது நிற்கும் வளைகளுடன் இருக்கும் நீங்கள் கையில் வளை தங்குவதற்குச் செய்துகொண்டிருக்கும் உபாயத்தைச் சொல்லுங்கள் என்பது குறிப்பு.

### என்ன இரவு! என்ன காதல்!

ஊரெல்லாம் துஞ்சி,
 உலகெல்லாம் நள்ளிருளாய்,
நீரெல்லாம் தேறி, ஓர்
 நீள்இரவாய் நீண்டதால்;
பாரெல்லாம் உண்டநம்
 பாம்பணையான் வாரானால்!
ஆர்எல்லே! வல்வினையேன்
 ஆவிகாப் பார்இனியே?

[துஞ்சி - உறங்கி. நள்ளிருளாய் - இருள் செறிந்த நடுநிசியாகி. நீரெல்லாம் தேறி - நீரெல்லாம் அலையடங்கித் தெளிந்து. நீள் இரவாய் நீண்டதால் - பகல் என்ற கலப்பின்றி ஒரே நீண்ட இரவாகி எல்லையின்றி வளர்ந்துவிட்டது. பார் எல்லாம் - உலகங்களை யெல்லாம். பாம்பு அணையான் - சேஷசயன மூர்த்தியாகிய நாயகன். வாரானால் - வரவில்லையே. எல்லே - இது என்ன ஆச்சரியம். வல்வினையேன் - பெரும்பாவத்தை உடையேனாகிய எனது.]

ஆழ்வாரின் அநுபவப் பெருநெறியிலே ஒரு மைல் கல் இது.

'எனக்கு நன்மை சொல்வார் இல்லை; பேச்சுத் துணையாவரும் இல்லை; பழிசொல்லுவாரும் இல்லையே!' என்று சொல்லும்படி ஊரிலுள்ளார் அனைவரும் உறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கிறார்கள்.

கண்ணில் கண்ட ஒன்றைக் கொண்டாவது பொழுது போக்கலாம் என்பதற்கும் இடமின்றி எல்லாப் பொருள்களும் மறையும்படி

இருள் அடர்ந்த நடுநிசியாகக் காண்கிறதாம். ஒரே நீண்ட இரவாக வளர்ந்துகொண்டே யிருக்கிறதாம்.

நீரும் ஒலியடங்கி உறங்குவதுபோலக் காணப்படுகிறது காதலிக்கு. ''காதலன் வந்து முகம் காட்டவும் இல்லையே! என் உயிரைக் காப்பவர் பின்பு யார்?'' என்று கேட்கிருள்.

இந்தத் தத்தளிப்பிலே பிரபன்னனுடைய ஆத்ம தாபத்தையும் தாகத்தையும் காண்கிரோம்.

### பக்த லட்சணம்

மேகங்க ளோ! உரை யீர்,திரு
மால்திரு மேனிஒக்கும்
யோகங்கள் உங்களுக்(கு) எவ்வாறு
பெற்றீர்? உயிர்அளிப்பான்
மாகங்கள் எல்லாம் திரிந்து,நன்
னீர்கள் சுமந்து,நும்தம்
ஆகங்கள் நோவ வருத்தும்
தவமாம் இருள்பெற்றதே

—(திருவிருத்தம்)

[உயிர் அளிப்பான் - உயிர்களைக் காக்கும்பொருட்டு. மாகங்கள் எல்லாம் - ஆகாயமெல்லாம். நன்னீர்கள் சுமந்து - நல்ல நீரைச் சுமந்துகொண்டு. நும்தம் ஆகங்கள் - உங்கள் உடம்பு முழுதும். நோவ - வலியெடுக்கும்படி. வருத்தும் தவமாம் அருள் - வருத்துகின்ற தவம் செய்யும் அருளை. பெற்றதே - பெற்றதனுலேயே.]

பகவானது லட்சணம் பக்தனுக்கும் வந்துவிடுகிறதாம். பக்தனைப் பார்த்ததும், 'இந்த யோகம் இவனுக்கு எப்படி வந்தது?' என்ற அதிசயம் உண்டாகிறது. இந்தக் கேள்விக்கு விடை இப்பாசுரம்.

லோகோபகார ரூபமான கைங்கரியத்தில் ஈடுபடுவது பக்தன் நடையாடும் பெருமாளாகக் காட்சிதரக் காரணமாகும். 'அவன் உறங்கும் பெருமாள்; இவன் உலாவும் பெருமாள்' என்று உலகம் மதிக்க வாழும் பக்தனுக்குக் கைங்கரியந்தான் பரம புருஷார்த்தம்.

இந்தப் பாசுரத்தில் வரும் மேகங்கள் பக்தர்களுக்கு அறிகுறி. மேகத்தைத் திருமால் திருமேனியுடன் ஒப்பிட்டுப் பேசுகிறார்களல்லவா? அந்த யோகம் மேகங்களுக்கு வந்த காரணத்தை இங்கே ஆழ்வார் தெரிவிக்கிறார். பட்சபாதம் இல்லாமல் உயிர்களுக்குப் பணிபுரியவே மேகங்கள் திரிந்துகொண் டிருக்கின்றனவாம்.

ஒரு சிறுமி தன் அழகிய உடம்பு நோவக் குடத்தில் தண்ணீர் கொண்டு, தாகம் உள்ளவர்களுக்குக் கொடுப்பதுபோல் மேகங்கள் பணி புரிகின்றனவாம்.

## பக்தியே பேரின்பம்

ஒன்றுண்டு செங்கண்மால்! யான் உரைப்ப(து): உன்அடியார்க்(கு)
என்செய்வேன் என்றே இருத்திநீ! நின்புகழில்
வைகும்தன் சிந்தையிலும் மற்றினிதோ நீஅவர்க்கு
வைகுந்தம் என்றருளும் வான்

[செங்கண்மால் - சிவந்த கண்களையுடைய மகாவிஷ்ணுவே. என் - என்ன. செய்வன் - செய்வேன். இருத்தி - இருக்கிறாய். வைகும் - தங்கும். வான் - பரமபதம்.]

ஈசுவரன் தன் அடியார்களுக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்துகொண் டிருந்தும், 'இன்னும் என்ன செய்வோம்? என்ன செய்வோம்?' என்றே எண்ணிக்கொண் டிருக்கிறானும். அப்படிப் பட்ட புகழை எண்ணி யெண்ணி அதிலே ஊறிக்கிடக்கும் சிந்தை எவ்வளவு இனிமையானது!

இந்தச் சிந்தையைக் காட்டிலும் மோட்சந்தான் இனிதாகுமோ?' என்ற கேள்வியில் நம்மாழ்வாரின் சிந்தனைப் பெருநெறியைக் காண்கிறோம்.

கதியைப் பற்றிய கவலை பக்தனுக்கு வேண்டியதில்லை. 'மோட்சமோ நரகமோ, எதை அடைந்தாலும் அடையாவிட்டாலும் சரி; பகவானை நினைத்து, மகிழ்ந்துகொண் டிருப்பதே போதும். அவன் என் நெஞ்சில் நிலைபெற்றிருந்தால் அது ஒழிந்த யாதொன்றையும் விரும்பமாட்டேன்' என்பது பக்தியையே பேரின்பமாகக் காணும் பக்தர் மனநிலை.

## அன்பர் பெருவாழ்வு

உலகு படைத்(து) எந்தை அறைகழல்
சுடர்ப்பூந் தாமரை சூடுதற்(கு) அவா(வு)ஓர்

உயிர்உருகி உக்க நேரிய காதல்
அன்பில் இன்(பு)ஈந் தேறல் அமுத
வெள்ளத் தானும் சிறப்புவிட்டு, ஒருபொருட்டு
அசைவோர் அசைக; திருவொடு மருவிய
இயற்கை, மாயாப் பெருவிறல், உலகம்
மூன்றி னெடு,நல் வீடு பெறினும்.
கொள்வது எண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே.
—(திரு ஆசிரியம்)

[உலகு படைத்து உண்ட - உலகங்களை உண்டாக்கிப் பிரளய காலத்திலும் அவற்றை வயிற்றிலே வைத்து ரட்சித்த. எந்தை அறை கழல் சுடர்ப்பூந் தாமரை - என் தந்தையாகிய பகவானுடைய ஒலிக்கின்ற வீரக் கழல் அணிந்த திருவடிகள் என்னும் ஒளிவிடுகின்ற அழகிய தாமரைப்பூ. சூடுதற்கு அவாவு ஆர் உயிர் உருகி உக்க நேரிய - சூடுவதற்கு எழுந்த ஆசையினுல் நிறைந்த உயிரானது உருகிக் கரையும்படி நேர்ந்த. காதல் அன்பில் இன்பு ஈன் - பக்திக் காதலாகிய அன்புப் பெருக்கில் தோன்றி இன்பத்தைக் கொடுக்கிற. தேறல் அமுத வெள்ளத்தானும் - தேனுகிய அமுத வெள்ளத்தான் ஆகும். ஒரு பொருட்கு - அற்பமான ஏதேனும் ஒரு பொருளுக்கே. அசைவோர் அசைக - அலைகிறவர்கள் அலையட்டும். திருவொடு - செல்வத்தோடு, மருவிய - பொருந்தியிருக்கும். மாயாப் பெரு விறல் - அழியாத பெரு வலிமையும். உலகம் மூன்றினெடு - மூன்று உலகங்களுக்கும் தலைவனுக இருத்தலும். நல்வீடு - உத்தமமான மோட்ச பதவி. பெறினும் - ஆகிய இவற்றைப் பெறுவதாயிருந்தாலும். தெள்ளியோர் - தெளிந்த ஞானம் உள்ளவர்கள் குறிப்பு- (இங்கே) நோக்கம்.]

பக்திப் பேரின்பத்தில் மூழ்கியிருப்பதை விட்டு, மோட்சத்தையும் பெற்றுக்கொள்ளும் நோக்கம் மெய்ஞ்ஞானியரிடம் காணப்படுவதில்லை.

### பக்திப் பொன்யுகம்

கொன்(று)உயிர் உண்ணும் விசாதி,
பகை,பசி, தீயன எல்லாம்
நின்(று)இவ் உலகில் கடிவான்
நேமிப் பிரான்தமர் போந்தார்;

நன்(று)இசை பாடியும் துள்ளி
ஆடியும் ஞாலம் பரந்தார்;
சென்று தொழு(து)உய்ம்மின் தொண்டீர்!
சிந்தையைச் செந்நிறுத் தியே.

[விசாதி - வியாதி. நின்று இவ்வுலகில் - இவ்வுலகினின்றும். கடிவான் - நீக்கும்பொருட்டு; அடக்கும்பொருட்டு. நேமிப்பிரான் தமர் - சக்கரத்தை உடைய பகவானது அடியார். போந்தார் - இவ்வுலகில் தோன்றினர். நன்று - நன்றாக. ஞாலம் பரந்தார் - இந்த உலகத்திலே அவர்கள் பரவியிருக்கிறார்கள். தொழுது உய்ம்மின் - தொழுது கடைத்தேறுங்கள். தொண்டீர் - தொண்டர்களே. செந்நிறுத்தியே - செம்மை வழியில் நிறுத்தி.]

பாகவத தர்மம் பரவுவதால் உலகமெல்லாம் க்ஷேமம் அடையும் என்பது கருத்து. க்ஷேமம் என்றால் ஆரோக்கிய நிலை. உள்ளத்தைக் குணப்படுத்துவதுபோல் உடம்பையும் குணப்படுத்துகிறதாம் பக்தி.

பரமபதத்திலிருந்து இறைவனுடைய அடியார்கள் இறங்கி வந்து நோய், பசி முதலியவற்றைப் போக்கிவிடுவார்களாம். பகை ஒழியச் சமாதானத்தை நிலைநிறுத்துவார்களாம். தீயன எல்லாம் அழிந்து, பக்திப் பேரின்பமே எங்கும் சூழ்ந்து ததும்பிக்கொண்டிருக்குமாம்.

மனிதவர்க்கத்தை எதிர்நோக்கும் பொன்யுகம் குறித்து எத்தனையோ கனவுகளை மகாகவிகளும் தீர்க்கதரிசிகளும் பேரறிவாளர்களும் கண்டிருக்கிறார்கள். மக்களின் எதிர்கால மகோன்னத நிலையை 'ராமராஜ்ய'மாகக் கண்டது மகாத்மா காந்தியின் கனவு. பக்தர்களின் லட்சிய சமுதாயம் நம்மாழ்வாரின் ஆனந்தக் கனவு.

## புதுயுகக் காட்சி

கண்டோம் கண்டோம். கண்டோம்;
கண்ணுக்(கு) இனியன கண்டோம்!
தொண்டீர்! எல்லீரும் வாரீர்;
தொழுது தொழுதுநின்(று) ஆர்த்தும்;

வண்டார் தண்ணந் துழாயான்
மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்தான் பாடிநின் றாடிப்
பரந்து திரிகின் றனவே!

[தொண்டீர் - தொண்டர்களே. எல்லீரும் - நீங்கள் எல்லோரும். வாரீர் - வாருங்கள், ஆர்த்தும் - ஆரவாரம் செய்வோம். வண்டுஆர் - வண்டுகள் பொருந்தியிருக்கும். தண்ணந்துழாயான் - குளிர்ச்சியுள்ள துளசிமாலையை உடையவன். மண்மேல் - பூமியிலே.]

'கண்டோம், கண்டோம், கண்டோம்' என்ற குதூகலத்துடன் தாம் அகக்கண்ணால் கண்ட ஒரு புதுயுகக் காட்சியை நம்மாழ்வார் பாடுகிறார்.

பகவானுடைய 'பூதங்கள்' பூமியிலே பண்கள் பாடி நின்று, ஆடி, எங்கும் பரந்து திரியும் காட்சியைத் தாம் கண்டு,

கண்ணுக்(கு) இனியன
கண்டோம்!

என்கிறார்.

தாம் கண்டு இன்புறுவதை எல்லாத் தொண்டர்களும் கண்டு இன்புற வேண்டும் என்று பேரன்புடன் அவர்களையும், 'வந்து கூடுங்கள்!' என்று அழைக்கிறார். 'தொழுதவண்ணம் ஆனந்த ஆரவாரம் செய்யுங்கள்!' என்கிறார்.

பாகவத தர்மம் எங்கும் பரவுவதால் உலகம் ஆனந்தம் அடையும்; 'வைகுந்தமே மண்ணில் இறங்கி வந்துவிட்டதோ!' என்று குதூகலம் அடையும்படி மக்கள் ஆனந்தம் அடைவார்களாம்.

பக்தியுலகில் இது ஒரு புதுயுகக் காட்சி, 'இந்த யுகத்தை உருவாக்க எம்முடன் சேரவாரும் ஜகத்தீரே!' என்பது இந்த ஆழ்வாரின் அழைப்பு.

---

